# மனித உரிமைகள்

## ஒரு அடிப்படை நூல்

அர்ஜுன் தேவ்,
இந்திரா அர்ஜுன் தேவ்,
சுப்தா தாஸ்

தமிழாக்கம்
நாக. வேணுகோபால்




நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

முகப்பு: இத்தாலிய கலைஞர் லூசியானோ மிங்குஸ்ஸி சர்வதேச சிற்பக்கலைப் போட்டிக்கு அனுப்பிய 'அறியப்படாத அரசியல் கைதி' என்ற சிற்பம்.

ஆங்கில மூலம்: கல்வியியல் மற்றும் பயிற்சிக்கான தேசிய மையம்

ISBN 81-237-3728-9

முதல் பதிப்பு 2002 (சக 1923)

Human Rights : A source Book (*Tamil*)

**ரூ. 60.00**

வெளியீடு: இயக்குநர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
A-5 கிரீன் பார்க், புதுதில்லி - 110 016.

# பொருளடக்கம்

# முன்னுரை

மனித உரிமைகள் என்ற சமகாலக் கருதுகோளை வெளியிட்டுப் பரப்புவதில், அதைப் பயிற்றுவித்தலும் அடங்கும். 'இந்த உரிமைகளைப் பயிற்றுவிப்பதன்மூலம், தேசிய-சர்வதேசிய அளவில் அவற்றுக்கு அங்கீகாரமும் பின்பற்றுதலும் கிடைக்குமாறு தொடர்ந்து முயற்சிக்க வேண்டும்'—என்பது மனித உரிமைப் பிரகடனத்தை வெளியிட்டபோது ஐநா. பேரவை ஒவ்வொரு தனி நபருக்கும், சமூக அமைப்புகளுக்கும் விதித்த பணியாகும். காலப்போக்கில் மனித உரிமை பற்றிய கல்வி என்பது பொதுக்கல்வியின் நோக்கங்களிலும் லட்சியங்களிலும் இரண்டறக் கலந்தது. தேசிய பாடத்திட்டத்திலும், பலதுறைப் படிப்புகளிலும் இது ஒரு பாடமாகவும், பாடத்திற்கு வெளியிலான பள்ளி நடவடிக்கைகளிலும் இடம் பெற்றது.

முதன்முறையாக 1975இல் உருவாக்கப்பெற்ற 'தேசிய பாடத்திட்டத்தில்' மனித உரிமைக்கல்விக்கான நடவடிக்கைகளுக்கு அடிப்படையான சில அம்சங்கள் வலியுறுத்தப்பட்டன. பாடத் திட்டம் குறிப்பிட்டது: "சமூக மனப்பாங்கு, மக்களாட்சி மாண்புகளை மேம்படுத்துதல், சமூக நீதி மற்றும் தேசிய ஒருமைப்பாட்டைப் பற்றிய அக்கறை ஆகியவை மிகவும் முக்கியமானவை... இந்தியாவின் பல்வேறு உட்கலாசாரங்கள் அவற்றைப் பிணைக்கும் பொதுத் தன்மைகள் ஆகியவற்றை உணர்ந்து பாராட்டுவதன்மூலமே தேசிய ஒருமைப்பாட்டை வளர்க்க முடியும். பால், சாதி, சமயம், மொழி வட்டார அடிப்படையிலான பாகுபாடுகளையும் வெறுத்தொதுக்க வேண்டும். ஏனெனில் அது பகுத்தறிவுக்கு ஒவ்வாதது; இயற்கைக்கு முரணானது; புதிய பாரதத்தின் வளர்ச்சிக்கு ஊறுவிளைவிப்பது. அறிவியலார்ந்த மனித நேயத்தை வளர்க்குமாறு அனைத்துப் பாடங் களும் கற்பிக்கப்படவேண்டும்." பின்னர் 1986இல் நாடாளுமன்றம் ஏற்றுக்கொண்ட தேசியக் கல்விக் கொள்கையானது கல்வி(பெறும்) உரிமையை செயல்படுத்துவதற்கான கொள்கையளவிலான திட்டத்தை வெளியிட்டது. எல்லா மட்டத்திலும் கல்வியில் என்னென்ன இடம் பெறவேண்டும் என்ற திட்டமும் அதில் இடம்

பெற்றது. அத்திட்டத்தில் மனித உரிமை பற்றிய கூறுகளும் பங்கு வகித்தன.

மேற்குறித்த சீரான முயற்சிகள் அனைத்தும் எடுக்கப்பெற்றும் கூட, மனித உரிமைக்கல்வி பற்றிய இன்றைய நிலை திருப்திகர மானதாக இல்லை. தேசிய மனித உரிமை ஆணையம் நிறுவப் பட்டதும், அந்த ஆணையம் கல்வித்துறையில் காட்டிவரும் ஆழ்ந்த ஈடுபாடும் கல்வியின் இவ்வம்சத்தை வளப்படுத்திடவும் வலுப் படுத்திடவும் பேருதவியாய் அமைந்தன.

மனித உரிமைக்கல்வியைப் பரப்ப, அதுவும் குறிப்பாக பள்ளி மாணவரிடையே பரப்ப, நமது தேசிய கல்விஇயல் ஆய்வு மற்றும் பயிற்சிக் குழு எடுக்கும் நடவடிக்கைகளில் ஒன்றுதான் இப்போது உங்கள் கைகளில் தவழும் இந்நூல். ஆசிரியர்கள், மாணவர்கள், கொள்கைகளைத் தீர்மானிப்பவர்கள், பாடத்திட்டங்கள் தயாரிப்ப வர்கள், இவர்கள் தவிர கல்வித்துறையில் இயங்கும் கொள்கை உருவாக்குவோர், நடைமுறைப்படுத்துவோர் ஆகிய பல்துறையின ருக்கும் மனித உரிமைகள் பற்றிய தேர்ந்தெடுக்கப்பட்ட அடிப்படை சாசனங்களையும், மனித உரிமைக் கல்வியையும் அளிக்க இந்நூல் முயற்சிக்கிறது. இந்நூல் (அ) வரலாற்றுச் சிறப்புடைய பிரகடனங்கள், (ஆ) ஐக்கியநாடுகள் வழியே வெளியான ஒப்பந்தங்கள், கொள்கை ஏடுகள், பிரகடனங்கள், (இ) இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் மனித உரிமைகள், (ஈ) மனித உரிமை கல்வி பற்றி ஐ.நா.வின் கல்வி, அறிவியல், பண்பாட்டுக்கழகமான யுனெஸ்கோ வடிவமைத்த பரிந் துரைகள், செயல்திட்டம், தேசியக் கல்விக் கொள்கையில் மனித உரிமைகளுக்கான இடம் என்று 4 பிரிவுகளாக அமைந்துள்ளது.

இந்நூலை உருவாக்குவதில் ஒவ்வொரு கட்டத்திலும் தேசிய மனித உரிமை ஆணையம் அளித்த உதவிக்கும் ஊக்கத்துக்கும் நன்றி பாராட்டுகிறோம். குறிப்பாக பகுதி மூன்றில் இடம் பெற்றுள்ள அனைத்துலக மனித உரிமைப்பிரகடனத்துக்கும் இந்திய அரசியல் சட்ட விதிகளுக்கும் உள்ள ஒப்புமை பற்றிய அட்டவணை, மனித உரிமை தொடர்பான இந்திய சட்டங்கள், தேசிய மனித உரிமை ஆணையமும் மாநில ஆணையங்களும் பற்றிய விளக்கம் ஆகிய மூன்று பகுதிகளை தந்து உதவியமைக்காக ஆணையத் துக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம். பேராசிரியர் அர்ஜுன் தேவ், இந்திரா அர்ஜுன் தேவ் அம்மையார், சுப்தா தாஸ் அம்மையார் ஆகிய எனது உடனுழைப்பாளர்கள் இந்நூலை உருவாக்கியுள்ளனர். அவர்களுக்கும், அவர்களுக்கு அறிவுரைகள் வழங்கியதோடு பிற உதவிகளும் செய்த உச்சநீதிமன்ற மூத்த

வழக்குரைஞர் திரு ஜிதேந்திர சர்மாவுக்கும் என் நன்றி உரித்தாகும்.

மனித உரிமைகளையும், மனித உரிமைக்கல்வியையும் பரப்புவதில் ஆர்வமுள்ள அனைவருக்கும் இந்நூல் உதவியாக அமையும் என நம்புகிறேன்.

இந்நூல் பற்றிய எல்லாவிதமான கருத்துகளும், ஆலோசனைகளும் வரவேற்கப்படுகின்றன.

ஏ.கே. சர்மா,
இயக்குநர்
கல்வியியல் ஆய்வு மற்றும் பயிற்சிக்கான
தேசியக்குழு
(என்.சி.ஈ.ஆர்.டி)

புதுதில்லி

# அறிமுகம்

ஒவ்வொரு மனிதனுக்கும் எந்தெந்த உரிமைகளுக்கு இயற்கையாகவே உரிமை உண்டோ; எந்தெந்த உரிமைகள் பாதுகாப்புக்கு உரியனவோ, அவற்றையே மனித உரிமைகள் என்று வரையறுக்கிறோம். எல்லா சமூகங்களும், எல்லா நாகரிகங்களும் சில உரிமைகளையும் தத்துவங்களையும் மரியாதைக்குரியவை என நிர்ணயம் செய்துள்ளன. அவற்றில் சில உலகம் முழுவதற்கும் பொதுவானவை என்று கருதப்படுகின்றன. இந்தியப் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் ஒரு வலுவான மனிதநேய மரபும் பன்முகங்களும் பல கலாச்சாரமுமான ஒரு கதம்பத்தை சகித்துக் கொள்ளவும் மதிக்கவும் பழகிய மரபும் பொதிந்து கிடக்கின்றன. எண்ணற்ற மதங்களிலும் சமூக சீர்திருத்த இயக்கங்களிலும் எதிரொளிக்கும் நமது தத்துவ மரபும், உலகளாவிய மானிட சகோதரத்துவம், உலகமே ஒரே குடும்பம் என்ற கருதுகோளை அழுத்தமாக முன்வைக்கிறது. மற்ற பழைய நாகரிகங்களும் இதே போன்ற பொற்சிந்தனைகளை உருவாக்கியுள்ளன. நவீன ஐரோப்பிய மறுமலர்ச்சிக்கும், ஞானமார்க்கத்துக்கும் மனிதநேயமே ஆன்மாவும் இதயமும் ஆகும் என்று கூறலாம். அது மனிதனை உயர்த்தியது. மானிடத்தின் உள்ளார்ந்த மதிப்பையும் மரியாதையையும் வலியுறுத்தியது. அவனது அளவற்ற படைப்பாற்றலில் ஆழ்ந்த நம்பிக்கையைக் காட்டியது. தனிமனிதனின் விடுதலையையும் அவனது அடிப்படை உரிமைகளின் மாற்றப்படமுடியாத இயல்பினையும் அறிவித்தது.

மனித உரிமைகளின் அங்கீகாரத்துக்காகவும், அரசியல்-பொருளியல்- சமூக-கலாச்சார ஒடுக்குமுறைகளுக்கும், அநீதிக்கும் சமத்துவமின்மைக்கும் எதிராகவும் மனிதன் நடத்திவரும் போராட்டங்கள் அனைத்து சமூகங்களின் வரலாற்றில் இரண்டறக்கலந்தே உள்ளன. மனிதப் பிறவி எடுத்ததனாலேயே ஒவ்வொரு மனிதனுக்கும் இயற்கையாக உரித்தாகிற உரிமைகள் உருவாகவும், மாந்தர் அதை அனுபவித்ததற்குமேகூட இந்தப் போராட்டங்கள் முக்கியமான காரணிகளாக இருந்தன, இருந்து வருகின்றன. இவ்வுரிமைகளின்

பரிணாமமும் அவற்றை அனுபவிப்பதும் மனித வரலாறு நெடுகிலும் முரண்பாடுகளுக்கிடையிலேயே பிறந்துள்ளன. கிழக்கே உலக சகோதரத்துவம் தத்துவ அளவில் இருந்தும்கூட நடைமுறையில், சமூகச் சுரண்டல்களைக் குறைப்பதில் அது உதவவே இல்லை. மேற்கே மறுமலர்ச்சி இயக்கமும் ஞானமார்க்கமும் கொள்கையளவில் மனித நேயத்தை உயர்த்திப் பிடித்த அதே காலகட்டத்தில்தான் அமெரிக்க கண்டத்தின் ஆதிகுடிகளின் நாகரிகம் நசுக்கப்பட்டதும், அடிமை வணிகமும், உலகின் பல பாகங்களிலும் நாடுபிடிக்கும் படலமும் இடம் பெற்றன.

மனித உரிமை பற்றிய கருதுகோள்கள் உருவாகத் துவங்கிய போது, பல மேல்நாடுகளில் கி.பி. 1775-1800 அளவில் ஏற்பட்ட புரட்சிகள் அதற்கு உத்வேகமளித்தன. சர்வாதிகாரிகளையும், எதேச்சதிகார ஆளும் வர்க்கங்களையும் அழிக்கப் புறப்பட்ட இந்த அரசியல் புரட்சிகள், மாற்ற முடியாதவை புனிதமானவை எனத் தாம் கருதிய மனித உரிமைகளை தமது போராட்டங்களின் அடிப்படை ஆதாரங்களாகவும், தாம் அமைக்க விரும்பிய புதிய உலகத்துக்கும் அடிப்படைகளாகவும் கருதின. பல புரட்சிகளுக்கும் உரிமை வழங்கிய பிரகடனங்கள் இரண்டாகும். ஒன்று அமெரிக்க விடுதலைப் பிரகடனம்; மற்றது மனித உரிமையும் குடிமக்கள் உரிமையும் பற்றிய பிரெஞ்சுப் பிரகடனம். அதிலும் பிரெஞ்சுப் பிரகடனம் உலகளாவிய தன்மை கொண்டிருந்தது. இங்கு குறிப்பிட்ட இயக்கங்கள் சர்வாதிகாரத்தை ஒழிப்பது, ஜனநாயக அரசியல் ஏற்படுத்துவது, தனிமனித உரிமைகளைப் பாதுகாப்பது ஆகியவற்றை நோக்கமாக கொண்டிருந்தன. வர்க்க ஆட்சியை ஒழித்து சமூகப் பொருளாதார ஏற்றத்தாழ்வை அழிப்பது என்ற முன்னுரிமையோடு 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உருவாகி வந்த சோஷலிஸ்ட் இயக்கங்கள் இவ்வாறு உருவாகி வந்த மனித உரிமைக் கருத்துகளுக்கு ஒரு புதிய பரிமாணம் தந்தன. ஆனால், இங்கும் சிலவற்றை நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும்.

'விடுதலைப்பிரகடனம்' ஒருபுறம் இருந்தும்கூட, அமெரிக்க 'ஜனநாயகக் குடியரசு' அரசியலமைப்பை ஏற்றுக்கொண்ட 75 ஆண்டுகளுக்குப் பிறகுகூட அடிமை முறை இருந்தே வந்தது.

ஜனநாயக நாடுகள் என்று கூறிக்கொண்ட நாடுகளில் நூறு வருடங்கள் பெண்களுக்கு அரசியலில் எப்பங்கும் இருக்கவில்லை. சோஷலிசத்தை நிறுவிவிட்டதாகவும் ஒரு புதிய நாகரிகத்தையே தோற்றுவித்துவிட்டதாகவும் முழங்கிய குடிகளின் அடிப்படை உரிமைகளில் சில பாதிக்கப்பட்டன. பேச்சுக்கும் செயலுக்கும்

இடையே முரண்பாடு இருந்தபோதும், இந்தக் காலகட்டத்து மனித உரிமைப் பிரகடனங்களை குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது.

ஆழமான கடந்தகால மரபுகளுக்கு ஒரு இடம் இருந்தாலும் மனித உரிமைகள் பற்றிய சமகாலக் கண்ணோட்டம், அதன் உலகளாவிய பார்வை, உலக அங்கீகாரம் இவற்றை ஆராயும்போது, 20-ஆம் நூற்றாண்டின் வரலாற்றையும் கணக்கிலெடுத்துக் கொண்டே பார்க்க வேண்டும். இருபதாம் நூற்றாண்டின் முதல் பாதியில் உலகில் பலபாகங்களிலும் காலனி ஆதிக்கமே மேலோங்கியிருந்தது. பல நாடுகளில் சர்வாதிகார அரசுகள் ஆட்சி செய்துவந்தன. காட்டுமிராண்டித்தனமான அநாகரிக இனவெறி (பாசிச) ஆட்சி சில நாடுகளில் பிறந்தது. இவை ஒருபுறமிருக்க இன்னொருபுறம் காலனி நாடுகளில் தேசிய விடுதலை இயக்க எழுச்சிகளும் ஜனநாயகத்துக்கும் சமூக முன்னேற்றத்துக்கான எழுச்சிகளும் பிறந்தன. மானிட இனத்தின் வரலாற்றிலேயே நாசகரமான இரு பெரும்போர்களும் இதே நூற்றாண்டில் இடம் பெற்றன. முதல் உலகப்போர் முடிந்ததும் ஏற்பட்ட இருபதாண்டு அமைதி 'இரண்டாவது போருக்கான தயாரிப்புக் காலமேயாகும்!' ஆகையினால்தான் முதல் உலகப்போர் துவங்கிய 1914க்கும் இரண்டாம் உலகப்போர் முடிவுற்ற 1945க்கும் இடைப்பட்ட காலத்தை போரழிவுக் காலமென்கிறோம். இந்தப் போரழிவுக்காலத்தின் இறுதி ஆண்டுகளில்தான் இனவெறி அரசுகளுக்கெதிரான போரின்போது அகில உலக அளவில் இப்போது பேசப்படுகின்ற வகையில் மனித உரிமை பற்றிய கருத்துகள் உருவமையத் தொடங்கின. அவை பற்றிய கருத்துப் பரவலும் துவங்கியது. அதன் முக்கியமான அம்சம் உலகு தழுவிய கண்ணோட்டமே. இனவெறியையும் ராணுவ முரட்டு ஆட்சியையும் எதிர்த்த நாடுகளின் போர் அறிக்கைகளில் இவை பேசப்பெற்றன. ஐ.நா. நிறுவனத்தின் அடிப்படை சாசனமும் இதை எதிரொலித்தது. அதன் ஆரம்ப வாசகமே "ஐக்கியநாடுகளின் மக்களான நாம், மனித குலத்துக்கு நம் கண்ணெதிரே சொல்ல இயலாத துயர் விளைத்த இரண்டு பெரும் போர்கள் உருவாக்கிய போரழிவு போல மீண்டும் நடவாது தடுத்து அத்தகைய நாசத்திலிருந்து நமது வாரிசுகளைக் காப்பதென உறுதிபூண்டுள்ளோம்; அடிப்படை மனித உரிமைகள், மனிதப் பிறவிக்குரிய மதிப்பு-மரியாதை, ஆணுக்கும் பெண்ணுக்கும் சரி-பெரிய நாடுகள் சிறுநாடுகள் ஆகிய வற்றுக்கும் சரி–சமஉரிமை ஆகியவற்றில் நமக்குள்ள நம்பிக்கையை மீண்டும் உறுதி செய்கிறோம். நாடுகளுக்கிடையிலான ஒப்பந்தங்களுக்கும், உலக

நாடுகள் சட்டத்துக்கும் அவற்றிலெழும் கடமைகளுக்கும் மதிப்பும் மரியாதையும் கிடைப்பதற்கான சூழ்நிலையை உருவாக்கவும் உறுதி பூண்டுள்ளோம். சமூக முன்னேற்றம், உயரிய வாழ்க்கைத்தரம், சுதந்திர சூழல் ஆகியவற்றை விரிவுபடுத்தவும் உறுதிபூண்டுள்ளோம்" என்பதுதான்.

மனித உரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனம் ஐ.நா. அடிப்படை சாசனத்துக்கு மூன்றாண்டுகளுக்குப் பிறகு அதாவது 1948இல் பிறந்தது. ஒரு விரிவான மனித உரிமைப் பட்டியலாகும் அது. "எல்லா நாடுகளுக்கும், எல்லா மாந்தருக்கும்" பொதுவான ஒரு தரத்தை நிர்ணயிக்க முயன்றது. 'தப்பிக்க முடியாதபடி, உலகப் பொதுவான சமுதாயத்தின் ஒரு அங்கமாக நாம் அடைந்துள்ளோம்' என்றும், உலகெங்கும் உள்ள மக்களின் எதிர்காலத் தலைவிதி முன்னெப்போதையும்விட இப்போது பொதுவானதாக ஆகிவிட்டதென்றும் ஒரு விழிப்புணர்ச்சியை தற்கால வரலாறு மனித இனத்துக்கு ஏற்படுத்திவிட்டது. இதுதான் சமகால வரலாற்றின் மிகமுக்கிய அமசமாகும். இந்த சமகால வரலாற்று எதிரொலியே மனித உரிமை பற்றிய கருதுகோள் 'உலகெலாம்' உணர்ந்து அங்கீகரிக்கப்பட்டதிலும் காணப்படுகிறது. காலனி ஆதிக்கமும், சாம்ராஜ்யங்களும் வீழ்ச்சியடைந்தது, நவீன காலத்தின் துவக்கத்திலிருந்து உலகில் ஐரோப்பாவில் அதிகரித்துவந்த மேலாண்மை முடிவுற்றது, மூன்றாம் உலகம் என்று அழைக்கப்படும் நாடுகள் தமக்குரிய இடத்தை நிர்மாணித்துக்கொண்டது இவையெல்லாமும் இதற்கு காரணிகளாகும். ஐ.நா சாசனம் பிறந்தபோது பெரும் எண்ணிக்கையிலான ஆப்ரோ ஆசிய நாடுகள் அப்போதும் காலனி ஆதிக்கத்தில் இருந்ததால் ஐ.நா.வில் உறுப்பினர்களாக இல்லை என்பது இங்கு நோக்குதற்குரியது. அந்த சாசனத்தில் உறுதிகூறப்பட்ட உரிமைகளுக்காக இந்த நாடுகளின் மக்கள் தமது தேசிய விடுதலை எழுச்சிகள் மூலம் குரலெழுப்பினர். இந்திய தேசிய எழுச்சியையே எடுத்துக் கொள்வோமே. ஆரம்ப முதலே தேசிய இயக்கங்களுக்கு சமூக, பொருளாதார, பண்பாட்டு உரிமைகள், மனித உரிமைகள் அடிப்படையிலான ஜனநாயக சோஷலிச சமுதாயம் பற்றிய ஒரு கண்ணோட்டம் இருந்தது. எனவே ஐ.நா. உரிமைகள் பிரகடனம் வெளியான அதே காலகட்டத்தில் உருவாகத்துவங்கிய இந்திய அரசியலமைப்புச் சட்டத்திலும் அதில் பேசப்பெறும் அத்தனை அடிப்படை உரிமைகளும் பேசப்படுவதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை. அதன்பிறகு ஏற்பட்ட பல்வேறு ஒப்பந்தங்கள், பிரகடனங்கள், கொள்கை ஏடுகள் ஆகியவற்றில் இதே

உரிமைகள் இன்னும் விரிவாகவும் வலுவாகவும் பேசப்படுகின்றன. ஐநா. உண்மையாகவே உலகைப் பிரதிநிதித்துவப்படுத்தும் நிலையை அடைந்தபோது இவை பிறந்தன. இவற்றில் தொனிக்கும் அக்கறை உலகுதழுவியதாகவும் அதேசமயம் மூன்றாம் உலக நாடுகளின் சொந்த ஆசாபாசங்களுக்கு நேரடித் தொடர்பு கொண்டனவாயும் இருந்தன.

மனித உரிமைகள் பற்றிய தேசிய பிரகடனம் ஒரு தத்துவ அறிக்கைதான், நோக்கங்களின் வெளிப்பாடுதான். தேசங்களுக்கு இடையேயான ஒப்பந்தமோ ஒப்பந்தச் சட்டமோ அல்ல. எனவே சட்டபூர்வமாக யாரையும் அது கட்டுப்படுத்தாது. ஆனால் பல நாடுகளில் அரசியலமைப்புகள் சட்ட அடிப்படைகள் ஆகியவற்றை உருவாக்குவதில் அது ஒரு தத்துவார்த்த சக்தியாக விளங்கியது.

முன்பே கூறியதுபோல இதனைத் தொடர்ந்து பல ஒப்பந்தங்களும் உடன்படிக்கைப் பிரகடனங்களும் வந்தன. குறிப்பிட்ட பிரச்சினைகள்-அம்சங்கள் சம்பந்தப்பட்ட மனித உரிமைகள்மீது அவை விரிவாக விளக்கம் தந்தன. ஆனால் ஒப்பந்தங்களும், உடன்படிக்கைகளும் அவற்றில் கையெழுத்திட்ட நாடுகள் அவற்றைப் பின்பற்றுவோம் என்று உறுதிசெய்திருப்பதால் பிரகடனங்களைவிடச் சற்று அதிக முக்கியத்துவம் பெறுகின்றன.

மனித உரிமைகள் பற்றிய தற்காலக் கருதுகோள் உருவான பரிணாமங்களில் சில அம்சங்களைப் பார்ப்போம். மனித உரிமைகளை மூன்று தலைமுறைகளாகப் பிரிக்கலாம். முதல் தலைமுறை உரிமைகள் என்பவை அரசியல் உரிமைகளும் அடிப்படை உரிமைகளும் ஆகும். இவற்றை ''சுதந்திரம் சம்பந்தப்பட்ட உரிமைகள்" எனலாம். 'தனி மனித சுதந்திரத்தை மக்கள் பயன்படுத்துவதை பாதிக்கும் வகையிலான செயல்களை செய்யாமை' என்ற எதிர்மறைக் கடமையை இவை அரசுக்கு விதிக்கின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டிலிருந்து எல்லா சுதந்திர இயக்கங்களும் ஜனநாயக இயக்கங்களும் இத்துறையில் தீவிர அக்கறை காட்டி வருகின்றன.

இரண்டாம் தலைமுறை உரிமைகள் 'பாதுகாப்பு சம்பந்தப் பட்ட உரிமைகள்' என அழைக்கப்படுகின்றன. இவை சமூக, பொருளாதார, பண்பாட்டுப் பாதுகாப்புக்கு உத்தரவாதமளிப்பவை. இவை முதல்தலைமுறை உரிமைகள்போல் எதிர் மறைக்கடமை ஏதும் விதிக்காமல் "அரசு, குடிமக்களுக்கு இந்த உரிமைக்கான உத்தரவாதமளிக்கவேண்டும்" என்று நேர்முகக் கடமையை விதிக்கின்றன. இந்த இரண்டு தலைமுறை உரிமைகளின்

அடித்தளமான தத்துவங்கள் பற்றிய சர்வதேசக் கருத்தொருமையை ஐ.நா.வின் சர்வதேசிய உரிமை சாசனம் எதிரொலிக்கிறது.

மூன்றாம் தலைமுறை உரிமைகள் மிகமிக அண்மைக்காலத்தில் பிறந்துள்ளன. அண்மையில் சில புதிய அக்கறைகள் உருவாகி அவை பற்றி சர்வதேசப் பொதுக்கருத்தும் உருவாகியுள்ளது. மூன்றாம் தலைமுறை உரிமைகள் அவற்றுடன் தொடர்புடையன ஆகும். சுற்றுச்சூழல், பண்பாடு, வளர்ச்சி ஆகிய துறைகளை உதாரணமாகக் கூறலாம். இவை தனிமனிதர் சார்ந்த உரிமைகள் அல்ல; மக்கட்குழு/ தேசிய இனம் சம்பந்தப்பட்டவை. சுயநிர்ணய உரிமை, வளர்ச்சி உரிமை ஆகியவை இப்படிப்பட்டவையாகும். இந்தத் துறைகளில் சர்வதேச அளவில் கருத்தொருமை உருவாவதற்கு வளரும் நாடுகள் ஆற்றியபணி முக்கியமானது. 1986இல் ஐ.நா. பொதுச்சபை வெளியிட்ட 'வளர்ச்சி உரிமைப்பிரகடனம்' இதற்கொரு எடுத்துக்காட்டாகும்.

இங்கே நாம் கூறும் "மூன்று தலைமுறை" பகுப்பு திட்டவட்டமாக தனித்தனியானவை என்றோ, எப்போதும் அதே காலவரிசையில் வருபவை என்றோ அறுதியிட்டுக் கூறமுடியாது. இங்கே நாம் பகுத்திருப்பதன் அடிப்படை அணுகுமுறை அவை எப்போது சர்வதேச அங்கீகாரம் பெற்றன என்பதே தவிர அவை எப்போது பிறந்தன, எப்போது தீவிரமாயின என்பது அல்ல. உதாரணமாக, இந்திய விடுதலை இயக்கம் நாடு விடுதலை பெறுவதற்குப் பலகாலம் முன்பே "மூன்று தலைமுறை" உரிமைகளையும் பேசத் துவங்கியிருந்தது.

அனைத்துலகப் பிரகடனம் ஏற்கப்பட்டதிலிருந்தே எந்த உரிமைகள் அதிக முக்கியத்துவம் கொண்டவை எவற்றுக்கு அவ்வளவு முதன்மை தேவையில்லை என்பது பற்றி தொடர்ந்து பிரச்சினைகள் இருந்துகொண்டே வந்துள்ளன. சில நாடுகள் பொருளாதார-சமூக-பண்பாட்டு உரிமைகளைவிட அரசியல்-குடி மக்கள் தொடர்பான உரிமைகளே முக்கியமென்று கூறிவருகின்றன. 'வளர்ச்சி உரிமை' கோட்பாட்டை ஏற்றுக் கொள்வது பற்றி இந்நாடுகளுக்கு பலமான அவநம்பிக்கை இருக்கிறது. அவ்வகை உரிமைகள் பலனுள்ளபடி நடைமுறைப்படுத்தப்பட்டால், தற்போது உலகில் நிலவி வரும் அரசியல்-பொருளாதார வலிமை குறித்த அமைப்பினை அது பாதிக்குமென்று இந்நாடுகள் அஞ்சுகின்றன. வேறுசில நாடுகள் சமூக, பண்பாட்டு, பொருளாதார உரிமைகளையும் வளர்ச்சி உரிமைகளையும் வலியுறுத்துகின்றன. மனித உரிமைகள் அனைத்தும் பகுக்கப்பட முடியாதவை என்பது ஒப்புக்கொள்ளப்

பட்டபோதே இந்த விவாதமெல்லாம் பொருளிழந்து விடுகிறது என்று கொள்கையளவில் கூறலாம். நூற்றுக்கணக்கான அரசுசாரா அமைப்புகளின் தலைவர்களும் 171 நாடுகளின் பிரதிநிதிகளும் கலந்துகொண்ட ஒரு மாநாட்டின் இறுதியில் வெளியிடப்பட்ட வியன்னா பிரகடனம் "மனித உரிமைகள் அனைத்தும் உலகெங்கும் செல்லத்தக்கன, ஒன்றோடொன்று தொடர்புடையன, ஒன்றை யொன்று சார்ந்துநிற்பன" என்று ஐயந்திரிபற முழங்கியது. குடிமக்கள், அரசியல், பொருளாதார கலாச்சார உரிமைகள் தனிமனிதருடையனவாயினும் சரி, நாடு தழுவியோ அல்லது நாடுகளுக்கிடையிலோ எழும் குழும உரிமைகளாயினும் சரி எல்லா உரிமைகளுக்கும் மக்களாட்சி ஒன்றே உத்தரவாதம் தர முடியும் என்றும் வலியுறுத்தப்பட்டது.

முன்னரே கூறியதுபோல் சர்வதேசியப் பிரகடனம் பல நாடுகளின் சமூக அமைப்பையும் அரசியல் சட்டங்களையும் பாதித்துள்ளது. மனித உரிமை ஒப்பந்தங்களிலும், உடன்படிக்கைகளிலும் பல்வேறு நாடுகள் கையெழுத்திட்டுள்ளன. அதாவது அந்தந்த ஆவணத்தில் இடம்பெறும் பொறுப்புகளை நிறைவேற்ற அவை தம் கடப்பாட்டைத் தெரிவித்துள்ளன. நோக்கங்கள் அல்லது குறிக்கோள்களை தெரிவிப்பவைதான் என்றாலும் 'அறிக்கைகளு'ம் ஓரளவு கட்டுப்படுத்தும் சக்தி கொண்டவைதான். எனவே மனித உரிமைகளைப் பரப்புவதும் பாதுகாப்பதும் அரசாங்கங்களின் பொறுப்பான கடமையாகிறது. ஆனாலும் ஒரு நாட்டின் சட்டத்தில் குறிக்கப்பட்டு தேவைப் பட்டால் அந்நாட்டு நீதிமன்றங்கள் வழியே நடைமுறைப்படுத்திக் கொள்ளக்கூடிய உரிமைகள், சர்வதேச அறிக்கைகள்-ஒப்பந்தங்கள்-பிரகடனங்கள் ஆகியவற்றில் கூறப்படும் உரிமைகள் என்ற இரண்டு வகைகளுக்கும் இடையேயுள்ள வித்தியாசங்களை மறந்துவிடமுடியாது.

ஐ.நா. சாசனம் வெளியிடப்பட்டதற்குப் பிந்தைய கடந்த 50 ஆண்டுகளில் மனித உரிமைகளை நடைமுறைப்படுத்துவதிலும், இன்னும் சொன்னால் சமாதானத்தை நிலைநாட்டுவதிலும், இங்கு நிலைமைகள் இருக்கும்விதம் ஒளிமயமாக இல்லை. சிலர் அபாயகரமான நிலைதான் என்று கூடக் கூறுகிறார்கள். மனித உரிமைகளை நிதர்சனமாக்குவதற்கான அறிதலும் அக்கறையும் உருவாக்கப்படுவதற்கான தேவை வேறெப்போதையும் விட இன்று அதிகமாக உள்ளது. மனிதகுலம் பிழைத்திருக்க வேண்டுமெனில் இது காலத்தின் கட்டாயம் என்று சொன்னால் அது மிகையல்ல.

மனித உரிமை ஆவணங்கள் எல்லாவற்றிலும் மனிதஉரிமைக் கல்வி வலியுறுத்தப்படுகிறது. 'உலகு தழுவிய மனித உரிமை நாகரிகத்தை உருவாக்குவதில் அத்தியாவசியப் பங்களிப்பு' என்று ஏற்கப்படுகிறது. கொள்கையை நிர்ணயிப்போர், பாடத்திட்டம் உருவாக்குவோர், வகுப்பறை ஆசிரியர், வெளியிடக் கல்வியாளர்கள் என கல்விப் பணியின் பல துறைகளைச் சார்ந்தவர்களுக்கும், எங்கெங்கு, எப்படி எப்படி மனித உரிமைக்கல்வி நிலவுகிறதோ அதற்கேற்ப அதனை வளப்படுத்துவதில் உதவுவதற்காகவும், சமகால மனித உரிமை நிலவரங்களையும் பிரச்சினைகளையும் தெரியப்படுத்த உதவுவதற்காக மனித உரிமை பற்றிய முக்கியமான ஆவணங்களை அவர்கள் கைக்கு எட்டச்செய்யும் வண்ணம் இச்சிறுநூல் உருவாக்கப்பட்டுள்ளது.

அர்ஜுன் தேவ்

# 1

# விடுதலைப் பிரகடனம்

*கி.பி. 1776ஆம் ஆண்டு ஜூலை நான்காம் நாள் வட அமெரிக்காவின் ஆங்கிலேயக் குடியேற்றங்களின் பிரதிநிதிகள் பங்கேற்ற இரண்டாம் (அமெரிக்க) கண்ட மாநாடு விடுதலைப் பிரகடனத்தை நிறைவேற்றியது. ஏற்கெனவே துவங்கிய விடுதலைப்போர் இன்னும் 6 ஆண்டுகள் நடக்கவிருந்த நேரம் அது. ஆனாலும், இந்தப் பிரகடனமே அமெரிக்கக் குடியேற்றங்களின் முறையான விடுதலைப் பிரகடனமும் அமெரிக்க ஐக்கிய நாடுகள் பிறந்துவிட்டது என்ற பிரகடனமும் ஆகும். பிரிட்டனிலிருந்து தமது சுதந்திரத்தை பிரகடனப்படுத்துவதற்கான குடியேற்ற நாடுகளின் உணர்ச்சி வெளியீடு என்பதற்கும் மேலான முக்கியத்துவம் இந்தப் பிரகடனத்துக்கு உள்ளது. "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும். மானிடர் அனைவர்க்கும் படைத்தவன் சில மறுக்க முடியாத உரிமைகளையும் அளித்துள்ளான். அவற்றுள் உயிர், சுதந்திரம், மகிழ்ச்சி வேட்டல் ஆகியவையும் சேரும்" என்று முழங்கியதில் இந்தப் பிரகடனத்தின் உலகளாவிய தன்மை அடங்கியுள்ளது. அந்தப் பிரகடனத்திலிருந்து சில பகுதிகள்:*

---

ஒரு குறிப்பிட்ட சமுதாயம், நிகழ்ச்சிப் போக்கில், மற்றொரு குறிப் பிட்ட சமுதாயத்தினரோடு கொண்டிருந்த பொது இணைப்பினை முறித்துக் கொண்டு, இயற்கை சட்டங்களும் இயற்கையின் கடவுளும் அருளியுள்ளபடி உலகின் மற்ற நாடு களிடையில் தனக்கென்று ஒரு தனிஇடமும் சமநிலையும் ஏற்கும் தேவை ஏற்படும்போது மனித குலத்தின் கருத்துகள் மீது அதற்குள்ள மதிப்பும் மரியாதையும் காரணமாக அச்சமுதாயம் தான் அந்த முடிவினை எடுக்க நேர்ந்த தற்கான காரணங்களை உலகுக்கு வெளியிட வேண்டியிருக்கிறது.

படைப்பில் மனிதர்கள் சமம், படைத்தவன் அவர்களுக்கென்று

சில மாற்றமுடியாத உரிமைகளைத் தந்திருக்கிறான். அவற்றில், உயிர், சுதந்திரம், மகிழ்ச்சி வேட்டல் ஆகியவையும் வருகின்றன. இவ்வுரிமைகளைப் பெற மனிதன் அரசாங்கங்களை ஏற்படுத்திக் கொள்கிறான். ஆளப்படுவோரின் ஒப்புதலிலிருந்தே அரசாங் கத்தின் நியாயமான அதிகாரங்கள் பிறக்கின்றன. எந்த வகை அரசாங்கமாவது இந்நோக்கங்களுக்கு அழிவு சக்தியாக மாறினால் அதை மாற்றுவதோ, அழிப்பதோ மனிதர்களின் உரிமை. அவர்களே புதியதோர் அரசும் செய்வர். அந்த அரசு மக்களின் பாது காப்புக்கும் மகிழ்ச்சிக்கும் பணி செய்யும் வகையிலான தத்துவங்களின் அடிப்படையிலும், அதற்கேற்ப அதிகாரங்கள் நிர்ணயிக்கப்பட்டும் அமைக்கப்படும். இந்தக் கருத்துக்கள் வேறு ஆதாரங்களின் தேவையின்றி தன்னளவிலேயே முடிவாக நிறுவப்பட்ட உண்மைகள் என்பது எங்கள் தெளிவு. உண்மையில் நீண்டகால அரசுகளை சில்லறைக் காரணங்களுக்காக மாற்றக் கூடாதென்பதே விவேகமாகும். அவ்வண்ணமே மானிடம் சகித்துக் கொள்ள முடிந்தவரை துன்ப துயரங்களை சகித்துக் கொள்ளத் தான் செய்யுமே தவிர தான் பழகி வந்த நிறுவன அமைப்புகளை அழித்து அந்தத் துன்பங்களை தீர்த்துக்கொள்ள இயலாது என்றே அனைத்து அனுபவங்களும் காட்டுகின்றன. ஆனால், நெடுங்காலம் ஒரே குறிப்பிட்ட நோக்கத்துடன் அவமதிப்புகளும் மேலாண்மையும் தொடர்ந்துகொண்டே இருந்தால் அந்த மக்களை முழுமையான தோர் சர்வாதிகாரத்துக்குள் தள்ளும் ஒரு திட்டம் இருக்கிறது என்று பொருள். அப்போது அந்த அரசாங்கத்தை வீழ்த்திவிட்டு தமது எதிர்காலப் பாதுகாப்புக்கு ஏற்ற புது அரசினை நிறுவிக்கொள்ள வேண்டியது அம்மக்களின் உரிமை மட்டுமல்ல, கடமையும் ஆகும். எங்கள் குடியேற்றங்களின் சகிப்பும் இத்தகைய பொறுமையைத்தான் கடைப்பிடித்தது. இதுவரை இருந்துவந்த அரசமைப்பை மாற்றவேண்டிய கட்டாயத்துக்கு எங்களைக் கொண்டுவந்துவிட்டுவிட்டது. இன்றைய பிரிட்டிஷ் மன்னரின் வரலாறு என்பது இந்தக் குடியேற்றங்களின்மீது ஒரு கலப்படமற்ற சர்வாதிகாரத்தைத் திணிப்பது என்பதையே நேரடி நோக்கமாய்க் கொண்ட மேலாதிக்க நடவடிக்கைகள் மீண்டும் மீண்டும் இழைக்கப் படும் கொடுமைகள் ஆகியவற்றின் வரலாறுதான்.

இவை நிரூபணம் தேவைப்படாத உண்மைகள் என்று நாங்கள் கருதுகிறோம்.

# 2

# மனித உரிமைகள், குடிமக்கள் உரிமைகள் பற்றிய பிரகடனம்

*பிரெஞ்சுப் புரட்சி 1789இல் நிகழ்ந்தது. பிரான்சின் பழைய ஆட்சியையும் சர்வாதிகாரத்தையும் முடிவுக்குக் கொண்டுவந்ததன் அடையாளமாக அந்த ஆண்டு ஜூலை 14ஆம் நாள் பாரிஸ் மக்கள் பாஸ்டைல் கோட்டை என்ற அரசாங்க சிறைச்சாலையை உடைத்து நொறுக்கிய நிகழ்ச்சி அமைந்தது. ஜூன் மாதம் கூடத்துவங்கிய பிரெஞ்சு தேசிய சபை ஆகஸ்ட் 26ஆம் நாள் மனிதஉரிமைகள், குடிமக்கள் உரிமைகள் பற்றிய பிரகடனத்தை நிறைவேற்றியது. தங்கள் நாட்டுக்காக அமைக்கத் துவங்கியிருந்த புதிய அரசியலமைப்புச் சட்டத்தின் முகப்புரையாக இப்பிரகடனத்தை வெளியிட்டார்கள். இப்பிரகடனத்தின் உள்ளடக்கம் வெளிப்படையாகவே சர்வதேசப் பண்புடன் விளங்கியது. ஐரோப்பா, மத்திய அமெரிக்கா, தென்னமெரிக்கா ஆகிய பகுதிகளில் ஒவ்வொரு நாட்டிலும்—சில காலம் பிறகு ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும்—புரட்சி இயக்கங்களுக்கும், மக்களாட்சி இயக்கங்களுக்கும் உந்து சக்தியாய் அமைந்தது. இந்தப் பிரகடனத்தின் தமிழாக்கம் இதோ—*

---

பிரெஞ்சுப் பொதுமக்கள் தேசிய சபையாக அமர்ந்து மனித உரிமை பற்றிய அறியாமை, வெறுப்பு, உரிமை அவமதிப்பு ஆகியவையே பொதுமக்களின் அனைத்துத் தொல்லைகட்கும் அரசியல் ஊழலுக்கும் காரணம் என்பதைக் கருதிப் பார்த்து மானிடனுடைய இயற்கையானதும் மாற்ற முடியாததும் புனிதமானதுமான உரிமைகளை ஒரு கம்பீரமான பிரகடனமாக முன்வைப்பதென்று தீர்மானித்திருக்கிறோம். சமூகத்தின் உறுப்பினர் அனைவருக்கும் எக்காலமும் நிரந்தரமாக அவற்றினைக் கூறிக் கொண்டிருக்கவும், அவர்கள் தத்தம் உரிமைகளையும் கடமைகளையும் எப்போதும்

தெரிந்திருக்கவும் சட்டமியற்றும் அமைப்புகளும் நிர்வாக அமைப்புகளும் தம் செயல்களை எப்போதும் எல்லா அரசியல் அமைப்புகளுக்குமான நோக்கங் களுடன் ஒப்புமை செய்துகொள்வது அந்த நடவடிக்கைகள் மேலும் மரியாதைக்குரியனவாக அமைய வகை செய்யவும் இனிமேற் கொண்டு எளிய, எதிர்க்கப்படமுடியாத தத்துவங்களின் அடிப்படையில் எழும் குடிமக்களின் தேவைகள் என்றென்றும் அரசிய லமைப்பினை நிலைநிறுத்துவதிலும் பொது நன்மையிலும் நன்முறையில் பங்களிப்பு செய்யவும் இத்தகைய பிரகடன வெளியீடு தேவையாக இருக்கிறது.

எனவே, இந்த சபை தனிமனிதனுடையவும் குடிமகனுடையவுமான பின்வரும் உரிமைகளை, எல்லாம் வல்ல இறைவன் அருளாலும் அவன் முன்னிலையிலும் ஒப்புக்கொண்டு பிரகடனப் படுத்துகிறது.

I. மனிதர்கள் சுதந்திரமாகவும் தம்முள் சமஉரிமை உடையோராயும் பிறக்கிறார்கள், அப்படியே இருக்கிறார்கள். சமூக வேறுபாடுகள் பொதுநன்மை அடிப்படையில் மட்டுமே அமையலாம்.

II. சுதந்திரம், சொத்துரிமை, பாதுகாப்பு, ஒடுக்குமுறை எதிர்ப்பு ஆகிய மனித உரிமைகள் இயற்கையானவை; சட்டங்களாலோ வழக்கங்களாலோ மறுக்கவியலாதவை. அத்தகைய இவ்வுரிமை களைப் பாதுகாப்பதுதான் எல்லா அரசியல் நிறுவனங் களுக்குமான குறிக்கோள்.

III. எல்லா இறையாண்மை தத்துவங்களும் அடிப்படையில் தேசம் சார்ந்தே எழுகின்றன. நாட்டிடமிருந்து வெளிப்படையாக எழாத எந்த அதிகாரத்தையும் எந்தத் தனிமனிதனும், எந்த அமைப்பும் கொண்டு செலுத்த முடியாது.

IV. அடுத்தவரைத் துன்புறுத்தாத எதையும் செய்வதற்கான சக்தியே சுதந்திரம். எனவே ஒவ்வொரு மனிதனும் தன் உரிமைகளைப் பயன்படுத்துவதற்கு, அவை அதேபோன்று சமூகத்தின் மற்ற உறுப்பினர்கள் தத்தம் உரிமைகளையும் ஆண்டனுபவிப்பதை உறுதி செய்யவேண்டும் என்பதைத் தவிர வரையறை ஏதுமில்லை. இந்த எல்லைகளை சட்டம் ஒன்றே தீர்மானிக்க வேண்டும்.

V. சமூகத்துக்கு ஊறு செய்யக்கூடிய செயல்களை மட்டுமே சட்டம் உரிய முறையில் தடை செய்ய முடியும். சட்ட விரோதமில்லாத எதைச் செய்வதற்கும் தடை இருக்கக் கூடாது. சட்டம் கட்டாயப்படுத்தாத எதைச் செய்யுமாறும்

கட்டாயம் இருக்கக் கூடாது.

VI. பொது விருப்பத்தின் வெளிப்பாடே சட்டம். ஒவ்வொரு குடிமகனுக்கும் அதை உருவாக்குவதில் நேரடியாகவோ, பிரதிநிதி மூலமோ பங்குபெற உரிமை இருக்கிறது. அது அளிக்கும் பாதுகாப்பும் சரி, தரும் தண்டனையும் சரி எல்லாருக்கும் ஒன்றுபோல்தான். சட்டத்தின் கண்முன் அனைவரும் சமம் என்பதால் எல்லா பொது மரியாதைகளும், பொறுப்புகளும், பணிகளும் அவரவர் தகுதியடிப்படையில் எல்லாருக்கும் உரிமை உள்ளவையே. தகுதியும் திறமையும் தவிர வேறெந்த விதத்திலும் அவர்கள் வித்தியாசப் படுத்தப்படமாட்டார்கள்.

VII. சட்டப்படி தீர்ப்பளிக்கப்பட்டவர்கள் தவிர எவரும் கைது செய்யப்படுவதோ, சிறைவைக்கப்படுவதோ, குற்றம் சாட்டப் படுவதோ முடியாது. அவர்களும் சட்டம் விதிக்கும் முறைப் படியே இருக்க இயலும். தன்னிச்சையாக ஆணைகளைத் தூண்டுவோர், விரைவுபடுத்துவோர், நிறைவேற்றுவோர், நிறைவேற்றக் காரணமாய் இருப்போர் தண்டிக்கப்பட வேண்டும். ஆனால் சட்டப்படி அழைக்கப்பட்டவரோ, பிடி பட்டவரோ உடனே பணிந்து நடகக வேண்டும். எதிர்ப்பு காட்டுவோர் தம்மையே குற்றவாளியாக்கிக் கொள்வர்.

VIII. கட்டாயமாக தேவைப்படும் தண்டனைகளை மட்டுமே சட்டம் அனுமதிக்க வேண்டும். குற்றநிகழ்வுக்கு முன்பே இயற்றப்பட்டு வெளியிடப்பட்டு நடைமுறைக்கும் வந்து விட்ட சட்டத்தின்கீழ்மட்டுமே யாரும் தண்டிககப்படலாம்.

IX. ஒவ்வொரு மனிதனும் குற்றவாளி என்று தீர்வு செய்யப் படாதவரை நிரபராதியே என்பதால், ஒருவரைக் கைது செய்தே ஆகவேண்டும் என்ற நிலைஏற்பட்டால், அடிபோது கூட தேவையற்ற கெடுபிடி கடுமைகள் அனைத்தையும் சட்டம் கடுமையாகத் தடை செய்யவேண்டும்.

X. சட்டம் நிறுவிய பொது அமைதிக்கு ஊறு விளையாத வரையில் யாரும் அவருடைய கருத்துக்களுக்காக மத சார்பான கருத்துக்காகக்கூட தொல்லைபடுத்தப்படக் கூடாது.

XI. மனிதனின் உரிமைகளில் மிகமிக அருமையானவைகளில் ஒன்று எண்ணத்தையும், கருத்தையும் தடையின்றி வெளி யிடும் உரிமை. எனவே ஒவ்வொரு மனிதனும் தவறாகப் பயன்படுத்தியதாக சட்டப்படி நிறுவப்பட்டால், ஏற்க

நேரிடக்கூடிய நிலைமைகளுக்கான தன் பொறுப்பில் எதையும் பேசலாம், எழுதலாம், அச்சிடலாம்.

XII. மனிதனுடைய, குடிமகனுடைய உரிமைகளைப் பேணிக் காக்க பொதுசக்தி இருக்க வேண்டியது தேவையாகிறது. இத்தகு சக்திகள் யாரிடம் தரப்பட்டுள்ளனவோ, அவர்களின் சொந்த நலங்களுக்கல்லாமல், பொதுமக்கள் அனைவர் நலத்துக்காகவும் செயல்படும்.

XIII. அத்தகு பொது சக்திகளை நிர்வகிக்கவும், பிறநிர்வாக செலவு கட்காகவும் பொது வரிவிதிப்பு தேவைப்படுகிறது. அவரவர் சக்திக்கேற்ப அனைவருக்கும் அது சமமாகப் பிரித்து விதிக்கப்படவேண்டும்.

XIV. ஒவ்வொரு குடிமகனுக்கும், நேரடியாகவோ-பிரதிநிதி மூலமோ வரிக்கான தேவை பற்றி விளக்கம் பெறவும், சுதந்திரமாக அது பற்றிய தன் வாக்கினை அளிக்கவும், வசூல் எப்படி செலவாகிறது என்றறியவும், அது செலவிடப்படுவதற்கான விகிதங்களை நிர்ணயிக்கவும், வரி அளவு நிர்ணயிப்பு முறைகள், வசூல், காலவரை ஆகியவற்றையும் நிர்ணயிக்கவும் உரிமை உண்டு.

XV. பொது நிர்வாகப் பிரதிநிதி ஒவ்வொருவரும் சமூகத்துக்குப் பொறுப்பானவர்கள்.

XVI. உரிமைகளுக்கான உத்திரவாதம் உறுதி செய்யப்படாத அதிகாரப் பங்கீடுகள் நிர்ணயிக்கப்படாத சமுதாயம் ஒரு அமைப்பற்ற சமூகமாகக் கருதப்படும்.

XVII. சொத்துரிமையும் பறிக்க முடியாததும் புனிதமானதுமான ஒன்றே. ஆகவே, பொதுத்தேவைக்கான வெளிப்படைக் காரணமில்லாமல் ஒருவரது சொத்துரிமை பறிக்கப்படக் கூடாது. அத்தேவைக்கும் சட்ட ஒப்புதல் வேண்டும். அப்போதும் ஈட்டுத்தொகை முன்னதாகவே வழங்கப்பட வேண்டும்.

3

# உழைக்கும், சுரண்டப்படும் மக்களின் உரிமைப் பிரகடனம்

*கி.பி. 1917ஆம் ஆண்டு நிகழ்ந்த அக்டோபர் (போல்ஷ்விக்) புரட்சிக்குப் பின்பு ரஷ்யாவில் அதிகாரத்தைக் கைப்பற்றிய சோவியத் அரசு பல்வேறு புரட்சிகர நடவடிக்கைகளை எடுத்தது. சமாதான ஆணை, நில ஆணை போன்ற பல ஆணைகளை வெளியிட்டது. ரஷ்ய மக்களின் உரிமைப்பிரகடனம் போன்ற பிரகடனங் களும் வெளிவந்தன. அரசியலமைப்புச் சபையில் போல்ஷ்விக் கட்சியினர் உழைக்கும், சுரண்டப்படும் மக்களின் உரிமைப்பிரகட னத்தை முன் வைத்தனர். சோவியத் அரசினை ஏற்காததாலும் நில ஆணையையும் இந்தப் பிரகடனத்தையும் ஒப்புக் கொள்ளாததாலும் 1918 ஜனவரி 19ஆம் நாள் அரசியலமைப்பு சபை கலைக்கப்பட்டது. பிறகு அகில-ரஷ்ய சோவியத் காங்கிரஸ் வெளியிட்ட இப்பிரகட னத்தின் சில பகுதிகள் கீழே தரப்பட்டுள்ளன.*

---

## I

1. ரஷ்யா தொழிலாளர்கள், போர்வீரர்கள், விவசாயிகள் ஆகியோரது பிரதிநிதிகளின் சோவியத்துகளின் குடியரசாக அறிவிக்கப்படுகிறது. மையத்திலும் உறுப்புப் பகுதிகளிலும் எல்லா அதிகாரங்களும் இந்த சோவியத்களுக்கே.
2. சுதந்திர மக்களின் சுதந்திர கூட்டமைப்பு என்ற அடிப் படையில் சோவியத் தேசியக் குடியரசுகளின் ஒன்றியமாக சோவியத் ரஷ்யக் குடியரசு நிறுவப்படுகிறது.

# II

மனிதனை மனிதன் சுரண்டும் எந்த முறையையும் அழித்தல், வர்க்க அடிப்படையிலான சமூகப் பிரிவுகளை வேரோடு ஒழித்தல், சுரண்டு கிறவர்களை இரக்கமின்றி ஒடுக்குதல், எல்லா நாடுகளிலும் சோஷலிச வெற்றியை ஏற்படுத்துதலும் சமவுடைமை சமுதாய அமைப்பை அங்கெல்லாம் நிறுவுதல் ஆகியவற்றைத் தனது அடிப்படைக் கடமை யாக வகுத்துக்கொண்ட அரசியலமைப்பு சபை கீழ்க்கண்டவாறு மேலும் உறுதி கொள்கிறது.

1. நிலத்தை சமூகத்திற்கு உடைமையாக்குவதை நடைமுறைப் படுத்தும் பொருட்டு நிலத்தில் தனியார் உடைமை ஒழிக்கப் படுகிறது. நிலம் முழுதும் மக்களின பொதுச் சொத்தாக அறிவிக்கப்படுகிறது. சமம் செய்யப்பட்ட பயன்பாடு என்ற தத்துவத்தின்கீழ் விற்றல்-வாங்குதல் இல்லாமல் பாட்டாளி கட்கு அது அளிக்கப்படுகிறது. எல்லாக்காடுகளும், தாதுப் பொருட்களும், அரசுக்கு முக்கியமான நீர்நிலைகள், நதிகள் ஆகியவையும், உயிரினங்களும், பொறிகளும், எல்லா நிலங் களும், விவசாய சொத்துகளும் தேசிய சொத்தாக அறிவிக்கப் படுகிறது.
2. ஆலைகள், ரயில்சாலைகள், சுரங்கங்கள் முதலிய எல்லா உற்பத்தி சாதனங்களும், போக்குவரத்து சாதனங்களும் சோவியத் தொழிலாளர்கள் மற்றும் விவசாயிகளுடையதாக, குடியரசின் கரங்களுக்கு மாறுவதன் முதற்படியாக தொழிலாளர்களின் ஆதிக்கம் பற்றிய சட்டமும் உச்சகட்ட பொருளாதாரக் குழு பற்றிய சட்டமும் ஏற்கப்படுகின்றன. இதன்மூலம் சுரண்டல்வாதிகள் மீதான பாட்டாளி வர்க்க ஆதிக்கம் உறுதி செய்யப்படுகிறது.
3. முதலாளித்துவ நுகத்தடியிலிருந்து பாட்டாளி வர்க்க விடுதலை பெறும் தேவைகளில் ஒன்றாக வங்கிகளனைத்தும் விவசாயிகள் தொழிலாளர்கள் அரசுக்கு உடைமையாவது உறுதி செய்யப்படுகிறது.
4. சமுதாயத்தை உறிஞ்சும் சக்திகளை அழித்தொழிக்கு முகமாகவும் பொருளாதார வாழ்க்கையை கட்டியமைக்கும் முகமாகவும் உழைத்தாக வேண்டிய கட்டாயக் கடமை அறிமுகப்படுத்தப்படுகிறது.
5. பாட்டாளி மக்களுக்கு சர்வ அதிகாரத்தையும் உறுதி செய்யவும், சுரண்டும் வர்க்கத்தின் அதிகாரம் மீண்டும்

வந்துவிடாமல் எல்லா வகையில் உறுதி செய்யவும், உழைக்கும் மக்கள் ஆயுதம் தாங்குவதும், விவசாயிகளும் தொழிலாளர்களும் கொண்ட சோஷலிஸ்ட் செஞ்சேனை அமைக்கப்படுவதும் சொத்துடைய வர்க்கம் முற்றிலும் நிராயுதபாணியாக்கப்படுவதும் சட்டபூர்வமாக்கப் படுகின்றன.

## III

1. அரசியலமைப்பு சபை, மூலதனம் ஏகாதிபத்தியம் ஆகிய சக்திகளின் கோரநரகங்களிலிருந்து மனித குலத்தைப் பிரித்தெடுத்துக் காப்பாற்ற வளைக்க முடியாத உறுதியை வெளிப படுத்தும்வண்ணம் சில முடிவுகளை ஏற்கிறது. இந்த சக்திகளே படுபாதகத்தனமான இன்றைய கோரயுத்தத்தின் மூலம் மண்ணுலகில் குருதியாறு ஓடச் செய்கின்றன. எனவே சோவியத் அரசின் கொள்கையை ஏற்று ரகசிய உடன் படிக்கைகளைக் கிழித்தெறிவது தம்முள் போராடிக் கொண்டிருக்கும் ராணுவத்தையும் விவசாயி-தொழிலாளி வர்க்கத்தையும் இணைத்து அவர்களிடையே பரவலான சகோதரத்துவத்தை ஏற்படுத்துவது இதற்கும் மேலாக புரட்சிகரமான வழிகள்மூலம் எந்த வகையிலும் நாடு சேர்ப்பதும், கப்பங்கட்டுதலுமில்லாததும் நாடுகளிடையி லான சுயேச்சையான தன்னுரிமை அடிப்படையிலுமான மக்களிடையே ஒரு ஜனநாயக சமாதானத்தை நிறுவவும் உறுதி கொள்கிறது.
2. அதே லட்சியத்துக்காக தேர்ந்தெடுக்கப்பட்ட சில நாடுகளில் சுரண்டல்காரர்களின சுகவாழ்வை அமைப்பதற்காக ஆசியாவிலும், காலனிகளிலும், சிறுநாடுகளிலும் நூறாயிரம் கோடி உழைக்கும் மக்களை அடிமைகளாய் வைத்திருக்கும் பூர்ஷ்வா நாகரிகத்தின் காட்டுமிராண்டித்தனங்களை உடைக்கவேண்டும் என்றும் வலியுறுத்துகிறது.

மக்கள் கமிசார் குழு பின்லாந்துக்கு முழு சுதந்திரம் என்று அறிவித்துவிட்டது. பெர்ஷியாவிலிருந்து படைகளைத் திரும்பப் பெறுகிறது; ஆர்மினியர்களுக்கு சுயநிர்ணய உரிமை உண்டு என்று அறிவித்துவிட்டது. இந்தக் கொள்கைகள் அனைத்தையும் அரசியலமைப்பு சபை வாழ்த்திப் பாராட்டுகிறது.

ஜார் அரசாங்கமும், நிலப்பிரபுக்களும், பூர்ஷ்வாக்களும் சம்பந்தப்பட்ட கடன்கள் அனைத்தையும் ரத்து செய்த சோவியத் சட்டம் சர்வதேச நிதி-வங்கித்துறை அமைப்புக்கு முதலடி என்று அரசியலமைப்பு சபை கருதுகிறது.

முதலாளித்துவ நுகத்தடியை எதிர்த்து அனைத்துலக பாட்டாளி வர்க்கத்தின் புரட்சி முற்றுமுழுதான வெற்றியடையும் வரை சோவியத் ஆட்சி தொடர்ந்து துணிவோடு இதே பாதையில் பயணம் தொடரும் என்றும் சபை நம்புகிறது.

# 4

# சுதந்திரச் சூளுரை

*லாகூரில் 1929இல் நடைபெற்ற ஆண்டு மகாநாட்டில் இந்திய தேசிய காங்கிரஸ் பூரண சுயராஜ்யம் (முழுவிடுதலை) அடைவதே தன் லட்சியம் என்று தீர்மானம் நிறைவேற்றியது. ஆண்டுதோறும் ஜனவரி 26ஆம் நாள் சுதந்திர நாளாகக் கொண்டாடுவதென்று தீர்மானிக்கப்பட்டது. மறு ஆண்டு (1930) ஜனவரி 26அன்று நாடெங்கிலும் நடைபெற்ற ஆயிரக்கணக்கான பொதுக கூட்டங்களில் கீழ்வரும் சுதந்திரச் சூளுரை தீர்மானமாக நிறைவேற்றப்பட்டது.*

---

வேறெந்த மக்களையும் போலவே இந்தியர்களுக்கும் சுதந்திரமும், தம் உழைப்பின் பலனை அனுபவிக்கவும், வாழ்வின் தேவைகளை அடையவும், இவைகள்மூலம் வளர்சசிக்கான முழுவாய்ப்பைப் பெறும் மாற்றமுடியாத உரிமை உண்டென்று நாங்கள் நம்புகிறோம். இவ்வுரிமைகளை மறுத்து மக்களை ஒரு அரசு ஒடுக்குமானால் அந்த அரசை மாற்றவும் கவிழ்க்கவும்கூட அம்மக்களுக்கு உரிமை உண்டென்றும் நம்புகிறோம். இந்திய மக்களின் மாற்ற முடியாத உரிமைகளைப் பறித்ததோடன்றி பிரிட்டிஷ் அரசு மக்களைச் சுரண்டியே வாழ்கிறது. இந்தியாவை, அரசியல், பொருளாதார, கலாச்சார, ஆன்மிக ரீதியில் அழித்துவிட்டது. ஆகவே பிரிட்டிஷ் தொடர்பை துண்டித்துக்கொண்டு இந்திய பூர்ண ஸ்வராஜ் (முழு விடுதலை) அடைந்தே தீரவேண்டும் என்று நாங்கள் நம்புகிறோம்.

இந்திய பொருளாதாரத் துறை நாசமாக்கப்பட்டுவிட்டது. எங்கள் மக்களுடைய வருமானத்துக்கும், அவர்கள் செலுத்தும் வரிக்கும் ஒரு தொடர்புமில்லை. எங்கள் சராசரி வருமானம் ஒரு நாளுக்கு ஏழு பைசா (இரண்டு பென்னிக்கும் குறைவு) நாங்கள் கட்டும் வரியில் 20 சதவிகிதம் ஏழை விவசாயிகளிடமிருந்து

வசூலிக்கப்படும் நிலவரி; 3 சதவீதம் உப்பு வரி என்று எளியவர் தலையில் விழுகிறது.

நூல்நூற்றல் முதலிய கிராமியத் தொழில்கள் அழிக்கப்பட்டு விட்டன. ஆண்டுக்கு 4 மாதம் அவர்களுக்கு வேலை ஏதுமில்லாமல் போயிற்று. கைவினைகள் இல்லாமற் போனதால் அவர்களின் மதிநுட்பம் மங்கிப்போனது. பிற நாடுகளில் இப்படி கைத்தொழில்கள் மங்கிப்போகும்போது செய்யப்படுவதுபோல் இங்கு மாற்று ஏற்பாடெதுவும் செய்யப்படவில்லை.

சுங்கவரியும் நாணயக் கொள்கையும் ஏழை விவசாயினை நசுக்கும் விதமாகவே மாற்றியமைக்கப்பட்டன. எங்கள் இறகுமதியில் பெரும்பகுதி பிரிட்டிஷ் பொருட்களே. பிரிட்டிஷ் உற்பத்தியாளர்களுக்கு சாதகமாகவே எல்லாம் என்பதை சுங்கவரிக் கொள்கை தெளிவாகக் காட்டுகிறது. அதில் கிடைக்கும் வருமானமும் மக்களின் சுமைகளைக் குறைப்பதற்கல்லாது ஆடம்பரமான அரசு நிர்வாகச் செலவுகளுக்கே போய்ச் சேருகிறது. நாணயச் செலாவணி முறையும் பணம் கோடிக்கணக்கில் இந்தியாவிலிருந்து வடிந்துபோவதற்கு வழிசெய்யும் முறையிலேயே திரிக்கப்பட்டுள்ளது.

அரசியல் தளத்தில் இந்தியாவின் நிலை வேறெப்போதும் தாழ்ந்திராத அளவு பிரிட்டிஷ் காலத்தில்தான் தாழ்ந்துபோயிருக்கிறது. எந்த சீர்திருத்தமும் மக்களுக்கு உண்மையான அதிகாரம் எதையும் அளிக்கவில்லை. எங்கள் சமூகத்தின் உன்னத மனிதர்கள் கூட அந்நியர்முன் கைகட்டி நிற்கின்றனர். கருத்துரிமையும் கூடிப் பேசும் உரிமையும் மறுக்கப்பட்டுள்ளன. எங்கள் நாட்டினர் பலபேர் நாட்டைவிட்டோடி அயல்நாட்டிலேயே வாழ வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. அவர்கள் தாயகம் திரும்ப வழியில்லை. நிர்வாகத் திறமையாவும் மழுங்கடிக்கப்பட்டு குமாஸ்தா வேலையும் குற்றேவல் பணிகளுமே எங்களுக்கென்று ஆக்கப்பட்டுள்ளது. அதிலேயே நாங்கள் நிறைவுகாண வேண்டுமாம்.

கலாச்சார களத்தில், எங்களுக்குத் தரப்படும் கல்வி எங்களை எங்கள் வேர்களிலிருந்து பிரித்துவிட்டது. எங்களைப் பிணைத்திருக்கிற சங்கிலியையே அணைத்துக் கொள்ளத்தான் எங்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது.

மனோரீதியாக, கட்டாயமாக எங்களை நிராயுத பாணிகளாக்கியதில் எங்கள் ஆண்மை பாதிக்கப்பட்டுவிட்டது. எங்கள் மனதிலிருந்து எதிர்ப்புணர்ச்சியை நசுக்குவதற்காக முழுப் போர்க்கோலத்தில் நிறுத்தப்பட்டிருக்கிற அந்நிய ஏகாதிபத்திய ராணுவம் எங்களை நாங்களே பாதுகாத்துக் கொள்ள முடியாது

என்றும் எனவே வெளியார் படையெடுப்பிலிருந்து காத்துக் கொள்ள முடியாதென்றும்—அவ்வளவுஏன்?—திருடர், கொள்ளையர், தீயவர் தாக்குதலிலிருந்து எங்கள் வீட்டையும் குடும்பத்தையும்கூட பார்த்துக்கொள்ள முடியாதென்றும் எண்ண வைத்துவிட்டது.

எங்கள் தேசத்துக்கு நான்கு வகையிலும் நாசம் விளைத்த ஒரு ஆட்சிக்கு இன்னமும் பணிந்து நடப்பது மனித மாண்புக்கும் கடவுளுக்குமே எதிரான பாவம் என்பது எங்கள் தெளிவு. ஆனால், எங்கள் உரிமையை மீட்டெடுப்பதற்கு அனைத்திலும் சிறந்த வழி வன்முறை அல்ல என்பதும் எங்களுக்குத் தெரிகிறது. எனவே இயலக்கூடிய வகையிலெல்லாம் நாங்கள் எங்களை பிரிட்டிஷ் அரசிடமிருந்து விலக்கிக் கொள்வோம். விரும்பி அத்துடன் சேர்ந்து பணியாற்றமாட்டோம். வரிகொடாமை முதலான ஒத்துழையாமைக்குத் தயாராக ஆகிக்கொள்வோம். நாங்கள் இணக்கமாய் தந்துவருகிற ஒத்துழைப்பை விலக்கிக் கொண்டு, வரி கொடுப்பதையும் நிறுத்திவிட்டால், அதுவும் எத்தனை நெருக்கடிவரினும் வன்முறைக்கு இடந்தராமலே அப்படிச் செய்தால், மனிதத் தன்மையற்ற இவ்வாட்சி முடிவுக்கு வந்தே தீரவேண்டி நேரும் என்பது எங்கள் சந்தேகமற்ற தெளிவு. எனவே முழு விடுதலையை அடைவதற்கு அவ்வப்போது காங்கிரஸ் கட்சி இடும் ஆணைகளை சிரமேற்கொண்டு நிறைவேற்றுவதென்று நாங்கள் இங்கே இப்போது இத்தீர்மானத்தின்முன் ஒரு புனித முடிவை மேற்கொள்கிறோம்!

# 5

# அடிப்படை உரிமைகளும் பொருளாதாரத் திட்டமும்

*காந்தி இர்வின் ஒப்பந்தம் 5.3.1931இல் கையொப்பமானதை அடுத்து ஒத்துழையாமை இயக்கம் நிறுத்திவைக்கப்பட்டது. இந்திய தேசிய காங்கிரஸ் 1931 மார்ச் 29 முதல் 31 வரை கராச்சியில் கூடியது. அம்மாநாட்டில்; பின்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.*

---

காங்கிரஸ் கூறும் (ஸ்வராஜ்) விடுதலை இந்நாட்டு மக்களுக்கு என்ன தரும் என்பதை அவர்கள் அறிய உதவும் வகையில், காங்கிரஸ் தனது கொள்கை நிலையை அவர்கள் புரிந்துகொள்ளக்கூடிய எளிய மொழியில் கூறவேண்டியது அவசியமென்று இம்மாநாடு கருதுகிறது. மக்கள் சுரண்டப்படுவதை முடிவுக்குக் கொணர வேண்டுமானால் அரசியல் சுதந்திரம் பஞ்சத்தில் வாடும் கோடிக்கணக்கானவர்களின பொருளாதார சுதந்திரத்துக்கும் வகை செய்ய வேண்டும். எனவே நாம் (காங்கிரஸ்) ஒப்புக்கொள்ளக்கூடிய எந்த அரசியலமைப்பும் பின்வரும் நலன்களுக்கு வகை செய்ய வேண்டும் அல்லது சுதந்திர இந்திய அரசு அவைகளை வழங்குதற்கு வகை செய்ய வேண்டும்:-

1. அடிப்படை உரிமைகள்—இதில்
   - (i) கூடிப்பேசவும், சங்கங்கள் அமைத்துக் கொள்ளவுமான உரிமை;
   - (ii) பேச்சுரிமையும் எழுத்துரிமையும்;
   - (iii) மனசாட்சி உரிமை, பொது அமைதிக்கும், ஒழுக்கத் துக்கும் ஊறு நேராத வகையில் எந்த மதத்தையும் பின்பற்றவும் அதன்படி வாழவும் உரிமை;
   - (iv) சிறுபான்மையினரின் பண்பாடு, மொழி, எழுத்து ஆகியவற்றுக்கு பாதுகாப்பு;

(v) ஆண்-பெண் பேதமின்றி குடிகள் அனைவருக்கும் சம உரிமை, சமகடமை;

(vi) அரசு பணிகளுக்கும், பதவி, பொறுப்பு, மரியாதை ஆகியவற்றுக்கும் எந்த தொழிலையும், வணிகத்தையும் நடத்துவதற்கும் எந்தக் குடிமகனுக்கும் சாதி, மதம், இனம், பால் எந்த அடிப்படையிலும் எவ்விதத் தடைகளும் இல்லாத நிலைமை;

(vii) பொதுச்சாலைகள், கிணறுகள், பள்ளிகள், பிற பொது இடங்கள் அனைத்திலும் குடிகள் அனைவருக்கும் சமவுரிமை;

(viii) விதிகளுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டு ஆயுதம் வைத்துக் கொள்ளவும் ஆயுதமேந்தவுமான உரிமை;

(ix) சட்டத்துக்குட்பட்டு அல்லாமல் எவருடைய சுதந்திரமும் சரி சொத்தும் சரி பறிக்கப்படக்கூடாது, சொத்தில் அத்துமீறல் பிரவேசங்கள் கூடாது என்பதற்கான உரிமை ஆகியவையும் அடங்கும்.

2. மதச்சார்பற்ற அரசு

3. வயது வந்தோர்க்கு வாக்குரிமை

4. இலவச ஆரம்பக் கல்வி

5. ஆலைத்தொழிலாளிக்கு அடிப்படை வாழ்வுக்கான சம்பளம், குறிப்பிட்ட வேலைநேரம், ஆரோக்கியமான தொழிற்சூழல், முதுமைக்கால பொருளாதாரத்துக்கு உத்தரவாதம் நோயிலிருந்தும், வேலையின்மையிலிருந்தும் பாதுகாப்பு.

6. தொழிலாளர்களுக்கு அடிமைத்தனம் அல்லது அடிமைத் தனத்தை ஒட்டிய நிலைகளிலிருந்து விடுவிப்பு.

7. பெண் தொழிலாளிகளுக்கு பாதுகாப்பு; குறிப்பாக தாய்மைக் கால விடுமுறை.

8. பள்ளி செல்லும் வயதினர் தொழிற்சாலைகளில் வேலை செய்யத்தடை

9. தமது நலன்களைப் பாதுகாத்துக்கொள்ள தொழிலாளர்கள் சங்கம் அமைத்துக்கொள்ள உரிமை; நடுவர்மூலம் சச்சரவு களைத் தீர்த்துக் கொள்ள நேரிய ஏற்பாடுகள்.

10. விவசாயிகள் செலுத்தும் நிலக்குத்தகையிலும், வரியிலும் பெரும் குறைப்பு; போதிய வருவாய் தராத சிறு உடைமை களுக்கு, குறிப்பிட்ட காலத்துக்கு தேவையான வரிவிலக்கு; தேவைக்கேற்ப, உரிய முறையில் சிறுமிராசுதார்களுக்கும் அத்தகைய சலுகைகள்.

11. குறிப்பிட்ட குறைந்த பட்ச வருமானத்துக்கு மேல் வருமானம் உள்ளவர்களுக்கு முற்போக்கு விகிதத்தில் விவசாய வருமான வரி.
12. படிப்படியான வாரிசுரிமை வரி.
13. இராணுவச் செலவை இப்போதுள்ள அளவிலிருந்து குறைந்தது 50 சதவீதம் குறைத்தல்;
14. பிற அரசு செலவினங்களையும், சம்பளங்களையும் பெருமளவு குறைத்தல், குறிப்பிட்ட பணிக்காக நிபுணர்கள் என்ற அளவில் நியமிக்கப்படுவோர், அவர்களைப் போன்றோர் தவிர பிற அரசுப் பணியாளர்களின் ஊதியத்துக்கு உச்சவரம்பு. பொது வாக அது மாதம் 500 ரூபாய்க்குமேல் போகக் கூடாது.
15. வெளி நாட்டு நூலுக்கும் அந்நியத் துணிக்கும் தடை விதிப்பதன்மூலம் உள்நாட்டுத் துணிக்கு பாதுகாப்பு.
16. முழுமதுவிலக்கும், போதைப்பொருட்களுக்கான முழுத் தடையும்.
17. உள்நாட்டு உப்புக்கு வரிவிலக்கு.
18. இந்தியத் தொழில்களுக்கு உதவக் கூடியதும் ஏழை மக்களுக்கு ஆறுதலானதுமான சுங்க வரிக்கொள்கையும்-நாணய அமைப்பும்.
19. முக்கியத் தொழில்கள் மீது அரசு கட்டுப்பாடு; கனிமங்களின் அரசுடைமை.
20. நேரடியாகவும் மறைமுகமாகவும் வட்டித்தொழில்மீது கட்டுப்பாடுகள்.

# 6

# இந்திய விடுதலை ஆவணம்

*சுதந்திர இந்தியாவிற்கான அரசியல் நிர்ணய சட்டத்தை உருவாக்க தனது கூட்டத்தை 9.12.1946 அன்று துவங்கிய இந்தியாவின் அரசியல் நிர்ணயசபை 22.1.1947 அன்று ஒருமனதாய் நிறைவேற்றிய தீர்மானம்.*

---

இந்தியா ஒரு சுயேச்சையான இறையாண்மைக்கு குடியரசு என்று பிரகடனப்படுத்தவும், அந்த இந்தியாவின் எதிர்கால ஆட்சி முறைக்காக ஒரு அரசியல சட்டத்தை உருவாக்கவுமான தனது உறுதியான புனிதத் தீர்மானத்தை இந்த அரசியல் நிர்ணய சபை தெரிவித்துக் கொள்கிறது.

அதில் இப்போது பிரிட்டிஷ் இந்தியாவில் அடங்கியுள்ள பகுதிகளும், இந்திய அரசர்களின் நாடுகளில் அடங்கியுள்ள பகுதிகளும், பிரிட்டிஷ் இந்தியாவுக்கு வெளியில் உள்ள அத்தகைய பகுதிகளும், சுதந்திர இறையாண்மை கொண்ட இந்தியாவில் இணைய விரும்பும் அரசுகளும் பிற பகுதிகளும் இணைந்து அவற்றின் ஒன்றியமாக அமையும்; மேலும்

அதில் அந்தந்தப் பகுதிகள், தற்போதைய எல்லைகளுக்குள் இந்த சபை நிர்ணயிக்கும் எல்லைகளுக்குள் அல்லது பிறகு அரசியல் சட்டம் நிர்ணயிக்கும் எல்லைகளுக்குள், சுயஉரிமை கொண்ட பகுதிகள் என்ற உரிமை பெற்று, அவ்வுரிமையுடன் விளங்கும். மத்திய அரசில் பொதிந்தோ மத்திய அரசுக்கு அளிக்கப்பட்டோ உள்ள அதிகாரங்களும் பணிகளும் மைய அரசுக்கு என்று தம்மளவிலேயே உரித்தாகிற அதிகாரங்களும் பணிகளும் அரசுக்கும் நிர்வாகத்துக்கும் உரிய அதிகாரங்களையும் பணிகளையும் கொண்டவையாய் விளங்கும். மிகை அதிகாரங்கள் அவற்றிடமிருககும்; மேலும்

அதில் இறையாண்மை கொண்ட இந்தியக் குடியரசாயினும்

சரி, அதனை உருவாக்கும் மாநிலங்களாயினும் சரி, அரசாங்கத்தின் உறுப்புகளாயினும் சரி, தம் அதிகாரங்களையும் தகுதிகளையும் மக்களிடமிருந்தே பெறும். மேலும், அதில் இந்திய மக்கள் அனைவருக்கும் அரசியல், பொருளாதார சமூக நீதியும், வாய்ப்புகளிலும் மரியாதையிலும் சட்டத்தின் முன்பும் சமத்துவமும், எண்ணம், கருத்து வெளியீடு, நம்பிக்கை, மதம், வழிபாடு, தொழில், சங்கமாய்க்கூடுதல், செயல்படல் ஆகியவற்றில் சுதந்திரமும், சட்டத்திற்கும் பொது ஒழுக்கத்துக்கும் ஊறுவராத வரையில், தரப்பட்டு அவற்றுக்கு உத்தரவாதமும் அளிக்கப்படும்; மேலும்

அதில் சிறுபான்மையினர், பிற்பட்ட பகுதிகள் மலைப்புறப் பகுதிகள் ஒடுக்கப்பட்ட மற்றும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர்க்குப் போதுமான பாதுகாப்புகள் அளிக்கப்படும்; மேலும்

அதன்மூலம் குடியரசின் நிலப்பரப்பின் ஒருமையும், நிலம், நீர், வானம் ஆகியவற்றில் அதன் இறையாண்மையும் நாகரிக நாடுகளின் சட்டங்களுக்கு உடபட்டு உறுதி செய்யப்படும்; மேலும்

இப்பழம்பெரும் பூமி உலக நாடுகளிடையே தனக்குரிய மதிப்பினை அடையவும், உலக அமைதிக்கும் மனிதகுல நன்மைக்கும் தன் முழுப்பங்களிப்பையும் உவந்து தரும்.

# 1

# ஐக்கிய நாடுகள் மன்ற அமைப்புத் திட்டம்

*இரண்டாம் உலகப் பெரும்போரின்போது, இனவெறி அரசுகளையும் அதன் கூட்டணி நாடுகளையும் எதிர்த்துப் போரிட்ட நாடுகளின் பிரதிநிதிகளின் கூட்டங்களும் மாநாடுகளும் நடைபெற்றன. இந்நாடுகள் 1942 ஜனவரியிலிருந்து ஐக்கிய நாடுகள் என்றறியப்பட்டன. அக்கூட்டங்களிலும் மாநாடுகளிலும் போரைத் தொடர்வதற்கான பொதுவான தந்திரங்கள் குறித்தும், அவர்கள் அப்போரில் ஈடுபடுவதன் நோக்கங்கள் குறித்தும் பேசப்பட்டது. ஒப்பந்தங்கள் உருவாக்கப்பட்டன. பிரிட்டன் அமெரிக்கா, சோவியத்நாடு, சீனா ஆகியவற்றின் பிரதிநிதிகள் அமெரிக்காவில் டம்பர்ட்டன் ஒக்ஸ் எனுமிடத்தில் கலந்து பேசினர். சமாதானத்தை நிலைநாட்ட ஒரு நிறுவனம் அமைப்பதற்கு அங்கே திட்டமிட்டனர். அந்தத்திட்டம் 25.4.1945 முதல் அமெரிக்காவில் சானபிரான் சிஸ்கோ நகரில் நடந்த ஒரு மாநாட்டில் விவாதிக்கப்பட்டது.*

---

இந்தியா உட்பட 50 நாடுகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். அந்த நாடுகள் அனைத்தும் 26.6.1945 அன்று ஐ.நா. மன்ற அமைப்புத்திட்டத்தில் கையெழுத்திட்டனர். அதுவே ஐ.நா. அமைப்புச்சட்டமாயிற்று. அது 24.10.1945 முதல் நடைமுறைக்கு வந்தது. இனவெறிக் காட்டுமிராண்டித் தனத்துக்கு எதிரான போரில் ஈடுபட்டிருந்த மக்களின் ஆசைகளை அது எதிரொலித்தது. “அடிப்படை மனித உரிமை”களிலும் “மனிதப் பிறவியின் மதிப்பு மரியாதை” ஆகியவற்றிலும் நம்பிக்கையைத் தெரிவித்தது.

அந்த ஆவணத்தில் முகப்புரையையும் விதி1, விதி 55 ஆகியவற்றையும் இப்போது காணலாம்.

"ஐக்கிய நாடுகளின் மக்களாகிய நாங்கள் இனிவரும் சந்ததியினரை நம் கண்முன் இருமுறை மனிதகுலத்துக்கு சொல்ல இயலாத்துயரம் சேர்த்த போரின் அழிவிலிருந்து காக்கவும்;

அடிப்படை மனித உரிமைகளிலும், மனிதப் பிறவியின் மதிப்பு மாண்பு இவற்றில் ஆடவர், மகளிர் அனைவருக்கும் உரிமைகள் சமம் என்பதிலும் அதேபோல் நாடுகளிலும் பெரியன சிறியன அனைத்துக்கும் சமவுரிமை என்பதை உறுதிப்படுத்தவும்;

சர்வதேச சட்டங்களின் மூலங்களான ஒப்பந்தங்களிலும் பிறவற்றிலிருந்தும் எழும் கடமைகளுக்கு மரியாதையும் நீதியும் கிடைக்கும்படியான சூழ்நிலைகளை உருவாக்கவும்;

பரவலான சுதந்திரத்தில் சமூக முன்னேற்றத்தையும் இன்னும் உயர்வான வாழ்க்கைத்தர நிர்ணயங்களையும் வளர்க்கவும்;

அத்துடன் அந்த நோக்கங்களுக்காக—

அண்டை வீட்டுக்காரர்களாய் ஒருவருக்கொருவர் அன்பும் சகிப்பும் கொண்டு சமாதானமாகக் கூடி வாழவும்;

அனைத்துலக அமைதியையும் பாதுகாப்பையும் பேணும் வகையாய் நமது வலிமையை இணைத்துக் கொள்ளவும்;

தத்துவங்களை ஒப்புக்கொள்வதன்மூலமும், வழிவகைகளை ஏற்படுத்திக் கொள்வதன்மூலம், பொதுநன்மைக்காக மட்டுமே தவிர, ஆயுத பலம் பயன்படுத்தப்படாது என்பதை உறுதி செய்யவும்;

உலகமாந்தர் அனைவரது பொருளாதார-சமூக முன்னேற்றத்துக்குமாக சர்வதேச அமைப்புகளைப் பயன்படுத்தவும்;

முடிவெடுத்து—

அதை நிறைவேற்ற நமது முயற்சிகளை இணைப்பதென்று உறுதிபூணுகிறோம்.

அதன்படி, தமது முழு அதிகாரமும் சிறப்பாகவும் ஒழுங்காகவும் இருப்பதை எடுத்துக்காட்டிவிட்ட நமது அரசாங்கங்கள் சான்பிரான்சிஸ்கோவில் கூடியுள்ள பிரதிநிதிகள் மூலம் இந்த ஐ.நா. அமைப்புச்சட்டத்தை ஏற்றுக்கொண்டு இப்போது இதன்மூலமே ஐக்கிய நாடுகள் என்று அறியப்படவிருக்கிற சர்வதேச அமைப்பினை நிறுவுகிறோம்."

**விதி 1**

1. சர்வதேச சமாதானத்தையும் பாதுகாப்பையும் நிறுவவும், அதற்காக சமாதானத்துக்கெதிரான எந்த சவாலையும் தடுத்து

விலக்கவும், படையெடுப்பு முயற்சிகளையும், அமைதியைக் குலைக்கும் நிகழ்ச்சிகளையும் எதிர்ப்புகளை ஒடுக்கவும் நாடுகளுக்கிடையிலான சச்சரவுகளையும், சமாதானத்தைக் குலைக்கக் கூடிய எந்த சூழ்நிலையையும் சமாதானவழிகளில், நியாய தத்துவங்களுக்கும் சர்வதேசச் சட்டத்துக்கும் இசைந்து கட்டுப்படுத்தவும்;

2. மக்களின் சுயநிர்ணய உரிமையையும், சமவுரிமையையும் மதித்து அவ்வண்ணமே நாடுகளிடையே நட்புறவை வளர்க்கவும் உலக அமைதியைப் பேணிக்காகக உரிய பிற நடவடிக்கையை எடுக்கவும்,

3. பொருளாதாரம் சமூகம் கலாச்சாரம் மனித நேயம் எது குறித்தும் நாடுகளுககிடையில் ஏதும் கருத்துவேறுபாடு எழுந்தால், அதனைத் தீர்க்க உலக நாடுகளின் கூட்டுறவை உருவாக்கவும் இன, மத, மொழி, பால் வேறுபாடின்றி மனித உரிமைகள், அடிப்படை சுதந்திரங்கள எல்லா மாந்தருக்கும் உண்டென்ற தத்துவத்தை மதிக்கச் செய்து பாப்பவும்;

4. இந்தப் பொதுக் குறிக்கோள்களை அடைவதற்காக நாடுகள் எடுக்கும் நடவடிக்கைகளை இணைக்க ஒரு மையமாகவும் செயல்படத் திட்டமிட்டுள்ளது.

## விதி 55

சமவுரிமையிலும் மக்களின் சுயநிர்ணய உரிமையிலும் மரியாதை வைக்கும் நாடுகளிடையே சமாதானமான நட்புறவு உருவாவதற்கு தேவையான நிச்சயத்தன்மையும், நல்வாழ்வும் நிலவக்கூடிய சூழலை உருவாக்கும் நோக்கில் ஐக்கியநாடுகள்—

அ. உயர்ந்த வாழ்க்கைத்தரம், முழு வேலைவாய்ப்பு, சமூக-பொருளாதார முன்னேற்றத்துக்கும் வளர்ச்சிக்குமான நிலைமைகளையும்;

ஆ. நாடுகளுக்கிடையேயான பொருளாதார-சமூக-சுகாதாரச் சிக்கல்களுக்கு தீர்வுகளையும், அனைத்துலக கலாச்சார ஒத்துழைப்பையும், கல்வித் துறை ஒத்துழைப்பையும்;

இ. இன, பால், மொழி, மத வேறுபாடின்றி அனைவருக்கும் மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் உண்டென மதிப்பதையும், அந்தத் தத்துவத்தை பின்பற்றுவதையும் பேணிக்காத்து வளர்க்கும்.

# 2

# மனித உரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனம்

*ஐ.நா. பொதுச்சபை 10.12.1948 அன்று மனித உரிமைகள் பற்றிய சர்வ தேசியப் பிரகடனத்தை நிறைவேற்றி வெளியிட்டது. அதில் விவரிக்கப்பட்டுள்ள மனித உரிமைகள் பட்டியல் 'எல்லா நாடுகளுக்கும், எல்லா மாந்தருக்கும் சாதிக்கப்படவேண்டிய' பொது தரத்தை விளக்குகிறது. இதன் உலகளாவிய சரித்திரப் புகழ் காரணமாக டிசம்பர் 10ஆம் நாள் உலக மனித உரிமைகள் நாளாக ஆண்டுதோறும் அனுசரிக்கப்பட்டுவருகிறது. முழு வடிவில் பிரகடனம் இங்கு தரப்பட்டுள்ளது.*

---

## முகப்புரை

உலகில் சுதந்திரம், நியாயம், சமாதானம் ஆகியவற்றுக்கு அடிப்படை மனிதக் குடும்பத்தின் உறுப்பினர் அனைவருக்கும் சுயம்புவான மதிப்பு, அவர்களின் சமமான மாற்றவொண்ணாத உரிமைகள் ஆகியவற்றுக்கு உள்ள அங்கீகாரமேயாகும் என்பதாலும்,

மனித உரிமைகளுக்கான அவமதிப்பும் அவமரியாதையும் காட்டுமிராண்டி நடவடிக்கைகளில் கொண்டுபோய் விட்டுள்ளன; அத்தகு நடவடிக்கைகள் மனிதகுலத்தின் மனசாட்சியை சிதைத் துள்ளன; பொதுவான மக்களின் உச்சமான ஆசை என்று "இவ்வையத்து மாந்தருக்கெல்லாம் பேச்சுரிமையும், நம்பிக்கை உரிமையும், அச்சம்-தேவை இரண்டிலிருந்தும் விடுதலையும் கிடைக்கக் கூடிய புதியதோர் உலகம் உருவாக்க வேண்டும் என்று பிரகடனம் செய்யப்பட்டுள்ளது என்பதாலும்,

அடக்குமுறையையும் சர்வாதிகாரத்தையும் எதிர்க்க புரட்சிக்கு, கடைசி வழியாகக்கூட, மனிதன் போகக்கூடாதென்றால்

சட்டத்தின்மூலம் மனித உரிமைகள் பாதுகாக்கப்படவேண்டும் என்பதாலும்,

நாடுகளுக்கிடையே நட்புறவைப் பேணிக்காப்பது அத்தியா வசியம் என்பதாலும் ஐக்கிய நாடுகளைச் சேர்ந்த மக்கள் தமது பிரகடனத்தில் அடிப்படை மனித உரிமைகளிலும் மனிதப் பிறவியின் மதிப்பு-மரியாதை ஆகியவற்றிலும் ஆண், பெண் அனைவரது சமவுரிமையிலும் தமது நம்பிக்கையை மறு அங்கீகாரம் செய்து, பரவலான சுதந்திரத்தில் சமூக முன்னேற்றத்தையும் இன்னும் மேலான வாழ்க்கைத்தர நிர்ணயிப்பையும் வளர்த்தெடுக்க உறுதி பூண்டுள்ளனர் என்பதாலும்.

உறுப்பு நாடுகள் ஐ.நா. உதவியுடன் மனித உரிமைகள், அடிப்படை சுதந்திரங்கள் ஆகியவற்றுக்கு உலக மரியாதையையும், ஏற்பினையும் பேணிக்காப்பதை சாதிக்க தம்மை அர்ப்பணித்துக் கொண்டுள்ளன என்பதாலும்,

அந்த அர்ப்பணிப்பில் முழுதாக வெற்றிபெற இந்த உரிமைகளையும், சுதந்திரங்களையும் ஒரேவிதமாகப் புரிந்துகொள்வது அனைத்திலும் அத்தியாவசியம் என்பதாலும், இப்போது

## ஐ.நா. பொதுச்சபை

எல்லா நாடுகளும், இவ்வையத்து மாந்தருக்கெல்லாம் சாதிக்க வேண்டிய பொதுவான தரமாக இந்த 'சர்வதேசிய மனித உரிமைப் பிரகடனத்தை' பிரகடனப்படுத்துகிறது. ஒவ்வொரு மனிதனும், சமூகத்தின் ஒவ்வொரு அங்கமும், எப்போதும் இதனையே மனதி லிருத்தி கல்விமூலமும் பயிற்றுவித்தல் மூலமும் முற்போக்கு நடவடிக்கைகளால் இந்த உரிமைகளையும் சுதந்திரங்களையும் மதிக்கக் கற்பிக்க வேண்டும். இப்பணி தேசிய அளவிலும், உலகளாவியும் நடக்க வேண்டும்; இந்த உரிமைகளும் சுதந்திரங்களும் பயனுள்ள முறையில் உலகம்முழுவதும் ஏற்கப்படவும், அனுசரிக்கப் படவும் வேண்டும், இது உறுப்பு நாடுகளிலும் அவர்களது கட்டுப் பாட்டில் உள்ள பகுதி மக்களிடையேயும் நடந்தாக வேண்டும் என்பதே இப்படிப் பிரகடனப்படுத்துவதன் குறிக்கோளாகும்.

## விதி 1

அனைத்து மனிதரும் சுதந்திரமாயும் சம உரிமை, சமமதிப்போடும் பிறக்கின்றனர். அவர்கள் மனசாட்சியும் பகுத்தறிவும் கொண்டு விளங்குகிறார்கள். ஒருவரோடொருவர் சகோதர உணர்வுடன் பழக வேண்டும்.

**விதி 2**

இனம், நிறம், பால், மொழி, மதம், அரசியல் அல்லது வேறு ஏதாவது கருத்துகள், தேசியம், சமூகம், சொத்து, பிறப்பு கவுரவம் என்ற எவ்வித வேறுபாடு இன்றி உலக மாந்தர் அனைவரும் இந்தப் பிரகடனத்தில் கூறப்பட்டுள்ள உரிமைகளுககும் சுதந்திரங்களுக்கும் பாத்தியப்பட்டவர்கள். மேலும், ஒருவர் சார்ந்துள்ள நாடு அல்லது பிரதேசத்தின் அரசியல், அதிகார எல்லை, உலக நாடுகளிடையே அதன் மதிப்பு போன்றவை கருதிகூட—அது சுதந்திரநாடோ, பாதுகாக்கப்படும் பகுதியோ, சுயாட்சியற்றதோ, எவ்விதத்திலேனும் முழு இறையாண்மையற்றதோ எப்படியாயினும் அவருக்கு எவ்வித பேதமும் காட்டப்படலாகாது.

**விதி 3**

ஒவ்வொருவருக்கும் வாழும் உரிமை, சுதந்திரம், தனக்கான பாதுகாப்பு ஆகிய உரிமைகள் உண்டு.

**விதி 4**

அடிமையென்றோ, கூலிக்காரன் என்றோ எவருமில்லை; சகலவித அடிமை முறைகளும், அடிமை வணிகமும் தடுக்கப்படுகின்றன.

**விதி 5**

யாரையும் சித்திரவதைக்கோ, கொடுமையான மனித நேயமற்ற தாழ்மைசெய்யும் நடத்துமுறைகளுக்கோ தண்டனைக்கோ ஆட்படுத்தக்கூடாது.

**விதி 6**

சட்டத்தின்முன் ஒரு மனிதனாக நடத்தப்படும் உரிமை எங்கும் எவருக்கும் உண்டு.

**விதி 7**

சட்டத்தின்முன் அனைவரும் சமம்; எந்தப்பாகுபாடுமின்றி சட்டத்தின் பாதுகாப்பும் எல்லாருக்கும் சமமாக உரியது. இந்த ஆவணத்தின் எப்பகுதியை மீறியாவது இழைக்கப்படும் பாகு பாடுகளுக்கும், அத்தகைய பாகுபாடுகளைத் தூண்டிவிடும் எச்செயலுக்கும் எதிராக சமமான பாதுகாப்பும் எல்லா மனிதருக்கும் உரியதாகும்.

**விதி 8**

அரசியல் சட்டத்திலோ பிற சட்டத்திலோ தரப்பட்டிருக்கும் அடிப்படை உரிமைகளின் மீறலாக அமையும் எச்செயலுக்கும் எதிராக, தக்க அதிகாரம் படைத்த அந்த(ந்த) தேச நீதியமைப்புகளில் சரியான பரிகாரம் பெறும் உரிமை அனைவருக்கும் உண்டு.

**விதி 9**

சட்டவிரோதமாக யாரும் அடைத்துவைக்கப்படவோ, கைது செய்யப்படவோ, நாடு கடத்தப்படவோ முடியாது.

**விதி 10**

தம் கடமைகள் உரிமைகள் குறித்தோ, சாட்டப்பட்ட குற்றச்சாட்டு பற்றியோ, நடுநிலையான சுயேச்சையான நீதி மன்றங்களில் நேரிய, வெளிப்படையான விசாரணை பெற எல்லோருக்கும் முழுமையான சம உரிமை உண்டு.

**விதி 11**

1. குற்றம்சாட்டப்பட்ட எவருக்கும், விசாரணைப்படி குற்றம் நிரூபிக்கப்படாதவரை நிரபராதி என்றுதான் கொள்ளப்பட வேண்டும் என்ற உரிமை உண்டு. அதுவும், விசாரணை சட்ட பூர்வமானதாகவும், வெளிப்படையாகவும் அமையவேண்டும். அதிலும் அவருக்கு தனது நிலையை எடுத்துக்கூறி தற்காத்துக் கொள்ளத் தேவையான அனைத்து உறுதிகளும் செய்து தரப்பட்டிருந்திருக்கவும் வேண்டும்.
2. ஒரு செயலை செய்தபோதோ அல்லது செய்யவேண்டியதை செய்யாமல் விட்டபோதோ அந்த காலகட்டத்து சட்டப் படியோ சர்வதேச சட்டப்படியோ அது குற்றமல்லவெனில் ஒருவர் அதற்காக குற்றவாளி என்று தீர்மானிக்கப்படக்கூடாது. அதேபோல் தவறு செய்திருந்தாலும் தவறு செய்யப்பட்ட காலகட்டத்தில் அதற்கு விதிக்கப்பட்டிருந்த தண்டனையை விட பெரிய தண்டனை அவருக்கு வழங்கப்படக்கூடாது.

**விதி 12**

ஒருவரது குடும்பம், தனிவாழ்வு, வீடு, கடிதம் எதிலும் சட்டம் அனுமதிக்காத அத்துமீறல் கூடாது. அவரது புகழ் மரியாதை முதலிய வற்றுக்கும் ஊறுவிளைவிக்கக் கூடாது. அத்தகைய அத்துமீறல்கள், தாக்குதல்கள் ஆகியவற்றுக்கு எதிராக சட்டத்தின் பாதுகாப்பைப் பெறும் உரிமை அனைவருக்கும் உண்டு.

விதி 13

1. தமது நாட்டில் எங்கு வேண்டுமாயினும் சுதந்திரமாக நடமாடும் உரிமையும், வசிக்கும் உரிமையும் எவருக்கும் உண்டு.
2. எவரும் எந்த நாட்டையும் விட்டு தாயகம்விட்டுக்கூட போகலாம், தாயகம் திரும்பலாம்.

விதி 14

1. வேட்டையாடப்படுவதிலிருந்து தப்ப எந்த வெளிநாட்டிலும் புகல்தேடி சரணடையும் உரிமையும அனைவருக்கும் உண்டு.
2. ஆனால் அரசியல் சாராத குற்றமிழைத்தவர்களுக்கும், ஐ.நா.வின் நோக்கங்களுக்கோ தத்துவங்களுக்கோ முரணாக செயல்பட்டவர்களுக்கும் இவ்வுரிமை கிடையாது

விதி 15

1. அனைவருக்கும் ஒரு தேசியம் கோரும் உரிமை உண்டு.
2. சட்டவிரோதமாக எவரது தேசியமும் பறிமுதல் செய்ய முடியாது. ஒருவர் தம் தேசியத்தை மாற்றிக் கொள்ளும் உரிமையும் தடைசெய்யப்பட முடியாதது.

விதி 16

1. வயது வந்த ஆண்பெண் அனைவருக்கும், இனம், மதம், தேசம் என்ற பேதமின்றி மணம்புரியவும் குடும்பம் நடத்தவும் உரிமை உண்டு. திருமண உரிமையும், மணவிலக்கு உரிமையும் எல்லாருக்கும் பொதுவே.
2. திருமணம் என்பது சம்பந்தப்பட்டவரின் சுதந்திரமான முழு ஒப்புதல் கொண்டே நடக்க இயலும்.
3. குடும்பம் என்பது சமூகத்தின் இயற்கையான, அடிப்படையான குழு அடிப்படை. அதற்கு சமூகப் பாதுகாப்பும் சட்டப் பாதுகாப்பும் உறுதியளிக்கப்படுகிறது.

விதி 17

1. ஒவ்வொருவருக்கும் தனியாகவோ யாருடன் கூட்டாகவோ சொத்துக்கள் வைத்துக் கொள்ள உரிமை உண்டு.
2. யாருடைய சொத்தும் சட்டப்படியாக அன்றி பறிமுதல் செய்யப்பட முடியாது.

### விதி 18

எல்லாருக்கும்கருத்துச் சுதந்திர உரிமையும், மத உரிமையும், மனச் சான்று உரிமையும் உண்டு. இதில் தன் மதத்தையோ, நம்பிக்கையோ மாற்றிக் கொள்ளுதல், தனியாகவோ பிறருடன் இணைந்தோ தனி யிடத்திலோ பொதுவிலோ, தனது நம்பக்கையையோ, மதத்தையோ கடைப்பிடித்தல், கற்பித்தல், அதற்கேற்ப தொழுகைபுரிதல், வாழ்தல் என்ற உரிமைகளும் வரும்.

### விதி 19

அனைவருக்கும் கருத்துரிமையும் அதை வெளியிடும் உரிமையும் உண்டு. குறுக்கீடு இன்றி தன் கருத்துக்களைக் கொண்டிருப்பதற்கும் செய்திகளை தேடிச் செல்லவும் பெறவும், பரப்பவும் எல்லை பற்றிய தடைகளின்றி எந்த ஊடகம் வழியே செய்திகளைப் பெறவும், கொடுக்கவும் உள்ள உரிமையும் இதிலடங்கும்.

### விதி 20

1. அமைதியாகக் கூடவும், மன்றங்கள் அமைத்துக் கொள்ளவும் யாவருக்கும் உரிமை உண்டு.
2. ஒரு குறிப்பிட்ட சங்கத்தில் சேருமாறு யாரையும் கட்டாயப் படுத்த முடியாது.

### விதி 21

1. தன்நாட்டில் ஆட்சியில் நேரடியாகவோ முகவர்கள் வழியாகவோ பங்குபெறும் உரிமை யாவருக்கும் பொது.
2. தன்நாட்டின் அரசு சேவைகளைப் பெறுவதில் எல்லாருக்கும் சம உரிமை உண்டு.
3. மக்களின் விருப்பமே அரசு அதிகாரத்தின் அடிப்படை ஆகும். அந்த விருப்பம் குறித்த காலத்திற்கு ஒரு முறை நடைபெறும் மெய்யான தேர்தல்மூலம் தெரிவிக்கப்படும். தேர்தல்களில் அனைவருக்கும் வாக்குரிமை உண்டு. ஆளுக்கு ஒரு வாக்குதான். அதுவும் ரகசிய வாக்குமூலம் அல்லது அதற்கிணையான சுதந்திர தேர்வுமுறை மூலம் நடைபெறும்.

### விதி 22

சமூகத்தின் உறுப்பு என்ற முறையில் ஒவ்வொருவருக்கும் சமூகப் பாதுகாப்புரிமை உண்டு. தேசிய முயற்சியும் பன்னாட்டுக் கூட்டுறவும் கொண்டு அந்தந்த அரசின் வசதிக்கும் அமைப்புக்கும் ஏற்ப

ஒவ்வொருவரும் தனது மரியாதைக்கு அத்தியாவசியமானதும், தன் ஆளுமையை சுதந்திரமாக வளர்த்துக்கொள்ள இன்றியமையாதது மான பொருளாதார, சமூக, கலாச்சார உரிமைகளை அனுபவிக்கவும் உரிமை உண்டு.

## விதி 23

1. ஒவ்வொருவருக்கும் வேலைவாய்ப்பு உரிமை, வேலையைத் தேர்ந்துகொள்ளும் உரிமையும் நியாயமான ஆரோக்கியமான வேலைச் சூழலுக்கான உரிமையும் வேலையின்மையிலிருந்து பாதுகாப்புக்கான உரிமையும் உண்டு.
2. ஒத்த வேலைக்கு ஒத்த ஊதியம் பெற எவ்வித பேதமுமின்றி எல்லாருக்கும் உரிமை
3. வேலை செய்யும் ஒவ்வொருவருக்கும் நியாயமான நல்லூதிய உரிமை உண்டு. அது அவர் தனக்கும் குடும்பத்துக்கும் மனித மரியாதைக்கு ஏற்ற நலவாழ்வுக்கு வழிவகுப்பதாய் இருக்க வேண்டும். தேவைப்பட்டால் பிறவகை சமூகப் பாதுகாப்பு முறைகளால் அது ஈடு செய்யப்படவேண்டும்.
4. தம் நலன்களைப் பாதுகாத்துக்கொள்ள தொழிற்சங்கம் அமைக்கவோ இருக்கும் அமைப்பில் சேரவோ ஒவ்வொரு வருக்கும் உரிமை உண்டு.

## விதி 24

ஒவ்வொருவருக்கும் ஓய்வுக்கும் பொழுதுபோக்குக்கும் உரிமை உண்டு. இதில் வேலைநேரம் பற்றிய நியாயமான வரம்புகளும சம்பளவிடுப்பு பற்றிய உரிமையும் சேரும்.

## விதி 25

1. உணவு, உடை, உறையுள், மருத்துவவசதி, சமூக வசதிகள் முதலான நலமும் நல்வாழ்வும், தனக்கும் குடும்பத்தினருக்கும் பெறும் வகையிலான வாழ்க்கைத்தரம் என்பதும் அனை வருக்கும் உரிய உரிமை ஆகும். இதில் வேலையின்மை நோய், இயலாமை, முதுமை, கைம்மை முதலான தன் சக்திக்கு அப்பாற்பட்ட காரணங்களால் ஜீவனமே சிரமமாகும் நேரங்களுக்கான பாதுகாப்பும் அடங்கும்.
2. தாய்மையும் குழந்தைமையும் சிறப்பு கவனிப்புக்கும் உதவிக்கும் உரியவை. மணவாழ்வில் பிறந்தாலும், திருமணம் இல்லாத பெற்றோருக்குப் பிறந்திருந்தாலும் எல்லா குழந்தை களுக்கும் ஒரே சமூகப் பாதுகாப்பு உண்டு.

**விதி 26**

1. எல்லாருக்கும் கல்வியுரிமை உண்டு. குறைந்தது ஆரம்பக கல்வி, அடிப்படைக்கல்வி, இலவசமாக இருக்கவேண்டும். ஆரம்பக் கல்வி கட்டாயமாக இருக்கவேண்டும். பொதுவாக தொழிற் கல்விக்கும், தொழில்நுட்பக் கல்விக்கும் ஏற்பாடுகள் வேண்டும். உயர்கல்வி தகுதி அடிப்படையில் எல்லாருக்கும் கிடைக்க வகை செய்யவேண்டும்.
2. மனித ஆளுமையின் முழு வளர்ச்சிக்கானதாகவும் மனித உரிமைகள் அடிப்படை சுதந்திரங்கள் ஆகியவற்றின் மதிப்பை வலுப்படுத்துவதாயும் கல்வியின் நோககம் அமைய வேண்டும். நாடுகளிடையிலும், இனங்களிடையிலும், மதங்களிடை யிலும் புரிந்துகொள்ளுதல், சகிப்பு, நட்புறவு ஆகியவற்றை அந்தக் கல்வி பேணி வளர்க்க வேண்டும். அமைதிக்கான ஐ.நா. நடவடிக்கைகளுக்கு அது உதவியாக அமையவேண்டும்.
3. தங்கள் குழந்தைகள் எத்தகைய கல்வி பெறவேண்டும் என்று தீர்மானிப்பதில் பெற்றோருக்கு முன்னுரிமை உண்டு.

**விதி 27**

1. சமூகத்தின் கலாச்சார வாழ்வில் சுமுகமாக பங்கேற்கவும், கலைகளை அனுபவிக்கவும், அறிவியல் மேன்மைகளில் பங்கு பெற்றுப் பயனடையவும் அனைவருக்கும் உரிமை உண்டு.
2. ஒவ்வோருவருக்கும் தன் முயற்சியால் விளைந்த அறிவியல்/ கலைத்துறை/இலக்கிய சாதனைக்கான பொருளாதார நலன்கள் தார்மிக நலன்களுக்கான பாதுகாப்புரிமையும் உண்டு.

**விதி 28**

இப்பிரகடனத்தில் இடம்பெறும் உரிமைகளையும் சுதந்திரங்களையும் அனுபவிக்க வகை செய்யும் வண்ணம் சமூகத்திலும் சர்வதேச அளவிலும் ஒரு அமைப்பு ரீதியான உரிமை அனைவருக்கும் உண்டு.

**விதி 29**

1. ஒவ்வொருவருக்கும் சமுதாயக் கடமைகள் உண்டு. அவற்றின் மூலம் தான் ஒரு மனிதரின் ஆளுமை யதேச்சையான முழு வளர்ச்சி பெறமுடியும்.
2. தன் உரிமைகளையும் சுதந்திரங்களையும் அனுபவிப்பதில் ஒருவருக்கு ஏற்படுத்தப்படக்கூடிய கட்டுப்பாடுகளுக்கும் சில விதிகள் உண்டு. மற்றவர்களும் தமக்குரிய அத்தகைய

உரிமைகளை அனுபவிப்பதற்கு வகை செய்யும் முறையிலேயே, அவற்றுக்கான மரியாதையும் அங்கீகாரமும் பாதிக்கப்படக்கூடாது என்பதற்கு மட்டுமே அதுவும் அறநெறிகள், பொது அமைதி, ஜனநாயக சமூகத்தின் பொது நன்மை ஆகியவற்றுக்காகவும் மட்டுமே கட்டுப்பாடுகள் அனுமதிக்கப்படும்.

3. ஐ.நா.வின் நோக்கங்களுக்கும் தத்துவங்களுக்கும் முரண்படும் வகையில் இவ்வுரிமைகளும் சுதந்திரங்களும் பயன்படுத்தப் படமாட்டா.

**விதி 30**

இப்பிரகடனத்தில் கூறப்படும் எதுவும் இங்கு கூறப்பெற்ற எந்த உரிமையையும் எந்த சுதந்திரத்தையும் அழிக்கக்கூடியதான எந்த நடவடிக்கையில் ஈடுபடவும், எதைச் செய்யவும் எந்த அரசுக்கும் எந்த மக்கள் குழுவுக்கும் எவ்வித உரிமையும் அளிப்பதாக எவ்வகையிலும் பொருள்கொள்ளப்படக்கூடாது.

# 3

# பொருளாதார சமூக கலாச்சார உரிமைகள் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கை

*மனித உரிமைகள் பற்றிய சர்வதேச பிரகடனமே குறிப்பிட்ட உரிமைகள் பற்றிய ஐ.நா. பிரகடனங்கள், பரிந்துரைகள், ஒப்பந்தங்கள் உடன்படிக்கைகள் ஆகியவை உருவாவதற்கு அடிப்படையாய் அமைந்தது. குடிமக்கள் உரிமைகளும் அரசியல் உரிமைகளும் கொண்ட ஒரு வகையும், பொருளதார சமூக கலாச்சார உரிமைகள் அடங்கிய ஒருவகையுமாக இருவகை உரிமைகளும் விரிவாக்கப்பட்டு பன்னாட்டு பொருளாதார சமூக கலாச்சார உரிமைகள் உடன் படிக்கை, குடியுரிமையும் அரசியல் உரிமையும் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கை என இரு உடன்படிக்கைகள் மாதிரிகளாக உருப்பெற்றன. இம்மூன்று அரசியல் உரிமை, குடிமக்கள் உரிமை பற்றிய பன்னாட்டு உடன்படிக்கையைச் சார்ந்த முதலாம் விருப்பக் குறிப்பேடு, மரணதண்டனை ஒழிப்புக்கான இரண்டாம் விருப்பக் குறிப்பேடு ஆகியவையும் சேர்ந்து ஆக ஐந்து ஆவணங்களும் சேர்ந்த தொகுதி சர்வதேச மனித உரிமைகள் சட்டம் என்று அழைக்கப் படுகிறது. பார் முழுதும் மனித உரிமைகளைப் பரப்பவும் பாதுகாக்கவும் தளம் அமைத்துத்தரும் இந்த ஐந்தொகையே அடிப்படை ஆவணமாகும். பன்னாட்டுப் பொருளாதார சமூக கலாச்சார உரிமைகள் உடன்படிக்கை ஐ.நா. பொதுச் சபையால் 16.12.1966அன்று நிறைவேற்றப்பட்டு 3.1.1976அன்று நடைமுறைக்கு வந்தது. அதிலிருந்து சில பகுதிகள்:*

---

## முகப்புரை

இந்த உடன்படிக்கையில் சேரும் நாடுகள்,

ஐநா. மன்ற அமைப்புத்திட்டம் முரசறையும் தத்துவங்களுக்கு ஏற்ப உள்ளார்ந்த கவுரவம், மாற்றொணாதவையும் சமத்துவமானவையு மான மானிடக் குடும்பத்தின் சகல உறுப்பினர்களுக்கும் உரிய உரிமைகளை அங்கீகரிப்பதே உலகில் சுதந்திரம், சமாதானம், நீதி ஆகியவை தழைக்க அடிப்படை என்பதைக் கருதிப்பார்த்தும்,

— இவ்வுரிமைகள் மானிடனின் உள்ளார்ந்த கவுரவத்திலிருந்து பிறப்பதை ஒப்புக்கொண்டும்,

— மனித உரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனப்படி சுதந்திர மனிதர்கள் அச்சத்திலிருந்தும் தேவையிலிருந்தும் விடுபட வேண்டும் என்ற லட்சியம் ஒவ்வொரு மனிதனும் தனது பொருளாதார சமூக கலாச்சார உரிமைகளையும் அரசியல் உரிமை, குடிமகன் உரிமை ஆகியவற்றையும் அனுபவிக்கக்கூடிய சூழலை உருவாக்குதன் மூலமே அடையப்பட முடியுமெனபதையும் ஒப்புக்கொண்டும்,

— ஐ.நா. அமைப்புத்திட்டத்தின்கீழ் மனித உரிமைகளுக்கும் சுதந்திரங்களுக்கும் உலகு தழுவிய மரியாதையும் அமுலாக்கமும் ஏற்படுத்த வேண்டியது அரசுகளின் கடப்பாடு என்பதைக் கருதிப்பார்த்தும்

— தனிமனிதன் பிற தனிமனிதர்களுக்கும் தான் சார்ந்திருக்கும் சமூகத்துக்கும் கட்டுப்பட்டவன் என்கிற முறையில் இங்கு குறிப்பிடப்பெறும் உரிமைகளைப பரப்பவும் அங்கீகாரத்துக்கு உதவவும் கடமைப்பட்டுள்ளான் என்பதை உணர்ந்தும் கீழ்க்கண்ட விதிகளுக்கு உடன்படுகின்றன:

### பகுதி 1

விதி 1

1. எல்லா மக்களுக்கும் சுயநிர்ணய உரிமை உண்டு. அவ் வுரிமையின்படி அவர்கள் விருப்பம்போல் தமது அரசியல் நிலையை நிர்ணயித்துக் கொண்டு தம் பொருளாதார, சமூக, கலாச்சார வளர்ச்சிக்கு உழைக்கின்றனர்.
2. சர்வதேச சட்டத்தையும் பரஸ்பர நன்மை என்ற தத்து வத்தையும் அடிப்படையாகக் கொண்டு எழும் பன்னாட்டுப் பொருளாதாரக் கூட்டுறவினால் உருவாகும் கடமைகளுக்கு

ஊறுவிளையாத வகையில் தமது இயற்கை செல்வங்களையும் பொருளாதார சக்திகளையும் தமது நன்மைக்கேற்ப ஏதும் செய்து கொள்ள எல்லா மக்களுக்கும் உரிமை உண்டு. தாம் பிழைத்திருப்பதற்கான பொருளாதார வழிவகைகள் எந்த மக்களிடமிருந்தும் பறிக்கப்படுவதென்ற பேச்சுக்கே இடம் கிடையாது.

## பகுதி 2

### விதி 2

1. இவ்வுடன்படிக்கையில் பங்குபெறும் ஒவ்வொரு அரசும் சர்வதேசக் கூட்டுறவு உதவியோடும் தன்னளவிலும், தன் சக்திக்கு உயர்ந்த பட்சம் முடிந்த அளவுக்கு படிப்படியாக இவ்வுரிமைகள் அனைத்தையும் பெறுவதற்கு இசைவாக சட்டமியற்றுதல் உள்ளிட்ட இயன்ற வகை நடவடிக்கைகள் அனைத்தையும் எடுக்கும் என்று உறுதி பூணுகிறது.
2. அத்துடன் இதில்கூறப்படும் உரிமைகள் யாவும் இனம், நிறம், பால், மொழி, மதம் என்ற எந்தவித வேற்றுமையும் பாராட்டாமல், அரசியல், கொள்கை பேதங்களும் பாராமல் தேசியம் எது எந்த சமூகம் என்றும் பிரிக்காமல் பிறப்பு, சொத்து, சமூக நிலை எதையும் பாராமல் நிறைவேற்றப்பட உத்தரவாதமும் அளிக்கிறது.
3. பொருளாதார உரிமைகளைப் பொறுத்தவரை, வளரும் நாடுகள் மனித உரிமைகளையும் கருத்தில் கொண்டு தத்தம் தேசிய பொருளாதாரத்துக்கும் உரிய கவனம் செலுத்தி, இங்கு கூறப்பெறும் பொருளாதார உரிமைகளை பிறநாட்டவருக்கு எந்த அளவு அனுமதிப்பது என்பதைத் தீர்மானிக்கும்.

### விதி 3

இதில் பங்குபெறும் ஒவ்வொரு அரசும் இங்கு இடம்பெறும் பொருளாதார சமூக கலாச்சார உரிமைகள் அனைத்தையும் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக அனுபவிப்பர் என்று உத்தரவாதமளிக்கிறது.

### விதி 4

இவ்வுடன்படிக்கையில் பங்குபெறும் ஒவ்வொரு அரசும் இதன்படி தான் வகை செய்யும் சுதந்திரங்களை அனுபவிப்பதில் அந்த

உரிமைகளுக்கு ஒரு ஜனநாயக நாட்டின் பொது நன்மையைப் பேணுவதற்கு மட்டுமே—அந்த உரிமைகளோடு ஒத்திசைவு கொண்ட அளவு மட்டுமே—அதுவும் சட்டபூர்வமாக மட்டுமே கட்டுப்பாடுகள் விதிக்கலாம் என்பதை ஒப்புக் கொள்கிறது.

## பகுதி 3

### விதி 6

1. இவ்வுடன்படிக்கையில் பங்குபெறும் ஒவ்வொரு அரசும் வேலைசெய்யும் உரிமையை ஒப்புக்கொள்கிறது. அதில் ஒவ்வொருவரும் தான் விருப்பப்பட்ட அல்லது ஏற்றுக் கொண்ட வேலையை செய்து அதன்மூலம் வாழ்வு நடத்திக் கொள்ளும் உரிமையும் அடங்கும். இவ்வுரிமையைப் பாதுகாக்க அரசு தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளும்.
2. இந்த உரிமையை மக்கள் முழுதாய் அனுபவிக்க அரசு எடுக்கும் நடவடிக்கைகளில் தொழில்நுட்பம், செய்வினை ஆகியவற்றில் வழிகாட்டல் பயிற்சித்திட்டங்கள் ஏற்பாடு செய்தல், சமூக-கலாச்சார வளர்ச்சிக்குத் தேவையான கொள்கைகளை வகுத்தல், தொழில்நுட்பம் ஆகியவையும் அடிப்படையான அரசியல் பொருளாதார சுதந்திரங்களைப் பாதுகாக்கும் சூழலில் பயனுள்ள முழு வேலை வாய்ப்புக்கு வகை செய்யும்படி செய்தல், ஆகியவையும் அடங்கும்.

### விதி 7

இந்த உடன்படிக்கையில் சேரும் நாடுகள ஒவ்வொரு மனிதருக்கும் உள்ள நியாயமான, கண்ணியமான வேலைச்சூழலுக்கான உரிமையை ஒப்புக் கொள்கின்றன. அந்தச்சூழல் குறிப்பாக—

அ. ஊதியம் எல்லாருக்கும் குறைந்த பட்சமாக
   (i) நியாயமான ஊதியமாயும், சமவேலைக்கு சம ஊதிய மாயும் அமைய வேண்டும்; எந்த விதபேதமும் இருக்கக்கூடாது. குறிப்பாக, ஆண்களுக்கு கிடைக்கும் கண்ணியமான சூழலுக்கு குறைவானதாக பெண் களுக்கு இருக்கக் கூடாது. சமவேலைக்கு சம ஊதியம் அவர்களுக்கும் வேண்டும்.
   (ii) இவ்வுடன்படிக்கைக்கு இணங்க, அவர்களுக்கும் அவர்கள் குடும்பத்துக்கும் நாகரிகமாக வாழப் போதுமானதாக இருக்க வேண்டும்.

ஆ. பாதுகாப்பும் ஆரோக்கியமும் காப்பாற்றப்படவேண்டும்.

இ. இருக்கும் நிலையிலிருந்து நியாயப்படியான பதவி உயர்வு களுக்கான வழிவகைகள் எல்லாருக்கும் செய்யப்படவேண்டும். தகுதி, வேலையில் அனுபவம் தவிர வேறு எந்தக் காரணத்தாலும் பேதம் பாராட்டப்படக்கூடாது.

ஈ. ஓய்வு, பொழுதுபோக்கு, வேலைநேரம் பற்றிய நியாயமான வரம்புகள், சம்பளத்துடன் கூடிய விடுமுறை, பொதுவிடுமுறை நாட்களுக்கு ஊதியம் ஆகியவற்றுக்கு உறுதியளிக்க வேண்டும்.

## விதி 8

அ. ஒவ்வொருவருக்கும் தனது சமூக பொருளாதார உரிமைகளைப் பேணவும் பெறவும் வேண்டி தொழிற்சங்கம் அமைக்கவோ, தனக்குப் பிடித்த சங்கத்தில் சேரவோ உரிமை உண்டு; தான் சார்ந்துள்ள நிறுவனத்தின் விதிகளுக்கு முரணாக இல்லாம லிருந்தால் சரி.

ஆ. தொழிற்சங்கங்கள் நாடு தழுவிய அளவில் சம்மேளனங் களாகவோ கூட்டமைப்பாகவோ இயங்கவும், அவை சர்வ தேசிய அளவில் கூட்டமைப்பாக இயங்கவும் உரிமை உண்டு.

இ. தேசப் பாதுகாப்பு நலன்கள், பொது அமைதி, மற்றவர்களின் உரிமைகள் சுதந்திரங்கள் ஆகியவற்றுக்கு இடுக்கண் வராமல் பார்த்துக்கொள்ள ஒரு ஜனநாயக அமைப்பில் சட்டம் விதிக்கக்கூடிய தேவையான கட்டுப்பாடுகள் தவிர வேறு எவ்விதக் காட்டுப்பாடுமின்றி சுதந்திரமாக இயங்க தொழிற்சங்கங்களுக்கு உரிமையுண்டு.

ஈ. குறிப்பிட்ட நாட்டின் சட்டங்களுக்குட்பட்டு வேலை நிறுத்தம் செய்யவும் உரிமை உண்டு.

இங்கு கூறிய (அ) முதல் (ஈ) வரையான உரிமைகளுக்கு உத்தரவாதமளிக்கவும் இவ்வுடன்படிக்கையில் சேரும் நாடுகள் பொறுப்பெடுத்துக் கொள்கின்றன.

## விதி 9

ஒவ்வொருவருக்கும் சமூகக் காப்பீடு உள்ளிட்ட சமூகப் பாதுகாப் புரிமை இருப்பதை இவ்வுடன்படிக்கையில் சேரும் நாடுகள் அங்கீகரிக்கின்றன.

## விதி 10

அ. சமூகத்தின் அடிப்படையான, இயற்கையான மூலக்கூறான

குடும்பத்துக்கு உயர்ந்த பட்ச பாதுகாப்பும் உதவியும் அளிக்கப் படுதல்; குறிப்பாக குடும்பம் அமைக்கப்படுவதில் சிறு குழந்தைகளின் நலத்துக்கும் கல்விக்கும்கூட அரசு பொறுப்பு. திருமணம் என்பது இருவரின் கருத்தொருமிப்போடுதான் நிகழவேண்டும்.

ஆ. மகப்பேறுக்கு முன்பும் அதன்பின்பும் குறிப்பிட்ட காலஇடை வெளிக்கு தாய்மார்களுக்கு சிறப்புப் பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டும். அந்தக் காலகட்டத்தில், பணியாற்றும் தாய்மார் களுக்கு ஊதியத்தோடு விடுமுறையோ போதுமான சமூகப் பாதுகாப்பு வசதிகளோ இருக்கவேண்டும்.

இ. பிறப்பினாலோ வேறு எக்காரணத்தாலுமோ வேறுபாடுகள் பார்க்காமல் குழந்தைகள், இளைஞர்கள் அனைவருக்கும் பாதுகாப்பும் உதவியும் தர சிறப்பு நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். சமூக-பொருளாதார சுரண்டல்களிலிருந்து அவர்கள் பாதுகாக்கப்படவேண்டும். அவர்களது ஆன்மிக வளர்ச்சி, சுகாதாரம், முன்னேற்றம் உயிர் ஆகியவற்றுக்கு ஊறு விளைக்கக் கூடிய தொழில்களில் அவர்களை ஈடுபடுத்துவது தண்டனைக்குரிய குற்றமாக்கப்படவேண்டும். அரசுகள் குறைந்தபட்ச வயது வரம்பு சட்டங்கள் இயற்றி, அந்த வயதுக்குக் குறைந்தவர்களைப் பணியாளர்களாக நடத்து வதையும் தடைசெய்து தண்டனைக்குரிய குற்றமாக்கவேண்டும்.

## விதி 11

1. இந்த உடன்படிக்கையில் சேரும் நாடுகள், உணவு, உடை, உறையுள், உட்பட தனக்கும் குடும்பத்துக்கும் ஒரு கண்ணிய மான வாழ்க்கைத்தரத்துக்கும் வாழ்நிலைகளில் தொடர்ச்சி யான முன்னேற்றத்துக்கும் அனைவருக்கும் உரிமை உண்டென்று அங்கீகரிக்கின்றன. இவ்வுரிமை நடைமுறைப் படுத்தப்படவும் அவை உரிய நடவடிக்கைகள் எடுக்கும். சம்மதத்துடன் கூடிய பன்னாட்டுக் கூட்டுறவின் முக்கியத் துவத்தையும் அவை உணர்ந்துள்ளன.

2. தனி ஒருவனுக்கு உணவில்லை எனும் கொடுமையிலிருந்து ஒவ்வொருவனுக்கும் பாதுகாப்பு உரிமை உண்டென்பதையும் ஏற்று இவ்வரசுகள் தன்னளவிலும், பன்னாட்டுக் கூட்டுற வோடும் கீழ்க்கண்ட நோக்கங்களுக்காக திட்டவட்டமான நடவடிக்கைகளும் பிற செயல்பாடுகளும் மேற்கொள்ளும்:

அ. தொழில்நுட்ப அறிவியல் கல்வியை முழுதும் பயன்படுத்தி

உணவு உற்பத்தி, பாதுகாப்பு, விநியோகம் ஆகியவற்றின் முறைகளில் முன்னேற்றம் காணுதல், சத்துணவு தத்துவங்கள் பற்றிய அறிவினைப் பகிர்ந்து கொள்ளுதல் இயற்கை வளத்தை உயர்ந்தபட்ச அளவு வளப்படுத்தவும் பயன்படுத்தவும் உதவும் வண்ணம் வேளாண்மை முறைகளை சீர்திருத்துதல் நவீனமாக்குதல்.

ஆ. உணவை ஏற்றுமதி செய்யும் நாடுகள் இறக்குமதி செய்யும் நாடுகள் என்ற இருபாலாருக்கும் சிரமமில்லாதவகையில் உலகில் உற்பத்தியாகும் உணவுப் பொருட்களை தேவைக்கேற்ப நியாயமாகப் பங்கீடு செய்தல்.

## விதி 12

1. ஒவ்வொருவருக்கும் உயாந்தபட்ச உடல்நலம், மனநலம் அனுபவிக்க உள்ள உரிமையையும் இவ்வுடன்படிக்கையில் ஈடுபடும் அரசுகள் அங்கீகரிக்கின்றன.
2. அதை மக்கள் அனுபவிக்க இசைவாக இந்த அரசுகள் கீழ்க் கண்ட தேவைகளை நிறைவு செய்யும் வகையான நடவடிக்கை களை மேற்கொள்ளும்:

அ. இறந்துபிறக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை, குழந்தைச் சாவுகள் ஆகியவற்றைக் குறைத்தல்-குழந்தைகளின் ஆரோக்கிய வளர்ச்சி.

ஆ. சுற்றுச்சூழல், தொழிற்சாலை, சுகாதாரம் ஆகியவற்றை அனைத்து அம்சங்களிலும் முன்னேற்றுதல்.

இ. தொற்றுநோய்கள், கொள்ளைநோய்கள், தொழில் தொடர்பான நோய்கள் முதலியவற்றை தடுத்தல், கட்டுப் படுத்தல், சிகிச்சை வசதி பெருக்குதல்,

ஈ. வியாதிகளுக்கு மருத்துவர் கவனிப்பு உட்பட அனைத்து மருத்துவ வசதிகளும் நிச்சயம் கிடைக்கக்கூடிய நிலைமை களை உருவாக்குதல்.

## விதி 13

1. இவ்வரசுகள் ஒவ்வொருவருக்கும் உள்ள கல்வி உரிமையை அங்கீகரித்து கல்வி மனித ஆளுமையின் முழு வளர்ச்சிக்கும் மானிட மாண்புக்கும் அடிகோலுவதுடன், மனித உரிமை. அடிப்படை சுதந்திரங்கள் ஆகியவற்றை வலுப்படுத்தவும் வேண்டும் என்பதை ஒப்புக் கொள்கின்றன. ஒரு சுதந்திர சமூதாயத்தில் பலனுள்ள முறையில் பங்களிப்பு செய்யவும்

நாடுகளுக்கிடையிலும் எல்லா இன, கலாச்சார, மதப் பிரிவின் மக்களிடையிலும் சகிப்புத்தன்மையும் நட்பும் துளிர்க்கவும், உலக சமாதானத்துக்கான ஐ.நா. முயற்சிகள் வலுப்பெறவும் வையத்து மாந்தருக்கெல்லாம் கல்வி வழி காட்டித்தரவேண்டுமென்பதையும் ஒப்புக் கொள்கின்றன.

2. மேற்படி உரிமை முழுவதும் செயல்படுத்தப்பட கீழ்க்கண்ட பணிகள் செய்யப்படவேண்டுமென்றும் இவ்வரசுகள் ஒப்புக் கொள்கின்றன:—

அ. கட்டாய ஆரம்பக் கல்வி எல்லாருக்கும் இலவசமாகக் கிடைக்கவேண்டும் என்பதையும்,

ஆ. இரண்டாம் நிலைக்கல்வி-தொழில்நுட்பம், வேலை வாய்ப்புக் கல்வி உட்பட பொதுவாக எல்லாருக்கும் கிடைக்கக் கூடியதாயும், செலவு கட்டுப்படியாகக் கூடிய தாயும் அமைய வேண்டும். படிப்படியாக இடைநிலைக் கல்வி முழுவதையுமே அரசு செலவில் கிடைக்கச் செய்வது உள்பட இதற்கான எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்படவேண்டும்.

இ. இதேபோல் உயர்கல்வியும் தகுதிக்கேற்ப எல்லாருக்கும் கிடைக்கச் செய்ய அதேபோன்ற நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும்.

ஈ. ஆரம்பக்கல்வி பெறாதவர்கள் அல்லது முடிக்காதவர்கள் பயன்பெறக்கூடிய வகையில் ஆதாரக்கல்வி தீவிரப் படுத்தப்பட வேண்டும், ஊக்குவிக்கப்படவேண்டும்.

உ. எல்லா நிலையிலும் கல்விக்கூடங்கள் முறையாக ஒழுங்குபடுத்தப்படவேண்டும். போதுமான ஆசிரியர் குழுக்கள் வேண்டும். தொடர்ந்து ஆசிரியர்களின் பணிநிலைச்சூழல் வலுப்படுத்தப்படவேண்டும்.

3. பெற்றோர் அல்லது காப்பாளர் தம் குழந்தைகளுக்காக, அரசு நடத்தும் பள்ளிகளுக்கு வெளியேகூட பள்ளிகளைத் தேர்ந் தெடுக்க உரிமை உண்டென்பதை இவ்வரசுகள் மதிக்கின்றன. அவை அரசு விதித்திருக்கக்கூடிய குறைந்தபட்சக் கல்வித்தரம் உள்ளவையாக இருக்க வேண்டும். தத்தம் மதத்துக்கு ஏற்ற தார்மீகக் கல்விக்காக பெற்றோர் இத்தகைய பள்ளிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

4. இவ்விதியின் எந்தப் பகுதியும் தனியாரோ, நிறுவனங்களோ பள்ளிகள் நிறுவவும், நடத்தவும் கொண்டுள்ள உரிமைகளில் குறுக்கிடும் வகையில் பொருள் கொள்ளப்படக்கூடாது.

ஆனால், இவ்விதியின் பகுதி (I)இல் கூறப்பட்டுள்ள தத்து வங்கள் கடைப்பிடிக்கப்படவேண்டும்; அரசு விதித்திருக்கக் கூடிய குறைந்தபட்சத் தரம் கொண்டிருக்க வேண்டும்— அவ்வளவுதான்.

......

**விதி 15**

1. (அ) கலாச்சார வாழ்வில் பங்கேற்கவும், (ஆ) அறிவியல் முன்னேற்றம், அதன் விளைவுகள் ஆகியவற்றால் பயன் பெறவும் (இ) தன் பொறுப்பில் உருவான எந்த அறிவியல், இலக்கிய, கலைத்துறை சாதனையிலிருந்தும் பொருளாதார வகையிலோ தார்மிக ரீதியாகவோ பலனடைவதற்கான பாதுகாப்பும் ஒவ்வொருவருக்கும் உள்ள உரிமையை இவ்வரசுகள் ஒப்புக் கொள்கின்றன.
2. அறிவியலையும் பண்பாட்டையும் பாதுகாக்கவும், வளர்க்கவும், பரப்பவும் தேவையான நடவடிக்கைகள் உட்பட இந்த உரிமையை மெய்ப்படவைப்பதற்கான அனைத்துச் செயல் பாடுகளையும் இவ்வரசுகள் செய்யவேண்டும்.
3. அறிவியல் ஆராய்ச்சிகளுக்கும், படைப்பு முயற்சிகளுக்கும் இன்றியமையாததான சுதந்திரத்தையும் இவ்வரசுகள் ஏற்றுக் கொள்கின்றன.
4. அறிவியல்-கலாச்சாரத் தளங்களில் சர்வதேசத் தொடர்பு ஒத்துழைப்பு ஆகியவற்றிலிருந்து பெறப்படக்கூடிய ஆக்கமும் ஊக்கமும் தரக்கூடிய நற்பயன்கள் பல உண்டென்றும் இவ்வரசுகள் ஒப்புக் கொள்கின்றன.

# 4

# குடியுரிமையும் அரசியல் உரிமையும் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கை

*ஐ.நா. பொதுச்சபை 16.12.1966 அன்று ஏற்றுக்கொண்டதும், 23.12.1976 முதல் நடைமுறைக்கு வந்ததுமான குடிஉரிமையும் அரசியல் உரிமையும் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கையிலிருந்து சில பகுதிகள்.*

---

## முகப்புரை

**இவ்வுடன்படிக்கையில் சேரும் நாடுகள்**

—ஐ.நா. மன்ற அமைப்புத்திட்டம் முரசறையும் தத்துவங்களுக்கு ஏற்ப உள்ளார்ந்த கவுரவம், மாற்றொணாதவையும் சமத்துவமானவையுமான மானிடக் குடும்பத்தின் சகல உறுப்பினர்களுக்கும் உரிய உரிமைகளை அங்கீகரிப்பதே உலகில் சுதந்திரம், சமாதானம், நீதி ஆகியவை தழைக்க அடிப்படை என்பதைக் கருதிப்பார்த்தும்,

— இவ்வுரிமைகள் மானிடனின் உள்ளார்ந்த கவுரவத்திலிருந்து பிறப்பதை ஒப்புக்கொண்டும்,

— மனித உரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனப்படி சுதந்திர மனிதர்கள் அச்சத்திலிருந்தும் தேவையிலிருந்தும் விடுபட வேண்டும் என்ற லட்சியம் ஒவ்வொரு மனிதனும் தனது பொருளாதார சமூக கலாச்சார உரிமைகளையும் அரசியல் உரிமை, குடிமகன் உரிமை ஆகியவற்றையும் அனுபவிக்கக்கூடிய சூழலை உருவாக்குதன் மூலமே அடைய முடியுமென்பதையும் ஒப்புக் கொண்டும்,

— ஐ.நா. அமைப்புத்திட்டத்தின்கீழ் மனித உரிமைகளுக்கும் சுதந்திரங்களுக்கும் உலகு தழுவிய மரியாதையும் அமுலாக்கமும்

ஏற்படுத்த வேண்டியது அரசுகளின் கடப்பாடு என்பதைக் கருதிப்பார்த்தும்,

— தனிமனிதனும் பிற தனிமனிதர்களுக்கும் தான் சார்ந்திருக்கும் சமூகத்துக்கும் கட்டுப்பட்டவன் என்கிற முறையில் இங்கு குறிப்பிடப்பெறும் உரிமைகளைப் பரப்பவும் அங்கீகாரத்துக்கு உதவவும் கடமைப்பட்டுள்ளான் என்பதை உணர்ந்தும் கீழ்க்கண்ட விதிகளுக்கு உடன்படுகின்றன:

## பகுதி 1

### விதி 1

1. எல்லா மக்களுக்கும் சுயநிர்ணய உரிமை உண்டு. அவ்வுரிமையின்படி அவர்கள் விருப்பம்போல் தமது அரசியல் நிலையை நிர்ணயித்துக் கொண்டு தம் பொருளாதார, சமூக, கலாச்சார வளர்ச்சிக்கு உழைகின்றனர்.
2. சர்வதேச சட்டத்தையும் பரஸ்பர நன்மை என்ற தத்து வத்தையும் அடிப்படையாகக் கொண்டு எழும் பன்னாட்டுப் பொருளாதாரக் கூட்டுறவினால் உருவாகும் கடமைகளுக்கு ஊறுவிளையாத வகையில் தமது இயற்கை செல்வங்களையும் பொருளாதார சக்திகளையும் தமது நன்மைக்கேற்ப ஏதும் செய்துகொள்ள எல்லா மக்களுக்கும் உரிமை உண்டு. தாம் பிழைத்திருப்பதற்கான பொருளாதார வழிவகைகள் எந்த மக்களிடமிருந்தும் பறிக்கப்படுவதென்ற பேச்சுக்கே இடம் கிடையாது.
3. சுய ஆட்சிபெறாத பகுதிகள், அறங்காவலர் முறையில் ஆளப்படும் பகுதிகள் ஆகியவற்றுக்குப் பொறுப்பான அரசுகள் உட்பட இவ்வுடன்படிக்கையில் இணையும் அரசுகள் அனைத்தும் சுயநிர்ணய உரிமையை அனைவரும் அடை வதைப் பரப்பவும் ஐ.நா. பிரகடன விதிகளுக்கு ஏற்ப அவற்றை மதிக்கவும் தம்மைக் கட்டுப்படுத்திக்கொள்கின்றன.

## பகுதி 2

### விதி 2

1. தனது எல்லைக்குள்ளும் அதிகார எல்லைக்குள்ளும் உள்ள அனைவருக்கும் இனம், நிறம், பால், மொழி, மதம் அரசியல் கருத்து அல்லது வேறு வித கருத்துக்கள், தேசிய அல்லது

சமூகத் தோற்றம், பிறப்பு, சொத்து அல்லது அதுபோன்ற கவுரவங்கள் என்ற எவ்வகை பேதமுமின்றி இவ்வுடன் படிக்கையில் அடையாளங்காட்டப்பெறும் அனைத்துரிமை களும் உண்டென்பதை மதித்து அவற்றுக்கு உத்தரவாதம் அளிப்பதென்று இவ்வுடன்படிக்கையில் சேரும் அனைத்து அரசுகளும் வாக்குக் கொடுக்கின்றன.

2. சட்டத்தின் மூலமோ வேறு வகையாகவோ ஏற்கெனவே உறுதி செய்யப்பட்டிராவிட்டால், தத்தம் பகுதிகளில், தத்தம் அரசியலமைப்புக்கும், இவ்வுடன்படிக்கையின் விதிகளுக்கும் ஏற்ப, இந்த அரசுகள் தம் நாடுகளில் இவ்வுடன்படிக்கையில் காணப்பெறும் உரிமைகள் எளிதில் நடைமுறையில் கிடைக்க, சட்டமியற்றியோ வேறு வழியிலோ தேவையான நடவடிக்கை கள் எடுப்போமென்றும் உறுதியளிக்கின்றன.

3. (அ) யாரைப் பொறுத்தேனும் இங்கு அங்கீகரிக்கப்படும் உரிமையோ சுதந்திரமோ மீறப்படுமானால், அந்த மீறல் அரசின் சார்பாக ஒருவரால் எடுக்கப்படும் நடவடிக்கையா யிருப்பினும்கூட, பாதிக்கப்பட்டவருக்கு பயனுள்ள நிவாரணம் கிடைக்கவும்,

(ஆ) அப்படி பரிகாரம் தேடுகிறவர், அவருடைய உரிமையை நிர்ணயிக்க நீதிமன்றம், நிர்வாகத்துறை, சட்டமன்றம் அல்லது அவ்வரசின் அமைப்பியல் உருவாக்கியுள்ள வேறு எந்த அமைப்பின் உதவியைப்பெறும் உரிமையையும், குறிப்பாக நீதித்துறையில் இதற்கான வழிவகைகளை உருவாக்கவும், ஆவன செய்யவும் இவ்வரசுகள் உறுதியேற்கின்றன.

## விதி 3

இவ்வுடன்படிக்கையில் அங்கீகரிக்கப்பெறும் குடிஉரிமை, அரசியல் உரிமை ஆகியவற்றை ஆண்களோடு பெண்களும் சரிநிகர்சமானமாக அனுபவிக்க வகைசெய்யவும் இவ்வரசுகள் உறுதியேற்கின்றன.

## விதி 4

1. தேசத்தின் உயிரையே பாதிக்குமளவிலான பொது நெருக்கடி நிலை நிலவி, அதிகாரபூர்வமாக அத்தகு அவசரநிலைப் பிரகடனம் செய்யப்பட்ட காலத்தில் இவ்வரசுகள் நிலைமையின் தீவிரம் எவ்வளவு தேவை என்று காட்டு கிறதோ அந்த அளவு மட்டுமே, இவ்வுடன்படிக்கையின்படி அவற்றின் கடமைகளாய் அமைகின்றவற்றுக்கு

எதிரான நடவடிக்கைகளில் இறங்கலாம். அப்போதும்கூட சர்வதேசச் சட்டத்தின்கீழ் அவற்றுக்கு உள்ள கடமைகளை மீறாமலும் இனம், நிறம், பால், மொழி, மதம், எந்த சமூகத்தினன் என்பதுபோன்ற எந்தவிதமான பேதங் களும் காட்டப்படாமலும் அந்நடவடிக்கைகள் அமைய வேண்டும்.

---

## பகுதி 3

### விதி 6

1. உயிர்வாழும் உரிமை ஒவ்வொருவருக்கும் இயல்பாகவே உரியது. அதற்கு சட்டப்பாதுகாப்பு வேண்டும். யார் உயிரும் சட்டவிரோதமாக பறிக்கப்படலாகாது.
2. மரணதண்டனை ஒழிக்கப்படாத நாடுகளில், மிகமிகக் கடுமையான குற்றங்களுக்கு மட்டுமே அது வழங்கப்பட வேண்டும். அதுவும் குற்றம் நடந்த காலத்திய சட்டத்தின் படியும், இவ்வுடன்படிக்கையின் விதிகளுக்கோ, இனக்கொலை பாதகத் தடுப்பும் தண்டனையும் பற்றிய கொள்கையின் விதிகளுக்கோ முரணாக அது அமைந்திடக்கூடாது.
4. மரணதண்டனை விதிக்கப்பட்டவருக்கு மன்னிப்புக்கோரவும் தண்டனைக் குறைப்பு கோரவும் உரிமையுண்டு. எந்த வழக்கிலும் பொதுமன்னிப்பு அல்லது மன்னிப்பு அல்லது தண்டனைக் குறைப்பு வழங்கப்படலாம்.
5. பதினெட்டு வயதுக்குக் குறைந்தவர்களுக்கும், கர்ப்பமாயிருப் போர்க்கும் மரணதண்டனை வழங்கப்படலாகாது.

### விதி 7

1. யாரும் சித்திரவதைக்கோ, கொடுமையாக அல்லது மனிதத் தன்மையின்றி அல்லது கண்ணியமற்ற முறையில் நடத்தப் படலாகாது; யாரும் அவரது சுதந்திரமான ஒப்புதலின்றி மருத்துவ சோதனைகளிலோ அறிவியல் சோதனைகளிலோ ஈடுபடுத்தப் படக்கூடாது.

### விதி 8

1. யாரும் அடிமைப்படுத்தப்படக்கூடாது. அனைத்துவித அடிமை முறையும் அடிமை வணிகமும் ஒழிக்கப்படவேண்டும்.
2. யாரும் கொத்தடிமைகள் வைத்துக்கொள்ளலாகாது.

3 (அ). யாரையும் கட்டாயப் பணியாளராகவோ, நிர்பந்தப் பணியாளராகவோ வைத்திருத்தல் கூடாது.

விதி 9

1. ஒவ்வொருவருக்கும் சுதந்திரத்துக்கும் உடல்பாதுகாப்புக்கும் உரிமை உண்டு. யாரும் சட்டவிரோதமாக கைது செய்யப் படவோ, சிறைவைக்கப்படவோ ஆகாது. சட்டம் விதித்துள்ள காரணங்கள் அன்றியோ, அதுகூறும் முறைகளில் அல்லாமலோ யாருடைய சுதந்திரமும் பறிக்கப்படலாகாது.
2. ஒருவர் கைது செய்யப்படும்போது, அவர் கைது செய்யப் படுவதற்கான காரணமும், அவர் செய்ததாகக் கருதப்படும் குற்றம் என்ன என்பதும், அவருக்குக் கூறப்படவேண்டும்.
3. குற்றச்சாட்டின்கீழ் ஒருவர் கைது செய்யப்பட்டாலோ, சிறைப் பிடிக்கப்பட்டாலோ குறித்தகாலத்துக்குள் நடுவர் முன்னிலையிலோ அல்லது சட்டப்படி இதற்கான அதிகாரம் பெற்ற நீதித்துறையாளர் முன்போ அழைத்துச் செல்லப்பட வேண்டும். நியாயமான காலவரையறைக்குள் விசாரிக்கப்பட வேண்டும் அல்லது விடுவிக்கப்படவேண்டும்.
4. கைது செய்யப்பட்டோ சிறைசெய்யப்பட்டோ தன் உரிமையை இழக்கும் ஒருவர் நீதிமன்றத்துக்கு தன் குறையை எடுத்துச் செல்ல உரிமை உண்டு. நீதிமன்றம் தாமதமின்றி அந்தக் கைது சட்டப்படி செல்லுமாஎன்று தீர்மானிக்க அது உதவும். தவறென்று தீர்மானித்தால் நீதிமன்றமே அவரை விடுவித்து ஆணையிடும்.
5. அப்படி பாதிக்கப்பட்டவருக்கு இழப்பீடு கோரவும் உரிமை உண்டு.

விதி 10

1. கைதாகும் எவரும் மனிதப் பண்போடும் மனிதப் பிறவிக்கே உரிய உள்ளார்ந்த மதிப்புக்கான மரியாதையோடும் நடத்தப்படவேண்டும்.
2. (அ) விதிவிலக்கான சந்தர்ப்பங்கள் தவிர பொதுவாக எப்போதும் குற்றம் சாட்டப்பட்டவர்களும் தண்டிக்கப் பட்டவர்களும் தனித்தனியேதான் வைத்திருக்கப்பட வேண்டும். தண்டிக்கப்பட்டவரல்ல என்ற தகுதிக்கேற்ப அதற்குரியபடி வித்தியாசமான முறையிலேயே நடத்தப்படவேண்டும்.

ஆ. குற்றம் சாட்டப்பட்டவர்களுக்குள், சிறுவர்களும் வயது வந்தவர்களும் தனித்தனியே வைக்கப்பட்டு, நடுவர் முன்பும் கூடியவரை தனிதனியாகவே அழைத்துச் செல்லப்படவேண்டும்.

3. சிறைச்சாலை முறையானது கைதிகளை சீர்திருத்துவதையும் அவர்களுக்கு மறுவாழ்வு அளிப்பதையுமே நோக்கமாக வைத்து அவர்களை நடத்தவேண்டும். இளங்குற்றவாளிகளும் வயது வந்தவர்களும் தனித்தனியே வைக்கப்பட்டு, அவர்களுடைய வயதுக்கும் சட்ட அந்தஸ்துக்கும் ஏற்ப நடத்தப்படவேண்டும்.

.....

## விதி 12

1. ஒரு அரசின் நில எல்லைக்குள் சட்டப்படி வாழும் எவருக்கும் அந்த நில எல்லைக்குள் எங்குவேண்டுமானாலும் போகவர உரிமை உண்டு. எங்கு வசிக்கவும் சுதந்திரம் உண்டு.
2. எவரும், தாயகம் உட்பட, எந்த நாட்டைவிட்டும் விருப்பம் போல் வெளியே போகலாம்.
3. அவ்வுரிமைக்குக் கீழ்க்கண்ட நிபந்தனைகளின்றி கட்டுப்பாடு கூடாது—கட்டுப்பாடுகள், தேசிய பாதுகாப்பு, பொது அமைதி, பொதுசுகாதாரம், பொது ஒழுக்கம் மற்றவர்களின் உரிமைகள், சுதந்திரங்கள் ஆகியவைகள் பாதிக்கப்படாமல் பார்த்துக் கொள்வதற்காக சட்டபூர்வமாக மட்டுமே விதிக்கப்படலாம். இந்த உடன்படிக்கையில் காணப்படும் பிற உரிமைகளுக்கு இசைவாக அவை அமைய வேண்டும்.
4. ஒருவர் தாயகத்துக்குள் நுழைவதை யாரும் சட்டவிரோத மாகத் தடுக்கக் கூடாது.

......

## விதி 14

1. நீதிமன்றங்கள் முன்பும் தீர்ப்பாயங்கள் முன்பும் அனைவரும் சமம். ஒருவர்மீது சுமத்தப்பட்டிருக்கும் குற்றச்சாட்டு பற்றியோ, அவரது உரிமைகள்-கடமைகள் பற்றிய வழக்கிலோ, நேர்மையான வெளிப்படையான விசாரணை என்பது அனைவருக்கும் உரியதாகும். அந்த விசாரணை சட்டப்படி உருவான சுயேச்சையான, பாரபட்சமற்ற நீதிமன்றத்தால் நடத்தப்படவேண்டும்.

2. குற்றம் சாட்டப்படும் எவரும் சட்டபூர்வமாக அக்குற்றம் நிறுவப்படும்வரை நிரபராதி என்றே கருதப்பட உரிமையுள்ளவர் ஆவார்.
3. குற்றவியல் சட்டத்தின்கீழ் குற்றம் சுமத்தப்பெற்ற ஒருவருக்கு வேறு யாருக்கும் சமமாக, கீழ்க்கண்ட குறைந்தபட்ச உத்தரவாதங்களுக்கு உரிமையுண்டு:-
   அ. அவர்மீதான குற்றச்சாட்டின் இயல்பு, அது சுமத்தப் படுவதன் காரணமும், அவருக்குப் புரிகிற மொழியில் விரிவாகவும் விரைவாகவும் தெரிவிக்கப்பட வேண்டும்.
   ஆ. தனக்குப் பிடித்த வழக்கறிஞரைக் கலந்துகொள்ளவும், தனது வாதங்களைத் தொகுத்துக் கூற போதிய நேரமும் வாய்ப்பும் பெறவும் அனுமதிக்கப்படவேண்டும்;
   இ. விரைவான விசாரணை;
   ஈ. விசாரணை அவர் முன்னிலையில் நடகக வேண்டும்; தானே நேராகவோ தான் விரும்பும் வழக்குரைஞர் மூலமோ அவர் வாதிக்கலாம்.
   எ. யாரும் தனக்கே விரோதமாக சான்றளிக்குமாறோ, குற்ற அங்கீகாரம் தருமாறோ கட்டாயப்படுத்தப்படக்கூடாது.
4. சிறுவர்களென்றால், அவரது வயது, அவரை சீரமைத்து புனர் வாழ்வளித்தலின் அவசியம் ஆகியவற்றையும் கவனத்தில் கொண்டே நடைமுறைகள் வகுக்கப்படவேண்டும்.

---

## விதி 16

சட்டத்தின்முன் ஒரு மனிதராக நடத்தப்படும் உரிமை எங்கும் எவருக்கும் உரியது.

## விதி 17

1. எவரது தனிமையும், குடும்பமும், வீடும், கடிதங்களும் குறுக்கீடுகளுக்கு இடமாகக் கூடாது. எவரது பெருமையும் மரியாதையும் சட்டவிரோத பாதிப்புக்கு ஆளாகக் கூடாது.
2. அத்தகைய மீறல்களுக்கும் பாதிப்புகளுக்கும் எதிரான பாதுகாப்பு எல்லாருக்கும் உரிய உரிமையாகும்.

## விதி 18

1. எல்லாருக்கும் சிந்தனை சுதந்திர உரிமையும், மத உரிமையும்

மனச்சான்று உரிமையும் உண்டு; தான்விரும்பும் மதம் அல்லது தர்மத்தை தொடரவோ, ஏற்றுக்கொள்வோ உள்ள உரிமையும் தனியாகவோ பிறருடன் சேர்ந்தோ, தனியிடத்திலோ- பொதுவிலோ, தனது நம்பிக்கையையோ மதத்தையோ கடைப் பிடித்தல், தொழுதல், வாழ்தல் கற்பித்தல் ஆகிய உரிமைகளும் அடங்கும்.

2. தனது மதம் நம்பிக்கை இவற்றில் ஒருவர் கொண்டுள்ள உறுதியை மாற்றிக்கொள்ள எவரும் கட்டாயப்படுத்தப் படலாகாது.

3. தன்மதம் பற்றியோ நம்பிக்கைகள் பற்றியும் பேசும் உரிமை பொதுப்பாதுகாப்பு, ஒழுங்கு, சுகாதாரம், நியமங்கள் மற்றவர் களின் அடிப்படை உரிமைகள்—சுதந்திரங்கள் ஆகியவை பாதிக்கப்படும் என்கிறபோது மட்டுமே, அதுவும் சட்டம் கூறுகிற வகையில் மட்டுமே கட்டுப்படுத்தப்படலாம்.

4. தத்தம் நம்பிக்கைகளுக்கேற்ற மதக்கல்வி தார்மீகக் கல்வி தம் குழந்தைகளுக்குக் கிடைக்க உறுதியாக வழிசெய்துகொள்ள பெற்றோர் அல்லது காப்பாளருக்கு உள்ள உரிமையை மதிப்போமென்று இவ்வுடன்படிக்கையினை ஏற்கும் அரசுகள் உறுதியளிக்கின்றன.

## விதி 19

1. ஒவ்வொருவரும் எதைப்பற்றியும், குறுக்கீடுகளின்றி தனக்கென்று கருத்துகள் கொண்டிருப்பதற்கு உரிமை உண்டு.

2. கருத்து வெளியிடும் உரிமையும் அனைவருக்கும் உண்டு. அதிலேயே எல்லாவித செய்திகளையும் கருத்துக்களையும் தேடிச் செல்லவும், பெறவும் பரப்பவும், எல்லைத்தொடர்பான தடைகளின்றி, பேச்சு, எழுத்து, கலைகள் உள்ளிட்ட விரும்பும் எந்த ஊடகத்தைப் பயன்படுத்திக் கொள்ளவும் உள்ள உரிமையும் அடங்கும்.

3. இதற்கு முந்தைய பத்தியில் கூறப்பெறும் உரிமைகளை அனுபவிப்பதில் சில குறிப்பான கடமைகள்-பொறுப்புகள் ஆகியவையும் இருக்கின்றன. எனவே அவற்றுக்கு சில கட்டுப்பாடுகள் உள்ளன. ஆனால் அக்கட்டுப்பாடுகள்

அ. மற்றவர்களின் உரிமைகளுக்கும் மரியாதைக்கும் தேவையானவையாகவும்,

ஆ. தேசிய பாதுகாப்பு, பொது அமைதி, பொது சுகாதாரம், தார்மிக ஒழுக்கம் ஆகியவற்றைப் பாதுகாக்கவும்

தேவையான அளவு மட்டுமே அதுவும் சட்டத்தின் மூலமாக மட்டுமே விதிக்கப்படலாம்.

**விதி 20**

1. போர்ப்பிரச்சாரம் யாவும் சட்டப்படி தடுக்கப்படும்.
2. பாரபட்சம், பகை, வன்முறை ஆகியவற்றைத் தூண்டக் கூடியதாக அமையும் தேசிய வெறுப்பு, இனவெறுப்பு, மத வெறுப்பு ஆகியவற்றுக்கான ஆதரவுப் பிரசாரம் சட்டப்படி தடுக்கப்படும்.

**விதி 21**

அமைதியாகக் கூடிப்பேசும் உரிமை அங்கீகரிக்கப்படும். ஒரு ஜனநாயக சமுதாயத்தில் தேசிய பாதுகாப்பு, பொதுமக்கள் பாதுகாப்பு, பொது அமைதி, பொது சுகாதாரம், ஒழுக்கம் ஆகியவற்றின் பாதுகாப்பு மற்றவர்களின் உரிமைகள் சுதந்திரங்கள் ஆகியவற்றுக்கு இதமாக எவ்வளவு தேவையோ அந்த அளவு மட்டும் அதுவும் சட்டத்துக்கு இசைந்து இவ்வுரிமை கட்டுப்படுத்தப்படலாம்.

**விதி 22**

1. தனது நலன்களைப் பாதுகாத்துக் கொள்ள மற்றவர்களோடு சேர்ந்து தொழிற்சங்கம் உட்பட எவ்வித சங்கமும் அமைக்கும் உரிமை அனைவருக்குமுண்டு.

......

**விதி 23**

1. குடும்பமே இயல்பான, அடிப்படையான சமூக உறுப்பாகும். அதற்கு சமூகம், அரசு ஆகியவற்றின் பாதுகாப்புக்கான உரிமை உண்டு.
2. மண வயது வந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் மணம்புரியவும் குடும்பம் நிறுவவும் உள்ள உரிமை அங்கீகரிக்கப்படும்.
3. மணந்துகொள்வோரின் சுயேச்சையான முழுசம்மதமின்றி ஒரு திருமணமும் நடைபெற இயலாது.
4. இவ்வுடன்படிக்கையில் சேரும் அரசுகள் தம்பதிகளுக்கு சமமான உரிமைகளும் கடமைகளும் திருமணம் செய்து கொள்வதிலும் மணவாழ்விலும் மணவிலக்கு பெறுவதிலும் கிடைப்பதை உறுதி செய்ய உரிய நடவடிக்கை எடுக்கும்.

### விதி 24

1. இன, நிற, மத, பால், மொழி, தேசியவம்சாவழி, சமூகவம்சாவழி காரணமான எவ்வித பேதமுமின்றி, ஒவ்வொரு குழந்தைக்கும் குழந்தை என்ற நிலையில் தேவைப்படும் பாதுகாப்பு உரிமைக்கான செயல்களைக் குடும்பம், சமூகம், அரசு ஆகிவற்றிடமிருந்து பெறும் உரிமை இருப்பது அங்கீகரிக்கப்படும்.
2. ஒவ்வொரு பிறப்பும் பதிவு செய்யப்படும். ஒவ்வொரு குழந்தைக்கும் ஒரு பெயர் இருக்கும்.
3. ஒவ்வொரு குழந்தைக்கும் ஒரு தேசிய சார்புக்கான உரிமை உண்டு.

### விதி 25

விதி 2இல் குறிப்பிடப்பட்டுள்ள எந்தவித பேதமுமின்றியும், நியாயமற்ற எவ்வித நிபந்தனைகளுமின்றியும் ஒவ்வொரு குடிமகனுக்கும் கீழ்க்கண்ட உரிமைகளும் வாய்ப்புகளும் கிடைக்க வேண்டும்:

அ. பொது நிர்வாகப் பணிகளில் நேரடியாகவோ, சுயேச்சையாகத் தேர்ந்தெடுத்த பிரதிநிதிமூலமோ—பங்கெடுத்துக்கொள்ளுதல்;

ஆ. குறிப்பிட்ட காலப்படி நிகழும் மெய்யான தேர்தல்களில் நிற்கவும் வாக்களிக்கவும் அனைவருடைய சமஉரிமைகளுக்கும் அத்தேர்தல்கள் ரகசிய வாக்குப்பதிவுமூலம் நடைபெறும். அதில் வாக்காளருக்கு தன் விருப்பத்தை சுதந்திரமாக வெளியிட உத்தரவாதம் உண்டு.

இ. தன்நாட்டு அரசுப்பணிகளில், பொதுவாக சமமான உரிமைப்படி, சேரும் வாய்ப்பு.

### விதி 26

சட்டத்தின்முன் அனைவரும் சமம்; எந்த பேதமுமின்றி சட்டத்தின் பாதுகாப்பு அனைவருக்கும் கிடைக்கும். அந்த வகையில் சட்டமே சகலவித பேதங்களையும் நிராகரிக்கும். இனம், நிறம், பால், மொழி, மதம், அரசியல் கருத்து, பிறகொள்கைகள், தேசிய வம்சாவழி, சமூகவம்சாவழி, சொத்து, பிறப்பு, அல்லது வேறு நிலை என்ற எந்த அடிப்படையில் பேதம் காட்டப்படுவதிலிருந்தும் எல்லாருக்கும் சமமான பாதுகாப்புக்கு சட்டம் உத்தரவாதம் தரும்.

**விதி 27**

மதம், மொழி, கலாச்சாரம் என்பவைகளில் எந்த அடிப்படையிலேனும் சிறுபான்மையோரையும் கொண்ட நாடுகளில், அவ்வகை சிறுபான்மையினருக்கும் தம்மைச் சார்ந்த மற்றவர்களுடன்கூட, தமது கலாச்சாரத்தை ரசிக்கவும், தமது மதத்தைக் கடைப்பிடிக்கவும் சார்ந்தொழுகவும், தம்மொழியைப் பயன்படுத்தவும் உள்ள உரிமை மறுக்கப்படாது.

—

## பகுதி 4

**விதி 40**

1. இவ்வுடன்படிக்கையில் சேரும் அரசுகள் இதில் கூறப்பெறும் உரிமைகள் இடம்பெற தாம் எடுக்கும் நடவடிக்கைகள் பற்றியும், அவற்றை அனுபவிப்பதில் ஏற்படும் முன்னேற்றம் குறித்தும் அறிக்கைகள் அளிக்கவும் உத்தரவாதம் தருகின்றன.

—

# 5

# சகலவித இனபேதங்களையும் ஒழிப்பது பற்றிய பன்னாட்டு உடன்படிக்கை

*இவ்வுடன்படிக்கை ஐ.நா. பொதுச்சபையில் 21.12.1965 அன்று நிறைவேற்றப்பட்டு 4.1.1969 முதல் நடைமுறைக்கு வந்தது. இதோ, உடன்படிக்கையிலிருந்து சில பகுதிகள்*

---

இவ்வுடன்படிக்கையில் சேரும் அரசுகள்

— மானிடர் அனைவரிலும் உள்ளார்ந்து அமைந்துள்ள சமத்துவம், மாண்பு ஆகிய தத்துவங்களின் அடிப்படையில் ஐ.நா. அமைப்புச்சட்டம் அமைந்துள்ளது என்பதையும், உறுப்பு நாடுகள் தனித்தனியேயும் தம்முள் இணைந்தும் ஐ.நா. கூட்டுறவுடன் இன, மத, பால், மொழி வேறுபாடின்றி அனைவருக்கும் மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் உண்டென்பதை உலகமே ஏற்கச் செய்வதற்கான முயற்சிகளில், ஐநாவின் முக்கியமான நோக்கங் களில் ஒன்றாக அந்த சாதனைக்கு தம்மையும் ஒப்புக்கொடுக்கின்றன என்பதைக் கருதி பார்த்தும்,

— மானிடர் யாவரும் சுதந்திரமாய்ப் பிறக்கின்றனர் என்றும், மாண்பிலும் உரிமையிலும் சமமானவர்கள் என்றும் அதில் குறிப்பிடும் உரிமைகளுக்கும் சுதந்திரங்கட்கும் எவ்வித வேறுபாடு மின்றி—குறிப்பாக இன, மத, தேசிய வேறுபாடின்றி அனைவரும் பாத்தியப்பட்டவர்களென்றும் மனித உரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனம் முழங்குவதைக் கருதிப்பார்த்தும்,

— சட்டத்தின்முன் அனைவரும் சமம் என்பதையும் எவ்வித பாரபட்சம், எவ்வித பாரபட்சத்துக்கான தூண்டுதல் ஆகியவற்றுக் கெதிராக, அனைவருக்கும் சட்டத்தின்முன் சமபாதுகாப்பு உண்டு என்பதையும் கருதிப்பார்த்தும்,

— காலனியாதிக்கம், அதனோடு தொடர்புடைய பிரித்து வைக்கும் பழக்கங்கள் பாரபட்சங்கள் ஆகியவற்றை—அவை எங்கே எந்த உருவில் இருந்தாலும் ஐ.நா. கண்டிப்பதையும் 14.12.1960 நாளிட்ட "குடியேற்ற நாடுகளுக்கும் அவற்றின் மக்களுக்கும் விடுதலை வழங்குதல் பற்றிய பிரகடனம்" (பொதுச் சபைத் தீர்மானம் 1514 (xv) ஒப்புக்கொண்டு புனிதப் பிரகடனமாகக் கூறியபடி விரைவாகவும் நிபந்தனைகளின்றியும் அவ்வாதிக்கங்களை முடிவுகட்ட வேண்டிய அவசியத்தைக் கருதிப்பார்த்தும்,

— 'சகல வித இன பாரபட்சங்களையும் ஒழிப்பது பற்றிய ஐ.நா. பிரகடனம்' (பொதுச் சபைத் தீர்மானம் 1904 (xviii) 20.11.1963) இன பாரபட்சத்தை எந்த வடிவிலிருந்தாலும் உலக முழுவதிலிருந்தும் விரைவில் ஒழிக்க வேண்டிய அவசியத்தையும், மனிதப் பிறவியின் மாண்பையும் மரியாதையையும் அனைவரும் புரிந்துகொள்ளச் செய்யவேண்டுமென்பதையும் வலியுறுத்துவதைக் கருதிப்பார்த்தும்,

— இனவேறுபாட்டின் அடிப்படையில் உயர்வு பாராட்டும் எந்தக் கொள்கை தத்துவமும் அறிவியல் பூர்வமாகப் பார்த்தால் தவறென்பதிலும், தார்மிக அடிப்படையில் கண்டனத்துக்குரியதென்பதிலும், சமூக ரீதியில் நெறியற்றதும் அபாயகரமானதுமாகும் என்பதிலும், எந்த இடத்திலும் கொள்கையளவிலோ நடைமுறையிலோ இன அடிப்படையிலான பாரபட்சத்துக்கு ஒரு நியாயமுமில்லை என்பதிலும் தெளிவாக இருப்பதாலும்,

— இனம், மதம், கலாச்சார வம்சாவழி காரணமாக மனிதர்களுக்குள் வித்தியாசம் பாராட்டுவது நாடுகளுக்குள் நேசமான சமாதான வாழ்வுக்கோர் தடை; அது மக்களிடையே சமாதானம், பாதுகாப்பு ஆகியவற்றைக் கெடுக்கக் கூடியது, ஒரே நாட்டுக்குள் அடுத்தடுத்து வாழ்பவர்களுக்கு இடையேகூட ஒற்றுமையை கெடுக்கக் கூடியது என்பதை வலியுறுத்தியும்;

— இனச்சுவர்கள் இருப்பது எந்த மனித சமூகத்துக்கும் எதிரானது என்பதில் தெளிவாக இருப்பதாலும்

— நிறவேற்றுமைக் கொள்கை, தனித்துவைத்தல், பிரித்தல் முதலிய, இனத்திமிர் மற்றும் வெறுப்பில் பிறந்த அடிப்படையான அரசாங்கக் கொள்கைகளைக் கண்டும், உலகின் சில பகுதிகளில் இன வேற்றுமை தலையெடுப்பதன் அடையாளங்களைக் கண்டும் அதிர்ந்து போயும்,

— இனவேற்றுமைக் கொடுமையை அது எந்த உருவில், எந்த வகையில் தலையெடுத்தாலும் விரைந்தொழிப்பதற்கான அனைத்து நடவடிக்கைகளும் மேற்கொள்ளும் இனவெறித் தத்துவங்களையும்

கொள்கைகளையும் தடுத்துப் போரிடவும் அவற்றின்மூலம் இனங்களிடையே நல்லுணர்வைப் பேணி, எவ்வித இன வெறி, இனப்பாகுபாடுகளும் இல்லாத புதியதோர் உலக சமுதாயத்தை உருவாக்கவும் உறுதியாகத் தீர்மானித்தும்,

கீழ்க்கண்ட உடன்படிக்கையை ஏற்படுத்துகின்றன:

## பகுதி 1

### விதி 1

1. இவ்வுடன்படிக்கையில் 'இனப்பாகுபாடுகள்' (ரேசியல் டிஸ்கிரிமினேஷன்) எனும் தொடர், அரசியல் பொருளாதார சமூக கலாச்சாரத்துறையிலோ பொது வாழ்வின் வேறு எந்த ஒரு தளத்திலுமோ, மனித உரிமைகளையும் அடிப்படை சுதந் திரங்களையும் சமத்துவமாக அங்கீகரிப்பதையோ, அனுமதிப் பதையோ, அனுபவிப்பதையோ பாதிக்க அல்லது அழிக்கக் கூடிய நோக்கமோ விளைவோ கொண்ட இனம், நிறம், பிறப்பு, தேசிய வம்சாவழி, கலாச்சார வம்சாவழி என்ற எந்த அடிப் படையிலேனும் வேற்றுமைகாட்டுதல், விலக்குதல், கட்டுப் படுத்தல், சலுகைகாட்டல் என அனைத்தையும் குறிக்கும்.

..........

4. குறிப்பிட்ட இனக்குழு அல்லது கலாச்சாரக்குழு அல்லது தனிமனிதர்கள் தம் மனித உரிமைகளையும் அடிப்படை சுதந் திரங்களையும் சமத்துவ அடிப்படையில் அனுபவிப் பதையோ, அனுசரிப்பதையோ காக்க எந்த அளவு தேவையோ அந்த அளவு பாதுகாப்பதற்காக அவர்களுக்கு போதுமான முன்னேற்றம் கிடைக்கவேண்டுமென்ற ஒரே காரணத்துக்காக சிறப்பு நடவடிக்கைகள் இனப்பாகுபாடுகளாகக் கருதப்பட மாட்டா. ஆனால், அத்தகைய செயல்பாடுகளின் விளைவாக வெவ்வேறு குழுக்களுக்குவெவ்வேறு உரிமைகள்'என்ற நிலை ஏற்பட்டுவிடக்கூடாது. அத்தோடு எந்த நோக்கத்துக்காக அந்நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றனவோ அந்த நோக்கம் நிறைவேறிய பிறகு அந்நடவடிக்கைகள் தொடரக்கூடாது.

### விதி 2

1. இந்த அரசுகள் இனப்பாகுபாடுகளைக் கண்டிக்கின்றன. பொருத்தமான எல்லா வழிகளிலும், தாமதமின்றி, அப்பாகு பாடுகளை அவை எவ்வுருவில் இருந்தாலும் அழிக்கவும்

அனைத்து இனங்களிடையிலும் நல்லுணர்வை வளர்க்கவும் உதவும் கொள்கையைக் கடைப்பிடிக்க உறுதியளிக்கின்றன.

2. தேவைப்படும் போதெல்லாம், பொருளாதார-சமூக-கலாச்சார மற்றும் பிற தளங்களிலெல்லாம் குறிப்பிட்ட இனக்குழுக்கள் அவை சார்ந்த மக்களின் வளர்ச்சியையும் பாதுகாப்பையும் உறுதி செய்யும்வண்ணமும் அவர்களும் சமநிலையில் மனித உரிமைகளையும் அடிப்படை சுதந்திரங்களையும் முழுவதும் அனுபவிக்க உறுதி செய்யும் வகையில் தனிப்பட்ட உறுதியான நடவடிக்கைகளையும் இந்த அரசுகள் எடுக்கும். எந்த நோக்கங் களுக்காக இத்தகைய ஏற்பாடுகள் செய்யப்படுகின்றனவோ அந்நோக்கங்கள் நிறைவேறிய பின்பு சமச்சீரற்ற, அதிகமும் குறைவுமான உரிமைகளை வேறுவேறு இனங்கள் அனுபவிக்கக் கூடிய நிலை இந்நடவடிக்கைகளின் விளைவாக உருவாகாமல் பார்த்துக் கொள்ளப்படும்.

**விதி 3**

நிறவேற்றுமையையும் இனப்பிரித்துவைத்தலையும் இவ்வரசுகள் குறிப் பாகக் கண்டிக்கின்றன. தமது ஆளுகைக்குட்பட்ட நிலப்பரப்பில் இத்தகையதான அனைத்துப் பழக்கங்களையும் தடுக்கவும் தடை செய்யவும் தகர்த்தழிக்கவும் உறுதியெடுக்கின்றன.

**விதி 4**

ஒரு இனம் அல்லது ஒரு நிறத்தவர் ஒரு குறிப்பிட்ட வம்சாவழியினர் உலகின் மற்ற மாந்தர் அனைவரையும்விட மேலானவர்கள் என்ற கருத்தினடிப்படையிலோ கொள்கையடிப்படையிலோ இயங்கும் அமைப்புகள், அதேபோல் இனவெறுப்பு அல்லது எந்த வகையிலோ பாகுபாடு ஆகியவற்றை நியாயப்படுத்தவோ பாதுகாக்கவோ முயலும் அமைப்புகள், இந்த வகைகளைச் சேர்ந்த அமைப்புகளின் பிரச்சாரம் முதலியவற்றை இவ்வரசுகள் கண்டிப்பதுடன், அத்தகைய பாகு படுத்தும் செயல்கள், அவற்றுக்கான தூண்டுதல் ஆகியவற்றை ஒழிப்ப தற்கான நேரடி நடிவடிக்கைகளை விரைவாக எடுக்கவும் உறுதி எடுக்கின்றன. இதற்காக சர்வதேச மனித உரிமைப் பிரகடனத்தின் விதிகளில் பொறிக்கப்பட்டிருக்கும் தத்துவங் களுக்கும் இந்த உடன்படிக்கையின் 5வது பிரிவில் குறிப்பிட்டுக் கூறப்பெறும் உரிமைகளையும் கருத்தில் இருத்தி கீழ்க்கண்டவை உள்பட பல நடவடிக்கைகளை அவை மேற்கொள்ளும்.

அ. இன அடிப்படையிலான மேலாதிக்கம் அல்லது பாகுபாடு

களை அடிப்படையாகக் கொண்ட கருத்துக்களைப் பரப்புவதையும், இனப்பாகுபாடுகளையும் வன்முறைச் செயல்களையும் தூண்டுதல், வேறு கலாச்சாரத்தையோ நிறத்தையோ கொண்டவர்களையோ-குழுவினரையோ எதிர்த்து அந்த அடிப்படையில் செயல்புரிதல், இனவெறிச் செயல்களுக்கு நிதிஉதவியோ பிற உதவியோ செய்தல் ஆகியவைகளைச் சட்டப்படி தண்டனைக்குரிய குற்றங்களாக அறிவித்தல்;

ஆ. இனப்பாகுபாடுகளை வளர்க்கவும் தூண்டிவிடவும் வழி செய்யும் அமைப்புகள், ஒழுங்குசெய்யப்பட்ட பிரச்சாரம் ஆகியவற்றை சட்ட விரோதமென்று அறிவித்து தடை செய்தலும், அத்தகைய செயல்களிலோ அமைப்புகளிலோ பங்கெடுப்பதை சட்டத்தின்கீழ் தண்டனை பெறுதற்குரிய குற்றங்களாக ஏற்றலும்;

இ. பொது நிர்வாகமும், பொது நிறுவனங்களும், உள்ளூர் அளவிலோ தேசிய மட்டத்திலோ, அத்தகு வேறுபாடுகளை வளர்க்கவோ, தூண்டிவிடவோ அனுமதியாதிருத்தல்.

### விதி 5

இரண்டாம் பிரிவில் கூறப்பெறும் கடமைகளை நிறைவேற்றும் வகையாய் இன அடிப்படையிலான பாகுபாடுகள் எந்த உருவில் வந்தாலும் அவற்றைத் தடைசெய்தொழிக்கவும், சட்டத்தின்முன் சமத்துவம் என்ற உரிமையை, இனம், மதம், தேசிய/கலாச்சார வம்சாவழி என்ற எவ்விதப் பாகுபாடுமின்றி அனைவரும் அனுபவிக்கவும் இவ்வரசுகள் உறுதியெடுத்துக் கொள்கின்றன.

### விதி 7

இனப்பாகுபாடுகளுக்கு வகைசெய்யும் காழ்ப்புணர்வுகளை எதிர்த்துப் போராடும் நோக்கிலும், நாடுகளிக்கிடையிலும், பல இன, பல கலாச்சார குழுக்களிடையிலும் புரிதல்–சகித்தல், நேசித்தல் ஆகியவற்றைப் பரப்பும் நோக்கிலும், ஐ.நா. அமைப்புத்திட்டம், மனித உரிமைகள் பற்றிய தேசியப் பிரகடனம், சகலவிதமான இனபேதங்களையும் ஒழிப்பதுபற்றிய ஐ.நா. பிரகடனம், இந்த உடன்படிக்கை ஆகிய ஆவணங்களின் தத்துவங்களையும் நோக்கங்களையும் பிரச்சாரம் செய்யும் நோக்கிலும் பயனுள்ள நடவடிக்கைகளை அதிலும் குறிப்பாக கல்வி, முறைசாராக்கல்வி, கலாச்சாரம், தகவல்துறை ஆகிய தளங்களில் உடனடியாக எடுக்கவும் இவ்வரசுகள் உறுதியெடுத்துக் கொள்கின்றன.

6

# சித்திரவதை மற்றும் கொடிய, மனிதத் தன்மையற்ற அல்லது இழிவுபடுத்தும் நடத்தைகள் தண்டனைகள் ஆகிய வற்றுக்கெதிரான உடன்படிக்கை

*ஐ.நா. பொதுச்சபையால் 10.12.1984 அன்று ஏற்கப்பட்டு 26.6.87 அன்று நடைமுறைக்கு வந்த இந்த உடன்படிக்கையிலிருந்து சில பகுதிகள்:*

---

## இந்த உடன்படிக்கையில் பங்கேற்கும் அரசுகள்

— ஐநா. அமைப்புத்திட்டத்தின் தத்துவங்கள், நோக்கங்கள் ஆகியவை சொல்வது போல மானிடக் குடும்பத்தின் அனைத்து உறுப்பினர்களுக்கும் உரித்தான மாற்ற முடியாத சமானமான உரிமைகளை ஒப்புக் கொள்வதே உலகில் சுதந்திரமும் சமாதானமும் நீதியும் நிலவ வழி என்பதைக் கருத்திலிருத்தியும்,

— மனிதப்பிறவியின் உள்ளார்ந்த மாண்பிலிருந்து அவ்வுரிமைகள் பிறப்பதை ஒப்புக்கொண்டும்,

— ஐ.நா. திட்டத்தில் குறிப்பாக விதி 55இன் கீழ் மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் உலகம் முழுவதிலும் மதிக்கப்படவும், நடைமுறைப்படுத்தப்படவும் வகை செய்ய அரசுகளின் கடப்பாட்டைக் கருத்திலிருத்தியும்,

— சர்வதேசிய மனிதவுரிமைப் பிரகடன விதி 5, குடியுரிமையும் அரசியலுரிமையும் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கையின் விதி 7 ஆகிய இரண்டுமே எவரும் சித்திரவதை, கொடுமையான மனிதத்தன்மையற்ற அவமானப்படுத்தும் வகையில் நடத்தப்படுதல், அத்தகைய தண்டனை ஆகிய கொடுமைகளுக்கு

ஆளாக்கப்படக்கூடாது என்று கூறுவதை மதித்தும்,

— ஐ.நா. பொதுச்சபை 9.12.75இல் ஏற்றுக்கொண்ட 'சித்திரவதை முதலிய கொடுமையான மனிதத்தன்மையற்ற அவமதிக்கும்வகையில் நடத்தப்படுதல் அத்தகைய தண்டனைகள் ஆகியவற்றுக்கு ஆளாக்கப்படுவதிலிருந்து அனைவருக்கும் பாதுகாப்பளிப்பது பற்றிய பிரகடனத்தை மதித்தும்

— உலகெங்கும் சித்திரவதை முதலிய கொடுமையான மனிதத் தன்மையற்ற அவமதிக்கும் வகையில் நடத்தப்பட்டால், அத்தகு தண்டனைகளுக்கெதிரான போராட்டத்தை இன்னமும் வலுவாக்க விரும்பி கீழ்க்கண்டவாறு ஒப்பந்தம் செய்து கொள்கின்றன.—

## பகுதி 1

**விதி 1**

இந்த உடன்படிக்கையைப் பொறுத்தவரையில் 'சித்திரவதை' என்ற சொல் ஒருவருக்கு, அவரிடமிருந்தோ, மூன்றாவது ஆளிடமிருந்தோ தகவல்களையோ ஒப்புதல் வாக்குமூலத்தையோ பெறுவதற்காக மனதார தெரிந்தே உடலுக்கோ, மனதுக்கோ கடும் வலியையோ, துன்பத்தையோ ஏற்படுத்தக்கூடிய செயலைச் செய்தல் என்று பொருள். அவரோ, மற்றவரோ செய்த அல்லது செய்ததாகக் கருதப் படுகிற ஒரு குற்றத்துக்கு தண்டனையாக அச்செயல் அமைந்தாலோ, அவரையோ வேறொருவரையோ அச்சுறுத்தவோ கட்டாயப் படுத்தவோ செய்யப்பட்டாலோ, அல்லது பாகுபாடு காரணமாக அமைந்தாலோகூட அது 'சித்திரவதை'தான். அரசு அதிகாரி அல்லது அரசினால் அதிகாரம் தரப்பட்ட ஒருவரால் அந்த வலியோ, துன்பமோ இழைக்கப்பட்டால் அல்லது அவரது அனுமதி, தூண்டுதல் அல்லது அவருக்குத் தெரிந்து இழைக்கப்பட்டால் இந்த உடன்படிக்கையின்படி அது 'சித்திரவதை' என்று பொருள். ஆனால் அத்தகைய வலியோ துன்பமோ சட்டபூர்வ தண்டனைகளாக அமைந்தாலோ, அத்தகைய சட்டபூர்வ தண்டனைகளின் பகுதியாகவோ, தொடர்புடையதாகவோ அமையும்போது அது இந்த வரையறையுள் வராது...

**விதி 2**

1. ஒவ்வொரு அரசும் தனது கட்டுப்பாட்டில் உள்ள நாட்டில் சித்திரவதைக் கொடுமை நிகழ்வதைத் தடுக்க சட்டமியற்றல், நிர்வாக ஆணை, நீதித்துறை நடவடிக்கை உள்ளிட்ட பலவித

நடவடிக்கைகளையும் பயனுள்ள வகையில் எடுக்கும்.

2. சித்திரவதையை நியாயப்படுத்துவதற்காக போர், போர் அச்சம் ஏற்படுத்தும் சூழல், அரசியலில் நிலையற்றதன்மை ஏற்படுத்தும் உள்நாட்டு சூழல் எந்தவித பொதுவாழ்வு நெருக்கடி நிலைமையும் உட்பட எந்தவித அசாதாரண சூழ்நிலையையும் காரணம் காட்டக்கூடாது.

3. சித்திரவதையை நியாயப்படுத்த மேலதிகாரியின் ஆணையையோ ஒரு பொது அதிகாரியின் ஆணையையோ காட்ட முடியாது.

விதி 3

1. ஒரு மனிதரை தன் நாட்டிலிருந்து வெளியேற்றவோ, திருப்பியனுப்பவோ, இன்னொரு நாட்டிற்கு விசாரணைக்காக அனுப்பவோ இந்த அரசுகள் நினைக்கும் வேளையில் அவ்வாறு அனுப்பப்படக்கூடிய நாட்டில் அந்த மனிதர் சித்திரவதைக்கு ஆட்படுத்தப்படக்கூடிய ஆபத்திருக்கிறது என்று நம்புவதற்கு வலிய காரணங்கள் இருந்தால் அவர் அப்படி வெளியேற்றப்படக்கூடாது.

—

விதி 4

1. ஒவ்வொரு அரசும் எல்லா சித்திரவதை நடவடிக்கைகளும் தனது குற்றவியல் சட்டத்தின்கீழ் குற்றங்கள் என்று நிர்ணயிக்கப்படுவதை உறுதிசெய்யும். சித்திரவதை செய்வதற்கான முயற்சியில் இறங்குவதும், சித்திரவதையில் பங்கேற்றல் அல்லது ஒத்துழைத்தல் ஆகியவையும் அதே விதமாக நிர்ணயிக்கப்படுவதை உறுதி செய்யும்.

2. இவ்வரசுகள் இக்குற்றங்களின் தீவிரத் தன்மையையும் கணக்கிலெடுத்துக்கொண்டு அதற்குப் பொருத்தமான தண்டனைகளை நிர்ணயிக்கும்.

—

விதி 10

1. சித்திரவதைக்கு எதிரான தடை பற்றிய கல்வியும் தகவலும் சட்டத்தை நிலைநாட்டும் பணியாளர்கள், காவல்துறை, ராணுவம் இருசாராரும் பெறும் பயிற்சிகளில் முழு இடம்

பெறும். மருத்துவப்பணியில் உள்ளோர், பொது நிர்வாகிகள், மற்றபடி கைது, சிறைவைப்பு-அடைப்பு முதலிய வற்றோடு பணி நிலைத் தொடர்புடையோர் அனைவரது பயிற்சிகளும் அப்படியே. இது விடுபட்டு விடாமல் இவ்வரசுகள் பார்த்துக் கொள்ளும்.

2. மேற்கண்ட பணி செய்வோர்களின் பணிகளும் கடமைகளும் பற்றிய விதிகள் நியதிகள் ஆகியவற்றில் இத்தடைபற்றி குறிப்பிடப்படும்.

**விதி 11**

எவ்வித கைது-சிறைவைப்பு அடைக்கப்படல் ஆகியவற்றுக்கு ஆட்படும் நபர்கள் எப்படி வைத்துக்கொள்ளப்படவேண்டும், எப்படி நடத்தப்படவேண்டும் என்பதற்கான விசாரணை விதிகள், நியமங்கள், முறைகள், பழக்கங்கள், ஏற்பாடுகள் ஆகியவற்றை தத்தம் நாட்டில் இவ்வரசுகள் சீரான விமர்சனங்களுக்கு உட்படுத்தும்.

**விதி 12**

தனது ஆளுகைக்குட்பட்ட பகுதிகள் எங்கேனும் சித்திரவதை செயல் ஏதும் நடந்திருக்கலாம் என்று நம்ப நியாயமான காரணங்கள் இருந்தால் அங்கெல்லாம், இதற்குத் தகுந்த தனது அதிகாரிகள் உடனே, நேர்மையான விசாரணை நடத்துவார்கள் என்பதற்கும் இவ்வரசுகள் உறுதி செய்யும்.

**விதி 13**

இவ்வரசுகள் ஒவ்வொன்றும் அதன் ஆளுகைக்குட்பட்ட பகுதி களில் தான் சித்திரவதை செய்யப்பட்டதாகக் கூறும் எவருக்கும் அதன் கீழ்பணியாற்றும் தகுந்த அமைப்பிடம் முறையீடு செய்யவும், வழக்கு விரைவாகவும் நியாயமாக விசாரிக்கப்படவும் உறுதி செய்ய வேண்டும். அந்தப்புகாரினாலோ, அதில் சாட்சியாக வந்ததனாலோ அவரோ மூன்றாவது நபரோ அச்சுறுத்தப்படவோ அநியாயமாக நடத்தப்படவோ பாதுகாக்கப்படுவார்கள் என்பதையும் உறுதி செய்ய வேண்டும். அதற்கான நடவடிக்கை எடுக்க வேண்டும்.

**விதி 14**

1. இவ்வரசுகள் ஒவ்வொன்றும் தனது சட்ட அமைப்புமூலம், சித்திரவதைக்காளான ஒருவர், பரிகாரம் பெறவும் எந்த அளவு முடியுமோ அந்த அளவு மறு சீர்மை உட்பட இழப்பீடு

பெறவும் நடைமுறைப்படுத்திக் கொள்ளக்கூடிய உரிமையை உறுதிப்படுத்தும். சித்திரவதையால் ஒருவர் உயிரிழந்தால் அவரைச் சார்ந்திருந்தவர்கள் இழப்பீடு பெறுவர்.

2. இவ்விதியில் கண்ட எதுவும் பாதிக்கப்பட்டவரோ மற்றவர்களோ தத்தம் தேசியச் சட்டத்தின்கீழ் இழப்பீடு பெறும் உரிமையை பாதிக்காது.

## விதி 15

சித்திரவதை செய்யப்பட்டு ஒரு வாக்குமூலம் பெறப்பட்டது என்று நிறுவப்பட்டுவிட்டால், அந்த வாக்குமூலம், சித்திரவதை செய்தவர் என்று குற்றம் சாட்டப்பட்டவர்க்கு எதிராக அன்னியில், எந்த விசாரணையிலும் சாட்சியாக ஏற்கப்பட முடியாதென்பதையும் இவ்வரசுகள் உறுதி செய்யும்.

7

# மகளிருக்கு எதிரான அனைத்து பாகுபாடுகளையும் ஒழிப்பதற்கான உடன்படிக்கை

*ஐ.நா. பொதுச்சபையால் 18.2.1979அன்று ஏற்கப்பட்டு 3.9.1981 அன்று நடைமுறைக்கு வந்த இவ்வுடன்படிக்கையின் சில பகுதிகள் கீழே தரப்படுகின்றன.*

---

இவ்வுடன்படிக்கையில் சேரும் அரசுகள்,

— ஐ.நா. அமைப்புத்திட்டம், அடிப்படை மனித உரிமைகளிலும், மனிதப் பிறவியின் மதிப்பிலும், மாண்பிலும், ஆணும் பெண்ணும் சமவுரிமை கொண்டவர்கள் என்பதிலும் நம்பிக்கையை உறுதி செய்வதை கவனத்தில் கொண்டும்,

— ஐ.நா. சர்வதேசிய மனித உரிமைப்பிரகடனம் "பாகுபாடு காட்டுதல் அனுமதிக்கப்படக்கூடியதல்ல" என்ற தத்துவத்தை அழுத்திக் கூறுவதையும், மானிடர் யாவரும் சுதந்திரமாய்ப் பிறந்தவர்; உரிமைகளிலும் மதிப்பிலும் சமமானவர்கள் என்றும், பால் வேறுபாடு உட்பட எவ்விதப் பாகுபாடுமின்றி அப்பிரகடனத்தில் குறிக்கப் பெறும் உரிமைகளுக்கும் சுதந்திரங்களுக்கும் ஒவ்வொரு மனிதரும் பாத்தியப்பட்டவர் என்றும் முழங்குவதை கவனத்தில் கொண்டும்,

— பன்னாட்டு மனித உரிமைகள் உடன்படிக்கையில் இணைந்த நாடுகளுக்கு, எல்லா ஆடவரும் மகளிரும் பொருளாதார, சமூக, கலாச்சார, குடிமை பற்றிய, அரசியல் உரிமைகளையும் சமமாக அனுபவிக்க உரிமை கொண்டிருப்பதை உறுதிசெய்யும் கடமை இருப்பதை கவனத்தில் கொண்டும்,

— ஐ.நாவின் கீழாகவும், சிறப்புத்துவம் பெற்ற அமைப்புகளின்

கீழும் ஆண்-பெண் சமவுரிமையைப் பேணும் பன்னாட்டு உடன்படிக்கைகளையெல்லாம் கருத்தில் இருத்தியும்,

— அவை நிறைவேற்றியுள்ள தீர்மானங்கள், பிரகடனங்கள் பரிந்துரைகள் ஆகியவற்றை கவனத்தில் கொண்டும்,

— இத்தனை வகையான ஏற்பாடுகளையும் மீறி பெண்ணுக் கெதிரான மிக விரிவான பாகுபாடு தொடர்ந்து இருந்து வருவதைக் காண்பதனாலே கவலைகொண்டும்,

— பெண்ணுக்கெதிரான பாகுபாடு என்பது உரிமைகள் சமத்துவம், மனித மாண்புக்குரிய மரியாதை ஆகிய தத்துவங்களை மீறுகிறது, தத்தம் நாட்டில் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக அரசியல் பொருளாதார சமூக கலாச்சார வாழ்வில் பங்களிப்பதற்கு அது ஒரு தடை அது குடும்பம் சமூகம் இரண்டின் வளமும் பெருகுவதை தடுக்கிறது-தனது நாட்டுக்கும், உலகுக்கும் சேவை செய்யும் வகையில் மகளிரின் சக்திகள் முழு வளர்ச்சி பெறுவதை மேலும் சிரமமாக்குகிறது என்பதையெல்லாம் நினைவுகூர்ந்தும்,

— வறுமைச் சூழலில் மகளிருக்கு உணவு, சுகாதாரம், கல்வி, பயிற்சி, பணிவாய்ப்பு, மற்றும் பலதுறைத் தேவைகளும் ஆகக் குறைவாகவே கிடைப்பதில் கவலை கொண்டும்,

— நீதியும் நேர்மையும் அடிப்படையாய் அமைந்த புதிதான சர்வதேசப் பொருளாதார அமைப்பை நிறுவுவது ஆண்-பெண் சமத் துவத்தைப் பேணி வளர்ப்பதில் கணிசமான பங்களிப்பு செய்யும் என்று தெளிந்தும்,

— நிறப்பாகுபாடு, அனைத்துவகை இனப்பாகுபாடுகள், குடியேற்ற ஆதிக்கம், புதிய குடியேற்ற முறை ஆதிக்கம், படையெடுப்பு, அந்நியர் வந்து புகல் ஆதிக்கம் செலுத்துதல், உள்நாட்டு விவகாரங் களில் பிறர் தலையீடு ஆகியவற்றை ஒழிப்பது ஆடவரும் மகளிரும் தமது உரிமைகளை முழுதாக அனுபவிக்க அவசியத் தேவை என்பதை அடிக்கோடிட்டும்,

— சர்வதேச சமாதானமும் பாதுகாப்பும் வலுப்படுத்தப்படுதல், நாடுகளிடையிலான இறுக்கம் தளர்க்கப்படுதல், தம்முள் உள்ள பொருளாதார சமூக அமைப்பு வேறுபாடுகளைத் தாண்டி எல்லா நாடுகளிடையும் கூட்டுறவு, பொதுவான முழு ஆயுதக் குறைப்பு— அதிலும் கடுமையான, சக்திவாய்ந்த சர்வதேசக் கட்டுப்பாட்டின் கீழான அணு ஆயுதக் கட்டுப்பாடு, நாடுகளுக்கிடையிலான உறவில் நியாயம் சமத்துவம் பரஸ்பர உதவி என்ற கோட்பாடுகள் பிரமாண மாகக் கொள்ளப்படுதல், அந்நியர் புகுந்த நாடுகள், காலனியாதிக்க

அந்நியராதிக்க நாடுகள் ஆகியவற்றின் மக்களுக்கு சுயநிர்ணய உரிமையும் விடுபடும் உரிமையும் கைவசமாதல், தேசிய இறையாண்மையும் எல்லை ஒருமைப்பாடும் மதிக்கப்படுதல் ஆகியவை சமூக முன்னேற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் வகை செய்ய, அதன்விளைவாக ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமாதல் நிறைவேறவும் உதவும் என்பதை உறுதி செய்தும்,

— ஒருநாட்டின் முழுமையும் நிறைவுமான வளர்ச்சிக்கும், உலக நன்மைக்கும், சமாதானத்துக்கும், ஆணுக்கு முற்றிலும் இணையாகப் பெண்ணும், அனைத்துத் தளங்களிலும் பங்களிப்பது தேவை என்று தெளிந்தும்,

— குடும்ப நன்மைக்கும் சமூக வளர்ச்சிக்கும் பெண் தந்திருக்கும் உன்னதப் பங்களிப்பு இன்னமும் முழுதாய் அங்கீகரிக்கப்படாததும் தாய்மையின் சமூக முக்கியத்துவம் குடும்பத்திலும் குழந்தை வளர்ப்பிலும் பெற்றோர் இருவரின் பங்கு ஆகியவற்றை நெஞ்சில் இருத்தியும்,

— குழந்தைப் பெறுவதில் பெண்ணின் பங்கு பணி பாகுபாட்டுக்கு அடித்தளம் வகுக்கக் கூடாது, மாறாக குழந்தையை வளர்க்கும் பொறுப்பில் ஆண், பெண் மொத்த சமூகமுமே ஒரு பங்கெடுத்துக்கொள்ள வேண்டியது தேவை என்று புரிந்துகொண்டும்,

— மகளிருக்கெதிரான பாகுபாடுகளை ஒழிப்பது பற்றிய பிரகடனத்தில் பொதிந்துள்ள தத்துவங்களை நடைமுறைப்படுத்தவும், அதற்காக, எல்லா வகையான, எந்த உருவிலுமான அத்தகைய பாகுபாடுகளையும் ஒழிக்கத் தேவைப்படுகின்ற நடவடிக்கைகளை எடுக்கவும் உறுதி-பூண்டும்,

கீழ்க்கண்டவைகளில் ஒன்றுபட ஒப்புக் கொள்கின்றன.

## பகுதி 1

### விதி 1

இந்த உடன்படிக்கையைப் பொறுத்தமட்டில் 'பெண்ணுக்கெதிரான பாகுபாடு' என்பது அரசியல், பொருளாதார, சமூக, கலாச்சார, குடியியலிலான அல்லது வேறெந்த விதமான அடிபபடை சுதந்திரங் களையும், மனித உரிமைகளையும் திருமணமாகியிருந்தாலும் இல்லா விட்டாலும் ஆண்-பெண் சமத்துவ அடிப்படையில் பெண் அனுப விப்பதையோ, பயன்படுத்துவதையோ அங்கீகரிப்பதையோ, தடுக்கும் அல்லது மறுக்கும் நோக்கத்துடனோ அல்லது தடையையோ மறுதலிப்பையோ ஏற்படுத்தக்கூடியதாகவோ பால் அடிப்படையில்

செய்யப்படும் வேறுபடுத்தல், புறமாக்குதல், கட்டுப்படுத்தல் அனைத்தினையும் குறிக்கும்.

**விதி 2**

இவ்வுடன்படிக்கையில் இணையும் அரசுகள் பெண்ணுக்கெதிரான பாகுபாட்டை அதன் அத்தனை வகைகளையும் கண்டிக்கின்றன; பெண்ணுக்கெதிரான பாகுபாட்டை ஒழிக்க ஒரு கொள்கையை தக்க வகைகளனைத்திலும் தாமதியாமல் பின்பற்ற ஒப்புக்கொண்டு, அந்த குறிக்கோளுக்காக,

அ. இதுவரை சேர்க்கப்படாதிருந்தால், தமதுநாட்டு அரசியலமைப்புச் சட்டத்திலோ அல்லது தகுந்த பிறிதோர் சட்டத்திலோ, ஆண்-பெண் சமத்துவ தத்துவத்தை பொறிக்கவும், சட்டத்தின்மூலமும் உரிய பிறவழிகளிலும் அதனை நடைமுறையில் கைவரப்பெறச் செய்யவும்,

ஆ. பெண்ணுக்கெதிரான பாகுபாடு அனைத்தையும் தடைசெய்து தக்க சட்டநடவடிக்கைகளும் பிறநடவடிக்கைகளும், தேவைப்படும் இடங்களில் பாகுபாடு செய்வோர்க்கெதிரான தடைகளும் மேற்கொள்ளவும்,

இ. பால் சமத்துவ அடிப்படையில் பெண்களின் உரிமைகளுக்கு சட்டப்பாதுகாப்பை நிறுவவும் தகுதிபெற்ற தேசிய தீர்வாணையங்கள் மூலமும் பிற பொது அமைப்புகள் மூலமும் எவ்விதப் பாகுபாட்டுச் செயலிலிருந்தும் பயனுள்ள பாதுகாப்பை உறுதி செய்யவும்,

ஈ. மகளிர்க்கெதிரான பாகுபாடு காட்டும் எந்தச் செயல் எந்தப் பழக்கத்திலிருந்தும் விலகவும், பொது நிறுவனங்களும், ஆளும் அமைப்புகளும் இக்கடப்பாட்டுக்கேற்ப பணியாற்றுமென உறுதி செய்யவும்,

உ. எந்தத் தனியாரும், நிறுவனமும் அமைப்பும் மகளிர்க்கெதிராகப் பாகுபாடு செய்வதை ஒழிக்க பொருத்தமான நடவடிக்கைகளை எடுக்கவும்,

ஊ. இத்தகைய பாகுபாட்டுக்கு வகை செய்யும் பழக்கவழக்கங்கள், விதிகள், சட்டங்கள் ஆகியவற்றை மாற்றும்வண்ணம் சட்டத் திருத்தம் உட்பட பொருத்தமான நடவடிக்கைகள் அனைத்தையும் எடுக்கவும்,

எ. இத்தகைய பாகுபாட்டுக்கு வகை செய்யும் தண்டனை விதிகளை தேசிய சட்டங்களிலிருந்து அகற்றவும், உறுதியளிக்கின்றன.

விதி 3

இவ்வரசுகள் எல்லா தளங்களிலும், குறிப்பாக அரசியல், பொருளாதார, சமூக, கலாச்சாரத் துறைகளிலும் சட்டமியற்றல் உட்பட சகல தேவையான நடவடிக்கைகளும் எடுத்து ஆண்களோடு பெண்களும் சரிநிகர்சமானமாக மனித உரிமைகளையும் அடிப்படை சுதந்திரங்களையும் பயன்படுத்தவும் அனுபவிக்கவும் அவர்களுக்கு உறுதிகிடைக்கும் வகையில் அந்நடவடிக்கைகள் அமையவும் உறுதிசெய்யும்.

விதி 4

1. இவ்வரசுகள் தற்காலிகமாக ஆண்பெண் சமத்துவ நிலைமை நடைமுறையில் அமைவதை விரைவுபடுத்துவதற்காக எடுக்கும் சிறப்பு நடவடிக்கை எதுவும் இவ்வுடன்படிக்கையைப் பொறுத்தவரை 'பாகுபாடு' என்று வகைப்படுத்தப்படாது; ஆனால் அந்நடவடிக்கைகள் எவ்விதத்திலும் சமத்துவமற்ற வெவ்வேறான தரநிர்ணயங்களுக்கு வழிசெய்து சமவாய்ப்புகளும் சமமாக நடத்தப்படுதலும் என்ற நோக்கம் நிறைவேற்றப் பட்டபின் அந்த தற்காலிக நடவடிக்கைகள் நிறுத்தப்படும்.
2. இந்த உடன்படிக்கையில் காணும் நடவடிக்கைகள் உட்பட இவ்வரசுகள் தாய்மைப் பாதுகாப்புக்காக எடுக்கக்கூடிய சிறப்பு நடவடிக்கைகள் எதுவும் பாகுபாடு என்று கருதப்படாது.

விதி 5

அ) ஆண் தாழ்வென்றோ, பெண் தாழ்வென்றோ நம்புவதை அடிப் படையாகக் கொண்ட அல்லது ஆண் என்றால் இப்படித்தான் பெண் என்றால் அப்படித்தான் என்ற வரையறுப்புகளை நிலைப்படுத்துகிற விருப்பு வெறுப்புகள், மரபுகள், வழக்கங்கள் ஆகியவற்றை ஒழித்துக்கட்டுவதை நோக்கமாகக் கொண்டு சமூக கலாச்சார அமைப்புகளை மாற்றவும்;

ஆ) எல்லா வகையிலும் குழந்தைகள் நலன் தலையாய அம்சங் களில் ஒன்றென உணர்த்தும் வகையில், தாய்மை ஒரு சமூகக் கடமை என்பதை புரியவைப்பதாக, குழந்தைகளை வளர்த்து ஆளாக்குவது ஆண்-பெண் இருபாலருக்கும் கடமை என்று உரைப்பதாகக் குடும்பக்கல்வி அமைவதை உறுதிப்படுத்தவும்;

இவ்வரசுகள் உரிய நடவடிக்கைகள் அனைத்தையும் எடுக்கும்.

**விதி 6**

மகளிரை ஒடுக்கி நலம்பெறல், கூடாவொழுக்கத்தில் ஈடுபடுத்தல் விலைமாதர் ஆக்குதல் ஆகியவை எவ்வுருவில் அமைந்தாலும் அவற்றை ஒழிக்க சட்டமியற்றுதல் உட்பட சகலவித நடவடிக்கை களையும் இவ்வரசுகள் எடுக்கும்.

## பகுதி 2

**விதி 7**

அரசியலிலும் பொதுவாழ்விலும் பெண்களுக்கெதிரான பாகு பாடுகளை நீக்க பொருத்தமான அனைத்து நடவடிக்கைகளையும், அதிலும் குறிப்பாக பின்வரும் உரிமைகளை உறுதி செய்யக்கூடிய நடவடிக்கைகளையும் இவ்வரசுகளனைத்தும் மேற்கொள்ளும்:

அ. எல்லாக் கருத்துக்கணிப்புகளிலும், தேர்தல்களிலும் வாக்குரிமை, பொதுத்தேர்தலில் தேர்ந்தெடுக்கப்படும் அனைத்து பொறுப்புகளுக்கும் தேர்ந்தெடுக்கப்படும் தகுதி.

ஆ. அரசாங்கக் கொள்கைகளை நிர்ணயிப்பதிலும், நிறைவேற்று வதிலும் பங்குபெறும் உரிமை; அரசாங்கத்தில் எல்லா நிலையிலும் பதவிகள் எதிலும் பொறுப்பேற்று அனைத்து வகை பொதுப்பணிகளும் ஆற்றவும் உரிமை.

இ. நாட்டின் அரசியலிலும் பொதுவாழ்விலும் பங்குபெறும் அரசாங்க சார்பில்லாத அமைப்புகளிலும் சங்கங்களிலும் பங்கெடுத்துக் கொள்ளும் உரிமை.

**விதி 8**

தத்தம் அரசாங்கத்தை பன்னாட்டு அமைப்புகளில் பிரதிநிதிப் படுத்தவும், பன்னாட்டு அமைப்புகளின் பணிகளில் பங்குபெறவும் ஆணுக்கிணையாக-பாகுபாடேதுமின்றிப் பெண்கள் பணியாற்று வதற்கு உறுதியளிக்கும் பொருத்தமான நடவடிக்கைகள் அனைத்தையும் இவ்வரசுகள் எடுக்கும்.

**விதி 9**

ஆண்களைப்போலவே பெண்களுக்கும் தேசியக் குடியுரிமை பெறவோ, மாற்றவோ, தக்கவைத்துக் கொள்ளவோ உரிமையளிக்கும். அந்நிய நாட்டவரை மணந்துகொள்வதோ, கணவர் தன் தேசியத்தை மாற்றிக் கொள்வதோ மனைவியின் தேசியத்தைமாற்றாது;

மனைவியை நாடற்றவராக்காது; கணவரின் தேசியம் அவர்மீது திணிக்கப்படாது; என்பவற்றை இவ்வரசுகள் உறுதிசெய்யும்.

## பகுதி 3

### விதி 10

கல்வித்துறையில் ஆணுக்கு சமமாக உரிமைகளைப் பெறுவதை உறுதி செய்யும் வகையில் பாகுபாடுகளை ஒழிக்கும் எல்லாவித நடவடிக்கைகளையும் இவ்வரசுகள் மேற்கொள்ளும். அதிலும் குறிப்பாக—

அ. படிப்பு பற்றியும், கிராமங்களிலும் நகரங்களிலும் இருக்கக்கூடிய அனைத்துவகைக் கல்வி நிறுவனங்களிலும் பட்டம்/பட்டயக் கல்வி பெறுதல் குறித்தும் வழிகாட்டும் உதவிகள் பெறுவதற்கும், பணிகள் பற்றிய வழிகாட்டுதலிலும் சமநிலை.

ஆ. அதே பாடத்திட்டம், அதே தேர்வுகள், ஒரே தகுதிபெற்ற ஆசிரியர்கள், பள்ளிகள், கருவிகள் ஆகியவற்றிலும் பாகுபாடின்மை;

இ. கல்வியில், எல்லா நிலைகளிலும், எல்லா வகைகளிலும் ஆண் என்றால் இப்படித்தான்-பெண் என்றால் அப்படித்தான் எனும் வகையான இறுகிப்போய்விட்ட கருதுகோள்களை விலக்குவதற்காக ஆண்-பெண் சேர்ந்து படிக்கும் பள்ளிகளை அதிகப்படுத்துதல், இன்னும் அதுபோன்ற இந்நோக்கத்துக் கேற்ற முறைகளை செயல்படுத்துதல். குறிப்பாக இதற்காக பாட நூல்களையும் பள்ளி நிகழ்ச்சிகளையும் மறுபரிசீலனை புரிதல் தக்க பயிற்றுமுறைகளை ஏற்படுத்தல்.

ஈ. பள்ளிச்சம்பள உதவி, மற்ற வகை கல்வி நிதியுதவிகளில் சம வாய்ப்பு.

உ. முதியோர் கல்வி உட்பட்ட பலவகை தொடர்கல்வி ஏற்பாடுகளில் சமவாய்ப்பு, குறிப்பாக ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையில் கல்வியில் உள்ள இடைவெளியை கூடிய அளவு விரைவாகத் தவிர்க்கக் கூடிய திட்டங்களில் வாய்ப்புகள்;

ஊ. மாணவியர் பாதியில் பள்ளியிலிருந்து நின்றுவிடுவதைக் குறைத்தல்; அத்தகைய மகளிர்க்கான நிகழ்ச்சித்திட்டங்களை உருவாக்குதல்;

எ. விளையாட்டு, உடல்நலக் கல்வி ஆகியவற்றில் சமவாய்ப்பு;

ஏ. குடும்பக் கட்டுப்பாடு பற்றிய செய்திகள் அது சார்ந்த கல்வி உட்பட குடும்பத்தின் நலம் நல்வாழ்வு ஆகியவை பற்றி

அறிவுறுத்துகின்ற சிறப்புவகைக் கல்வியைச் சார்ந்த விஷயங்கள் அவர்களை அடையச் செய்தல்.

**விதி 11**

1. ஆணும் பெண்ணும் சமமே என்ற அடிப்படையில் சமமான உரிமைகளை உறுதிப்படுத்தும் வகையில், இந்த அரசுகள் வேலைவாய்ப்புத்துறையில் பெண்களுக்கெதிரான பாகு பாட்டினை ஒழிப்பதற்கான அனைத்து நடிவடிக்கைகளையும் எடுக்கும். இந்த 'சமமான உரிமைகள்' என்பது குறிப்பாக—
 அ. வேலைக்கான உரிமை அனைத்து மாந்தர்க்கும் மறுக்கவியலாத உரிமை என்பதையும்,
 ஆ. வேலைவாய்ப்புகளில் சமத்துவம்; வேலைகளுக்கு தேர்ந் தெடுக்கப்படுவதற்கான தகுதிகளும் ஒன்றேயாக அமைக்கப்பெறுதல் என்பதையும்,
 இ. தனக்கான வேலையையோ தொழிலையோ தானே தெரிவு செய்துகொள்ள உரிமை, பதவி உயர்வு உரிமை, பணிப் பாதுகாப்பு, வேலையின் லாபங்கள், பணிமுறை நிபந்தனைகள், தொழில்முறைப் பயிற்சிகள், பெறுவதற்கான உரிமை மறுபயிற்சி, தொழிலில் பணி செயல் பயிற்சி, உயர்நிலை பணிப்பயிற்சி, குறிப்பிட்ட கால இடை வெளியில் மீண்டும் மீண்டும் பயிற்சி பெறல் என்பனவற்றையும்
 ஈ. சமஊதியம், சமமான பிற சலுகைகள், சமமான ஊழிய மெனில் கவுரமும் சமம் என்ற நிலை, வேலைத்தர நிர்ண யிப்பில் சமத்துவம் என்பவைகளையும்
 உ. குறிப்பாக பணி ஓய்வுக்காலம், வேலையில்லாக்காலம், உடல்ஊறு, நலமின்மை முதுமையாலோ முடியாமை யாலோ பணி செய்ய இயலா உடல்நிலை எய்தியமை, சம்பள விடுப்பு ஆகியவை உள்ளிட்ட சமூகப் பாதுகாப்பு உரிமைகள் என்பனவைகளையும்,
 ஊ. உடல்நலத்துக்கான பாதுகாப்பு உரிமை, பணிக்கள சூழலில் பாதுகாப்பு ஆகியவற்றையும் உள்ளடக்கியதாகும்.
2. திருமணம் காரணமாகவோ, மகப்பேறு காரணமாகவோ பாகுபாடு காட்டுவதைத் தடுக்கும் வகையிலும், மகளிரின் வேலைக்கான உரிமை பயனுள்ள முறையில் உறுதி செய்யப்படவும் இவ்வரசுகள் கீழ்க்கண்ட களங்களில் தகுந்த நடவடிக்கை எடுக்கும்.

அ. தாய்மைக் காலத்தை அல்லது தாய்மை விடுப்பை காரணமாக்கி வேலைநீக்கம் செய்வதைத் தடைசெய்தல் மணமான பெண்ணா மணமாகாதவரா என்ற பாகுபாடு பார்த்து பதவி நீக்கம் பற்றி தீர்மானித்தலை தடைசெய்வது.

ஆ. சம்பளத்துடன் அல்லது ஈடான சமூகச் சலுகைகளுடன் மகப்பேறு விடுமுறை அதிலும் பழைய பணி, அனுபவம் காரணமான முன்னிருப்பு, சமூகப் படிகளில் குறை வில்லாமல் கிடைக்கச் செய்தல்.

இ. குழந்தைகள் நல வசதிகளை ஒருங்கிணைந்த வகையில் முதன்மை தந்து நிறுவுவது உட்பட குடும்பப் பொறுப்பையும் கடமைப் பணிகளையும் இணைத்து செயல்படவும் பொதுவாழ்வில் பங்குபெறவும் தம்பதி கட்கு உதவும் படியான சமூகநல அமைப்புகளை ஏற்படுத்துதல்.

ஈ. கருவுற்றிருக்கும் காலத்தில் அவர்களுக்கு ஊறு செய்யக் கூடியதாக பணியின் இயல்பு இருந்தால், சிறப்புப் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்தல்.

3. அறிவியல் தொழில் நுட்ப வளர்ச்சி பற்றிய அறிதல்மூலம் அதற்கேற்ப இந்த விதியில் கூறப்பட்டவை தொடர்பாக முற்காப்பு சட்டங்களியற்றல், தேவைப்படின் அவற்றை மாற்றுதல், விலக்குதல், விரிவு செய்தல்.

**விதி 12**

1. ஆண்-பெண் சமத்துவ அடிப்படையில் குடும்பக்கட்டுப்பாடு உட்பட சுகாதார வசதிகள் எளிதில் அணுகும்படியானவை யாக அமைவதை உறுதி செய்யும்வண்ணம், சுகாதார வசதி களை பெண்களுக்கு எதிரான பாகுபாடு இல்லாதவையாக ஆக்குவதற்கான தக்க நடவடிக்கைகள் அனைத்தையும் இவ்வரசுகள் மேற்கொள்ளும்.

2. மேலே உள்ள முதல் பத்தியில் பாகுபாட்டுக்கெதிராக கூறப் பட்டிருப்பினும் தாய்மை, மருத்துவமனையில் தங்கி சிகிச்சை பெறல், குழந்தை பிறந்த பின்பும் வைத்தியம், பிற வசதி களையும் இலவசமாக எங்கெங்கு தேவையோ அங்கு ஏற்படுத்தவும், கருவுற்ற காலத்தும், குழந்தை பிறந்த பின்பும் சத்துணவுக்கும் இவ்வரசுகள் உறுதிசெய்யும்.

—

**விதி 14**

1. நாட்டுப்புற மகளிர்க்கென்றே குறிப்பாக உள்ள சிக்கல்கள், அவர்களுடைய குடும்பத்தின் பொருளாதார நிலையில் அவர்களது குறிப்பிடத்தக்க பங்களிப்பு ஆகியவைகளையும் அதிலும் பணத்தால் மதிப்பிட முடியாத துறைகளிலும் சேர்த்து, கணக்கில் எடுத்துக்கொண்டு இவ்வரசுகள் இவ்வுடன் படிக்கையின் விதிகளை நடைமுறைப்படுத்துவதில் அவர்களும் பயனுறும் வகையில் தக்க நடவடிக்கைகள் எடுக்கும்.
2. ஆண்-பெண் சமத்துவ அடிப்படையில் கிராமியமாதரும் கிராம வளர்ச்சியில் பங்குபெறவும் பலனடையவும் வகை செய்யும் வண்ணம் நாட்டுப்புறங்களிலும் பாகுபாட்டை அகற்ற இவ்வரசுகள் தக்க நடவடிக்கைகளை எடுக்கும். அவர்களுக்கு
கீழ்க்கண்ட உரிமைகள் கிடைப்பதையும் உறுதி செய்யும்:
   அ. எல்லா மட்டங்களிலும் வளர்ச்சிக்கானத் திட்டங்களைத் தீட்டுவதிலும் நடைமுறைப்படுத்துவதிலும் பங்கு.
   ஆ. குடும்பக்கட்டுப்பாடு பற்றிய தகவல், அறிவுரை, உதவிகள், உட்பட போதுமான சுகாதார வசதிகள் எளிதாய்க் கிடைத்தல்.
   இ. சமூகப் பாதுகாப்பு நடவடிக்கைகளில் நேரடிப்பலன் பெறல்.
   ஈ. தம் தொழில் நுட்ப அறிவைப் பெருக்கிக் கொள்வதுட்பட சமுதாய சேவை, விரிவாக்கப்பணிகள், அனைத்தின் நலன் களும் பெறுதல்; முறையான கல்வி, முறைசாராக்கல்வி இரு விதத்தாலும் சகலவித பயிற்சிகளும் கல்வியும்.
   உ. வேலை, சுயவேலை ஆகியவை மூலம் பொருளாதார நிலையை உயர்த்திக்கொள்ள சமவாய்ப்பு பெறும் வகையில் தாமே தமக்குதவும் திட்டங்கள், கூட்டுறவு அமைப்புகள் ஆகியவற்றை (அரசுகளே) நிறுவுதல்.
   ஊ. சமுதாய நடவடிக்கைகளில் பங்கேற்றல்.
   எ. விவாசாயக் கடன், நிதியுதவி, விற்பதற்கான ஏற்பாடுகள், உரிய தொழில்நுட்பம் நிலசீர்த்திருத்தம்—விவசாய சீர்திருத்தம் ஆகியவற்றிலும் நில மறுபங்கீடு திட்டங் களிலும் (ஆணுக்கு) இணையாக நடத்தப்படல்.
   ஏ. போதுமான வாழ்க்கைத்தர வசதிகளை அனுபவித்தல்—குறிப்பாக உறைவிடம், சுகாதாரம், மின்சாரம், குடிநீர், போக்குவரத்து, தகவல் தொடர்பு ஆகிய களங்களில்.

## பகுதி 4

### விதி 15

1. இவ்வரசுகள் சட்டத்தின்முன் பெண்ணுக்கு சம இடம் அளிக்கும்.

......

### விதி 16

1. திருமணம்—குடும்ப உறவுகள் ஆகிய துறைகளில் சகல வகைகளிலும் பெண்ணுக்கெதிரான பாகுபாட்டை ஒழிக்கும் வகையில் இவ்வரசுகள் அனைத்து நடவடிக்கைகளும் எடுக்கும். குறிப்பாக, ஆண்-பெண் சமத்துவ அடிப்படையில் கீழ்க்கண்ட உரிமைகளுக்கு உத்தரவாதம் அளிக்கும்:
   - அ. திருமணம் செய்துகொள்வதில் ஆணுக்குள்ள உரிமை.
   - ஆ. தகுந்த துணையைத் தேர்ந்தெடுப்பதில் ஆணுக்குள்ள உரிமையும் சுயேச்சையான விருப்பமும், சம்மதமும் இருந்தால் மட்டுமே திருமணம் ஏற்கும் உரிமை.
   - இ. திருமணத்திலும், மணவிலக்கிலும் சம உரிமை-சம பொறுப்பு.
   - ஈ. மணமாகி இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி மண விலக்கு பெற்றிருந்தாலும் சரி பெற்றோர் என்ற முறையிலும் தம் குழந்தைகள் தொடர்பாக பொறுப்பு சமத்துவமும், சமவுரிமையும். எது எப்படியாயினும் எப்போதும் குழந்தைகள் நலமே அனைத்திலும் மேலான குறிக்கோளாய் அமையும்.
   - உ. பொறுப்புடனும் சுதந்திரமாகவும் தனக்கு எத்தனை குழந்தைச் செல்வங்கள் வேண்டும்—அவற்றிடையே வயது இடைவெளி எவ்வளவு என்பதையெல்லாம் தீர்மானிப்பதிலும் ஆணுக்கு சமமான உரிமையும் இவ்வுரிமைகளை பயன்படுத்த வகைசெய்யும் முறையில் தகவல் கல்வி வழிமுறைகள் அவர்களுக்கு எளிதில் கிடைத்தல்.
   - ஊ. குழந்தைகளின் காப்பாளராதல், குழந்தைகளின் உடன் வைப்பு, அறங்காவல் நிலை, தத்தெடுத்தல் அல்லது தேசிய சட்டத்தில் இதுபோன்ற பிற ஏற்பாடுகள் இருந்தால் அவைகள், முதலியவற்றில் (ஆணுக்கு) இணையான அதே உரிமைகள் சம பொறுப்பும். எந்நிலையிலும் குழந்தைகளின் நலனே அனைத்திலும் உயர்ந்த

முக்கியத்துவம் பெறும்.

எ. குடும்பப்பெயர் சூடுதல், தொழிலோ பணியோ தேர்ந்து கொள்ளுதல் உள்பட கணவருக்குள்ள அதே தனிநபர் உரிமைகள்.

ஏ. இலவசமாகவோ, செலவு செய்தோ சொத்துகளை அனுப வித்தல், விற்றல்-வாங்கல், உரிமையாளராய் இருத்தல், சொத்து சேர்த்தல், மேலாண்மை, நிர்வாகம் அனைத்திலும் கணவன்-மனைவி இருவருக்கும் ஒரேவித உரிமை.

2. குழந்தைமணம், அதற்கான நிச்சயதார்த்தம் ஆகியவற்றுக்கு சட்ட ஏற்பு கிடையாது. குறைந்த அளவு திருமண வயதைத் தீர்மானித்தும், திருமணங்கள் யாவும் அதற்கான பதிவகங் களில் பதிவு செய்யப்படுவதை கட்டாயமாக அறிவித்தும் இவ்வரசுகள் தேவையான தகுந்த சட்டங்களை இயற்றும், பிற நடவடிக்கைகளும் எடுக்கும்.

# 8

# மேம்பாடு பற்றிய பிரகடனம்

*பன்னாட்டுப் பிரகடனங்களிலும் ஒப்பந்தங்களிலும் உறுதி செய்யப் பட்டுள்ள மனித உரிமைகளின் பொது கட்டமைப்பு பொதுவாக தனிமனித உரிமைகள் சார்ந்ததாகவே நிலவுகின்றன. புதிய சிக்கல்களும், புதிய அக்கறைகளும், புதிய மனித உரிமைகளுக்கும் உலகளவில் அவற்றின் ஏற்புக்கும் வழிகோலியிருக்கின்றன. அத்தகைய புதிய உரிமைகளின் அமைப்பிலும் அங்கீகாரத்திலும் ஒரு குறிப் பிடத்தக்க திருப்பமாக மேம்பாட்டுரிமை பற்றிய பிரகடனம் விளங்கு கிறது. ஐ.நா. பொதுச்சபை 4.12.1986இல் ஏற்று நிறைவேற்றிய இப்பிரகடனம் நடைமுறைப்படுத்துவதற்கான வழிவகைகள் இன்னமும் ஏற்படாத நிலையிலிருந்தாலும்கூட வளரும் நாடுகளுக்கு நலம்சேர்க்கும் என்பதாலே அந்நாடுகளுக்கு மிகவும் முக்கியமான தாகும். இதோ, அந்தப் பிரகடனம்—*

---

பொருளாதார, சமூக, கலாச்சார, மனித நேயத்தளங்களில் எதிர்ப்படும் பன்னாட்டுச் சிக்கல்களைத் தீர்ப்பதில் பன்னாட்டுக் கூட்டுறவை ஏற்படுத்துவது பற்றியும், இன, பால், மொழி, மத வேறுபாடின்றி வையத்து மாந்தருக்கெல்லாம் மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரமும் உண்டென்பதை மதிக்க வேண்டுமென்ற கருத்தினைப் பரப்புவது வலுப்படுத்துவது பற்றியும் ஐ.நா. மன்ற அடிப்படைத் திட்டத்தின் தத்துவங்களையும் நோக்கங்களையும் மனதில் கொண்டும்,

முன்னேற்ற வளர்ச்சி என்பது பொருளாதார, சமூக, கலாச்சார, அரசியல் பகுதிகள் இணைந்த ஒட்டுமொத்தமான ஒரு நிகழ்வு என்பதையும், சுயஇச்சையுடன், செயலூக்கத்துடன் பொருள் பொதிந்த முறையில் பங்கெடுப்பதன் அடிப்படையிலும், அதன் விளைவாக வரும் பலன்களை சீராக பங்கிட்டுக் கொள்வதின்

அடிப்படையிலும் வையத்து மாந்தரெல்லாரும், அத்தனைபேரும் தத்தம் வாழ்வில் தொடர்ந்து நலவளர்ச்சியடைவதே அத்தகைய முன்னேற்ற வளர்ச்சியின் நோக்கம் என்பதையும் ஒப்புக்கொண்டும்,

மனித உரிமைகள் பற்றிய சர்வதேசப் பிரகடனத்தின் பிரிவு களின்கீழ், அப்பிரகடனம் விளக்கும் உரிமைகளை முழுதாய் உய்த்து வாழ வசதியாக ஒரு சமுதாய அமைப்பும் சர்வதேச அமைப்பும் இயங்க வேண்டும் என்ற உரிமை ஒவ்வொருவருக்கும் உண்டு என்பதைக் கருதிப்பார்த்தும்,

பொருளாதார, சமூக, கலாச்சார உரிமைகள் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கையின் வாசகங்களையும் குடியுரிமையும் அரசிய லுரிமையும் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கையின் வாசகங்களையும் நினைவூட்டிக்கொண்டும்,

அத்துடன் காலனியாதிக்க ஒழிப்பு பற்றிய ஆவணங்கள், பாகுபாடு தடுப்பு ஆவணங்கள், மனித உரிமைகளுக்கும் அடிப்படை சுதந்திரங்களுக்கும் மதிப்புக்கொடுத்து பின்பற்றுவது பற்றிய ஆவணங்கள், அனைத்துலக அமைதி-பாதுகாப்பு, நாடுகளுக்கு இடையே நட்புறவு ஒத்துழைப்பு ஆகியவற்றை அப்பிரகடனத்துக்கு ஏற்ப தழைக்கச் செய்ய முயலும் ஆவணங்கள் உட்பட மனித னாய்ப் பிறந்தோரின் ஒட்டுமொத்த வளர்ச்சி, எல்லா மக்கள் சமுதாயங்களின் பொருளாதார, சமுதாய முன்னேற்றம் ஆகிய வற்றை அக்கறையுடன் பேசுகின்ற சம்பந்தப்பட்ட ஐ.நா. மன்றம் அல்லது அதன் சார்பான சிறப்பு அமைப்புகளின் ஒப்பந்தங்கள், உடன்படிக்கைகள், தீர்மானங்கள் அனைத்தையும் நினைவுகூர்ந்தும்

மக்களின் சுயநிர்ணய உரிமையையும், அதன்மூலம் அவர்கள் தமது அரசியல் அந்தஸ்தை நிர்ணயித்துக் கொள்ளவும் பொருளாதார, கலாச்சார, சமூக வளர்ச்சிக்கு வழிசெய்துகொள்ளவும் உரிமை பெறுகிறார்கள் என்பதையும் நினைவு கூர்ந்தும்,

மனித உரிமைகள் பற்றிய இரண்டு பன்னாட்டு உடன்படிக்கை களின் சம்பந்தப்பட்ட பகுதிகளின் வாசகங்களுக்கு உட்பட்டு, இயற்கை வளங்கள் இயற்கைச் செல்வம் ஆகியவற்றை ஆண்டனுப விக்கும் முழுமேலாண்மையும் கொண்டு விளங்க மக்களுக்கு உள்ள உரிமைகளை நினைவுகூர்ந்தும்,

இனம், நிறம், மதம், பால், மொழி, அரசியல் கருத்து முதலிய கருதுகோள்கள், தேசிய வம்சாவழி, சமூக வம்சாவழி சொத்து, பிறப் பினாலோ பிறவகையிலோ உள்ள அந்தஸ்து முதலான எந்தவிதப் பாகுபாடுமின்றி மனித உரிமைகளும், அடிப்படை சுதந்திரங்களும் கிடைக்கவும் அவற்றுக்குரிய மரியாதை அளிக்கப்படவும்

இப்பிரகடனத்தின்கீழ் அரசுகளுக்கு இருக்கிற கடப்பாட்டினை எண்ணிப் பார்த்தும்,

காலனியாதிக்கம், புதுவடிவக் காலனியாதிக்கம், நிறபேதம், இனவாதம், அந்நிய ஆதிக்கம், ஆக்கிரமிப்பு, படையெடுப்பு, நாடுகளின் மேலாண்மைக்கெதிரான ஆபத்துகள் போர்மிரட்டல்கள் ஆகிய சூழல்களிலிருந்து எழக்கூடியவையும் தனிமனிதருக்கும், மனித இனங்களுக்கும் எதிரானவையுமான வெளிப்படையான மனித உரிமை மீறல்களை அழித்து ஒழிப்பதே மனித குலத்தின் மிகப்பெரும்பான்மையின் வளர்ச்சிக்கேற்ற சூழ்நிலையை உருவாக்குவதில் பெரும்பங்குபெறும் என்பதை எண்ணியும்,

தனிமனிதர்களும், குழுக்களும் தம்மில் நிறைவு பெறுவதற்கும் வளர்ச்சி அடைவதற்கும் அரசியல், பொருளாதாரம், சமூகம், கலாச்சாரம், குடியுரிமை சார்ந்த உரிமைகள் மறுக்கப்படுவதன் மூலமும் பிறகாரணங்களாலும் ஏற்படும். மோசமான தடைகள் பற்றிக் கவலைகொண்டும், எல்லாமனித உரிமைகளும், எல்லா அடிப்படை சுதந்திரங்களும் பிரிக்கப்பட முடியாதவை, ஒன்றையொன்று சார்ந்தவை என்பதை எண்ணிப்பார்த்தும்,

குடியுரிமை, அரசியல், பொருளாதாரம், சமூக கலாச்சாரம் என்பன சார்ந்த உரிமைகளை அமுல்படுத்தவும், பரப்பவும் பாது காக்கவும் சமகவனமும் உடனடி நடவடிக்கையும் செய்தல் முன்னேற்ற வளர்ச்சி பெருகிட உதவும் என்பதை எண்ணிப் பார்த்தும்,

ஆக சில மனித உரிமைகளும், சில அடிப்படை சுதந்திரங்களும் பாதுகாக்கப்படுவதற்காகவோ அனுபவிக்கப்படவோ, பரப்பப்படவோ வேறு சில மனித உரிமைகளும், வேறுசில அடிப்படை சுதந்திரங் களும் மறுக்கப்பட்டுவிடக்கூடாது என்பதையும் எண்ணிப்பார்த்தும்,

முன்னேற்ற வளர்ச்சி உரிமையை அனுபவிப்பதற்கு அனைத்துலக அமைதியும் பாதுகாப்பும் அடிப்படைத் தேவைகள் என்பதை எண்ணியும்

ஆயுதக் குறைப்புக்கும் முன்னேற்ற வளர்ச்சிக்கும் நெருங்கிய உறவு இருப்பதையும், ஆயுதக் குறைப்பில் ஏற்படும் முன்னேற்றம் முன்னற்ற வளர்ச்சியிலும் குறிப்பிடத்தக்க முன்னடைவை ஏற்படுத்தும் என்பதையும் ஆயுதக் குறைப்பு காரணமாகக் கிடைக்கும் அடிப்படை சக்திகள் பொதுவாக எல்லா மாந்தரும்— குறிப்பாக வளரும் நாட்டினரும் பொருளாதார சமூக வளர்ச்சியும் நல்வாழ்வும் பெறும் வகைக்கு உதவுமாறு திருப்பிவிடப்பட வேண்டுமென்பதையும் மீண்டும் உறுதி செய்தும்

முன்னேற்ற வளர்ச்சிக்கு மனித ஆளுமையே மையம் என்பதையும், ஆகையினாலே முன்னேற்ற வளர்ச்சிக் கொள்கை யானது மனிதனையே முக்கிய பங்காளிப்பாளனாகவும் பயன் துய்ப் போனாகவும் கொள்ளவேண்டும் என்பதையும் ஒப்புக்கொண்டும்,

மனிதர்களும் குழுக்களும் முன்னேற்ற வளர்ச்சி காணும் வகைக்கு வசதியான சூழ்நிலையை உருவாக்க வேண்டுவது அரசுகளின் தலையாய கடமை என்பதை ஒப்புக்கொண்டும்,

மனித உரிமைகளைப் பாதுகாக்கவும் பரப்பவும் உலகு தழுவி எடுக்கப்படும் முயற்சிகளுடன் புதியதோர் உலகப் பொருளாதார அமைப்பை ஏற்படுத்தும் முயற்சிகளும் சேர்ந்து நடக்க வேண்டியதை உணர்ந்தும்,

முன்னேற்ற வளர்ச்சி உரிமையும் மாற்ற முடியாததோர் மனித உரிமை என்பதையும் வளர்ச்சிக்கான சமவாய்ப்பு என்பது நாடுகளுக் குள்ளும் சரி, நாடுகளை உருவாக்கும் மாந்தருக்குள்ளும் சரி, ஒரு முன்னுரை என்பதையும் உறுதி செய்தும்

முன்னேற்ற வளர்ச்சி உரிமை பற்றிய பின்வரும் பிரகடனத்தை பொதுச்சபை உரத்து மொழிகிறது.

## விதி 1

1. முன்னேற்ற வளர்ச்சி உரிமை மாற்ற முடியாததோர் மனித உரிமை. அதன்வழியே ஒவ்வொரு தனிமனிதனும், ஒவ்வொரு சமூகமும் எல்லா மனித உரிமைகளும் எல்லா அடிப்படை சுதந்திரங்களும் முழுதாக அனுபவிக்கப்படக்கூடியதான பொருளாதாரம், சமூகம், கலாச்சாரம் அரசியல் ஆகிய தளங்கள் சார்ந்த வளர்ச்சிக்கு பங்களிக்கவும், அதில் பங்கு பெறவும் அதை அனுபவிக்கவும் உரிமை பெறுகின்றனர்.
2. முன்னேற்ற வளர்ச்சிக்கான மனித உரிமை என்பதில் பன்னாட்டு மனித உரிமைப் பிரகடனங்கள் இரண்டிலுமுள்ள சம்பந்தப்பட்ட வாசகங்கட்கு உட்பட்டு, தமது இயற்கை வளங்கள் செல்வங்கள் மீதும் இறையாண்மை பாராட்டுவதற் கான மாற்ற முடியாத உரிமையைப் பயன்படுத்துவது உட்பட சுயநிர்ணய உரிமையையும் முழுதாய் உய்த்தலும் அடங்கும்.

## விதி 2

1. முன்னேற்ற வளர்ச்சிக்கு மனித ஆளுமையே மையம். மனிதனே அதிலும் துடிப்பான பங்களிப்பாளனாகவும் பயன்துய்ப்போனாகவும் அமைய வேண்டும்.

2. அவர்களுடைய மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் முழுமரியாதை பெறவேண்டிய தேவையையும், சமூகப் பொறுப்பையும் கருதிப்பார்க்கும்போது, தனித்தனியாகவும், சமூகத்துடன் சேர்ந்தும் முன்னேற்ற வளர்ச்சிக்கு வழி செய்ய வேண்டிய கடமை எல்லா மானிடருக்கும் இருக்கிறது. அது ஒன்றே சுதந்திரமான, முழுமையான மானிட (மன) நிறைவுக்கு உறுதியளிக்க முடியும். எனவே வையத்து மாந்தர் எல்லாம் முன்னேற்ற வளர்ச்சிக்கு வகை செய்யக்கூடியதோர் சரியான அரசியல்-பொருளாதார-சமூக அமைப்பினை உருவாக்கியே தீரவேண்டும்.
3. சுய இச்சையுடன், செயலூக்கத்துடன், பொருள் பொதிந்த முறையில் பங்கெடுப்பதன் அடிப்படையிலும், அப்பங்களிப்பின் விளைவாக வரும் பலன்களை சீராகப் பங்கிட்டுக் கொள்வதன் அடிப்படையிலும் அந்த மாந்தர் அனைவரும் தத்தம் வாழ்வில் தொடர்ந்து நல வளர்ச்சி அடைவதையே நோக்கமாகக் கொண்டு அதற்குத் தக்கபடியாக தேசிய வளர்ச்சிக் கொள்கைகளை வடிவமைப்பது அரசுகளின் கடமையும் உரிமையும் ஆகும்.

### விதி 3

1. முன்னேற்ற வளர்ச்சி உரிமையை அனைவரும் பெற்றுத் துய்க்கத்தக்க தேசிய நிலைமைகளை உருவாக்கும் தலையாய பொறுப்பு அரசுகளுக்கு இருக்கிறது.
2. இவ்வுரிமையை அனுபவிக்க ஐ.நா. அமைப்புத் திட்டத்துக்கிணங்கிய, நாடுகளுக்கிடையான நட்புறவுக்கும் ஒத்துழைப்புக்கும் அடிகோலும் சர்வதேச சட்டங்கள்மீது முழுமரியாதை தேவைப்படுகிறது.
3. முன்னேற்ற வளர்ச்சியை உறுதி செய்யவும், அதன் தடைகளை களையவும் அரசுகள் தம்முள் ஒத்துழைப்பு நல்குவது அவற்றின் கடமையாம். இறையாண்மை சமத்துவம், ஒருவரைஒருவர் சார்ந்து வாழ்தல் அனைத்து நாடுகளுக்குள்ளும் பரஸ்பர நலம் விழைதல், கூட்டுறவு ஆகியவற்றின் அடிப்படையில் கட்டப் படும் ஒரு புதிய சர்வதேச பொருளாதார அமைப்பை உருவாக்கும் வகையிலும் மனித உரிமைகள் கிட்டுவதையும், நடைமுறைப்படுத்தப்படுவதையும் ஊக்குவிக்கும் வகையில் அரசுகள் தம் உரிமைகளையும் கடமைகளையும் நிறைவு செய்யவேண்டும்.

**விதி 4**

1. முன்னேற்ற வளர்ச்சி உரிமை முழுதாய் அனுபவிக்கப்படுவதற்கு வழி செய்யும் வகையில் சர்வதேச அளவில் முன்னேற்ற வளர்ச்சிக்கொள்கைகளை உருவாக்குவதில் தனித்தனியாகவும் இணைந்தும் நடவடிக்கை எடுக்கும் பொறுப்பு அரசுகளுக்கு இருக்கிறது.
2. வளரும் நாடுகள் விரைவான முன்னேற்ற வளர்ச்சிபெற இடையறாத பணி தேவைப்படுகிறது. அந்நாடுகளின் முயற்சிகளுக்கு உறுதுணையாக அவர்களுக்கு தமது ஒட்டுமொத்த முன்னேற்ற வளர்ச்சிக்கு உதவக்கூடிய வழிவகைகளையும் வசதிகளையும் வழங்கிப் பிற அரசுகள் யாவும் பயனுள்ள ஒத்துழைப்பு நல்க வேண்டியது தேவையாகும்.

**விதி 5**

நிறபேதம், இனவாதம், இனபேதம், காலனி ஆதிக்கம், அந்நிய ஆதிக்கம், ஆக்கிரமிப்பு, படையெடுப்பு, அந்நியத்தலையீடு, நாடுகளின் மேலாண்மைக்கும் ஒருமைப்பாட்டுக்கும், எல்லைப்பாதுகாப்புக்கும் எதிரான ஆபத்துகள், போர்மிரட்டல், மக்களுக்கு உரிய அடிப்படை உரிமையான சுயநிர்ணய உரிமை மறுக்கப்படுதல் ஆகிய சூழல்களிலிருந்து எழும் தனிமனிதர்களுக்கும் மனித இனங்களுக்கும் எதிரான பெருமளவிலான வெளிப்படையான மனித உரிமை மீறல்களை அழித்தொழிக்கவல்ல சக்திமிகு நடவடிக்கைகளை அரசுகள் மேற்கொள்ளவேண்டும்.

**விதி 6**

1. இன, பால், மொழி, மத வேறுபாடின்றி எல்லா மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் மானிடர் யாவரும் பெற வேண்டும் என்பதற்கு அனைவரும் மரியாதை தருவதை ஊக்குவிக்கும் வகையிலும், வலுப்படுத்தும் வகையிலும் பரப்பும் வண்ணமும் அரசுகள் ஒத்துழைக்க வேண்டும்.
2. எல்லா மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் பகுக்க முடியாதனவும், ஒன்றையொன்று சார்ந்தனவும் ஆகும். குடிமக்கள் உரிமை, அரசியல் உரிமை, பொருளாதார உரிமை, சமூக உரிமை, பண்பாட்டு உரிமை என்னும் அனைத்து உரிமைகளும் பரப்பப்படவும் பேணிக்காக்கப் படவும் நடைமுறைப்படுத்தப் படவும் சமகவனமும் அவசர கவனிப்பும் தேவை.

3. முன்பத்தியில் கூறப்படுகின்ற உரிமைகள் நடைமுறையில் செயல்படுத்தப்படாமல் விடுபட்டுப் போகத் தவறினால் மேம்பாட்டுக்கு ஏற்படும் தடைகளைக் களைந்திட அரசுகள் தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

**விதி 7**

சர்வதேச அளவில் சமாதானமும் பாதுகாப்பும் நிலவவும், பராமரிக்கப்படவும் வலுப்படவும் இவ்வரசுகள் செயல்படவேண்டும். அதற்கேற்றவாறு, சக்திவாய்ந்த பன்னாட்டுக் கட்டுப்பாட்டின்கீழ் முழுமையான பொது ஆயுதக் குறைப்புக்காக தம்மால் இயன்ற அனைத்தையும் செய்யவேண்டும். அப்படிப்பட்ட ஆயுதக் குறைப்பினால் கிடைக்கும் (நிதி) வசதிகள் ஒட்டுமொத்த வளர்ச்சிக்கு, அதுவும் வளரும் நாடுகளின் வளர்ச்சிக்கு, பயன்படுமாறு பார்த்துக் கொள்ளவேண்டும்.

**விதி 8**

1. வளர்ச்சி உரிமையை அனைவரும் அனுபவிக்க இவ்வரசுகள் தேசிய அளவில் தேவையான அனைத்து நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டும். நேரிய முறையிலான வருமானப் பங்கீட்டை உறுதி செய்யவேண்டும். (நாட்டின்) அடிப்படை வளங்கள், சுகாதார வசதிகள், உணவு, உறையுள், பணி மற்றும் உரிய வசதிகள் அனைத்தும் எளிதில் கிடைப்பதற்கு சமவாய்ப் பினையும், வருமானம் சீரான பங்கீடு செய்யப்படுவதையும் உறுதிசெய்யவேண்டும். வளர்ச்சிப் பணிகளில் மகளிர் துடிப்பான பங்குபெறுவதை உறுதிசெய்ய சக்திவாய்ந்த நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். சமூக அநீதிகளனைத் தையும் களைந்திடும் நோக்கிலான பொருளாதார சமூக சீர்திருத்தங்கள் செய்யப்படவேண்டும்.
2. முன்னேற்ற வளர்ச்சியிலும் எல்லா மனித உரிமைகளையும் முழுதாகப் பெறுவதிலும் எல்லாத்துறைகளிலும் மக்கள் பங்கெடுத்துக்கொள்வதை ஒரு முக்கிய அம்சமாக அரசுகள் ஊக்குவிக்கவேண்டும்.

**விதி 9**

1. இந்தப் பிரகடனத்தில் இடம்பெறும் முன்னேற்ற வளர்ச்சி உரிமை குறித்த பல்வேறு அம்சங்கள் அனைத்தும் பிரிக்கப்பட முடியாதவை; ஒன்றை ஒன்று சார்ந்தவை. ஒவ்வொன்றும்

முழுப்பின்னணியில் புரிந்துகொள்ளப்பட வேண்டியவை.

2. இப்பிரகடனத்தில் கூறப்பெறும் எதுவும் ஐநா.வின் நோக்கங்களுக்கும் தத்துவங்களுக்கும் எதிராகவோ அல்லது எந்த ஒரு அரசோ, குழுவோ, மனிதரோ மனித உரிமை பற்றிய சர்வதேசப் பிரகடனத்திலோ, பன்னாட்டு மனித உரிமை உடன்படிக்கைகளிலோ இடம் பெறும் உரிமைகளை மீறுவனவாக அமையக்கூடிய எதையும் செய்யவோ, எந்த நடவடிக்கையிலும் இறங்கவோ உரிமை கொண்டிருப்பதாக உட்குறிப்பாகக் கூறுவதாகவோ பொருள் கொள்ளப்படக்கூடாது.

## விதி 10

மேம்பாட்டு உரிமை முழுதாய் நடைமுறையில் வரவும், படிப்படியாய் விரிவு செய்யப்படவும் உறுதி செய்யும் வகையில் தேசிய அளவிலும் சர்வ தேசிய அளவிலும் கொள்கை வரைவு, கொள்கை ஏற்பு, நடைமுறைப்படுத்தல், சட்டமியற்றல் முதலிய நடவடிக்கைகள் உள்பட எல்லாவித நடவடிக்கைகளும் எடுக்கப்படவேண்டும்.

9

# குழந்தையின் உரிமைகள் பற்றிய உடன்படிக்கை

*ஐ.நா. பொதுச் சபையால் 20.11.89 அன்று ஏற்கப்பட்டு 2.9.1990 அன்று நடைமுறைக்கு வந்த உடன்படிக்கையிலிருந்து சில பகுதிகள்*

---

## முகப்புரை

ஐ.நா. அமைப்புச்சட்டம் உரத்து முழங்கும் கோட்பாடுகளுக்கு ஏற்ப மனிதக் குடும்பத்தின் அனைத்து உறுப்பினருக்கும் உரிய உள்ளார்ந்த மதிப்பை ஒப்புக் கொள்வதும் அவர்களின் மாற்ற முடியாத சம உரிமைகளை ஒப்புக்கொள்ளவதுமே உலகில் சுதந் திரமும் நியாயமும் அமைதியும் நிலவ அடிப்படை என்பதனைக் கருதியும்,

— அதில் ஐக்கிய நாடுகளின் மக்கள், அடிப்படையான மனித உரிமைகளிலும், மனிதனின் மாண்பிலும் தமக்குள்ள நம்பிக்கையை மீண்டும் வலியுறுத்தி அதிக சுதந்திர பூமியில் சமூக முன்னேற் றத்தையும் உயர்ந்த தரத்தையும் வளர்க்க உறுதி கொண்டிருப்பதனை மனதில் இருத்தியும்,

— இனம், நிறம், மதம், பால், மொழி, அரசியல் கருத்து முதலிய கருதுகோள்கள், தேசிய வம்சாவளி, சமூக வம்சாவளி, சொத்து, பிறப்பினாலோ பிறகாரணங்களாலோ வரும் அந்தஸ்து முதலிய எந்தப் பாகுபாடுமின்றி தம்மில் கூறப்பெறும் அனைத்து உரிமை களுக்கும் சுதந்திரங்களுக்கும் ஒவ்வொரு மனிதரும் உரியவர் என்று மனித உரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனத்திலும், மனித உரிமைகள் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கைகளிலும் ஐ.நா. பிரகடனமாக முழக்கியிருப்பதை ஒப்புக்கொண்டும்,

— மனித உரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனத்தில் குழந்தைப்பருவம் தனித்த கவனிப்புக்கும் உதவிக்கும் உரியது என்று ஐ.நா. முழங்கியிருப்பதை நினைவுகூர்ந்தும்,

— குடும்பம் சமூகத்தின் அடிப்படை உறுப்பு, சமூகத்தின் அனைத்து உறுப்பினர்களும்—குறிப்பாகக் குழந்தைகளும் வளரவும் நல்வாழ்வு பெறவும் இயற்கையான சூழல் எனும் அத்தகைய குடும்பம் சமூகத்தில் தனது பொறுப்புகளை முழுமையாக நிறை வேற்றிடத் தேவையான பாதுகாப்பும் உதவியும் அளிக்கப்பட வேண்டும் என்றும் ஐயமின்றித் தெளிந்தும்,

— ஒரு குழந்தை தன் ஆளுமை முழுதாகவும், இசைவான முறையிலும் வளர்ச்சியுறுவதற்கு, மகிழ்ச்சியும், அன்பும், புரிதலும் கொண்ட சுற்றுப்புறமாக அமைந்த குடும்பச் சூழலில் வளர்ந்தாக வேண்டும் என்பதை ஒப்புக்கொண்டும்,

— சமூகத்தில் தனக்கெனத் தனிவாழ்வை அமைத்துக் கொள்ள குழந்தையானது தயார்படுத்தப்படவேண்டும் என்பதையும ஐ.நா. அமைப்புத்திட்டத்தில் முழங்கப்பெறும் லட்சியங்களின் உட்பொருளுக்கிணங்க, அதிலும் குறிப்பாக சுதந்திரம், சமாதானம், சமத்துவம், சகிப்புணர்வு, மாட்சிமை, ஒருமைக்குணம் ஆகிய தத்துவங்களின் உட்பொருளுக்கிணங்க வளர்க்கப்படவேண்டும் என்று கருதியும்,

— குழந்தைகளின் உரிமைகள் பற்றிய ஜெனிவாபிரகடனத்திலும் (1924) ஐ.நா. பொதுச்சபை 20.11.1959இல் ஏற்றுக்கொண்ட குழந்தை களின் உரிமைகள் பற்றிய பிரகடனத்திலும் குறிப்பிடப்பட்டுள்ள குழந்தைகள் நலத்துக்கு சிறப்பான கவனம் தரப்படவேண்டியதன் அவசியத்தை மனித உரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனம், குடியுரிமையும் அரசியலுரிமையும் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கை (குறிப்பாக அதன் 23வது 24வது பிரிவுகள்), பொருளாதார, சமூக, பண்பாட்டுரிமைகள் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கை (குறிப்பாக பத்தாவது விதி) உட்பட குழந்தைகள் நலத்தில் அக்கறையுள்ள பன்னாட்டு நிறுவனங்கள், சிறப்புத்தகுதி அமைப்புகள் முதலிய வற்றின் ஆவணங்களிலும் சட்டத்திட்டங்களிலும் ஒப்புக்கொண் டுள்ளதை மனதிலிருத்தியும்

— குழந்தைகளின் உரிமைகள் பற்றிய பிரகடனம் “குழந்தை, உடலளவிலும் மனதளவிலும் பக்குவமடையாத நிலையிலிருப்பதால், பொருத்தமான சட்டப்பாதுகாப்பு உட்பட்ட சிறப்பு முற்காப்புகளும் சிறப்புக் கவனமும் அதற்குத் தேவைப்படுகிறது” என்று கூறுவதை மனதில் இருத்தியும்,

— குழந்தைகள் பாதுகாப்பும் நல்வாழ்வும் பற்றிய சமூக-சட்ட கோட்பாடுகள் மீதான பிரகடனத்தின் கூற்றுகள்—குறிப்பாக அதில் 'தேசிய சர்வதேசிய அளவிலான தத்தெடுத்தல், மாற்றுப்பெற்றோர் பற்றிய வாசகங்கள்— "பீகிங் விதிகள்" எனப்படும் "இளங்குற்றவாளிகள் நிர்வாகத்துக்கான ஐ.நா.நிர்ணயித்த குறைந்த அளவு பற்றிய விதிகள் "நெருக்கடி நிலைகளிலும், போர்க்காலங்களிலும் மகளிர், மழலையர் பாதுகாப்புப் பிரகடனம்" ஆகியவற்றின் வாசகங்களையும் நினைவு கூர்ந்தும்,

— உலகின் அனைத்து நாடுகளிலும் மிக மோசமாக சிரமப் படும் நிலையில் வாழும் குழந்தைகள் இருப்பதையும், அவர்களுக்குத் தனிக்கவனம் தேவைப்படுவதையும் ஒப்புக்கொண்டும்,

— எல்லா நாடுகளிலும், குறிப்பாக வளரும் நாடுகளில், குழந்தை களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கு பன்னாட்டு ஒத்துழைப்பு முக்கியமென்பதை ஏற்றுக்கொண்டும்,

இந்த உடன்படிக்கையில் இணையும் அரசுகள் பின்வருமாறு ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொள்கின்றன.

## பகுதி 1

### விதி 1

இவ்வுடன்படிக்கையைப் பொறுத்தமட்டும், சம்பந்தப்பட்ட நாட்டுச் சட்டம் பெரியவருக்கான வயதை பதினெட்டுக்குக் குறைவாக நிர்ணயிக்காத வரையில் குழந்தை என்பது பதினெட்டு வயதுக்குக் குறைந்த எல்லா மாந்தரையும் குறிக்கும்.

### விதி 2

1. குழந்தையின், அதன் பெற்றோரின் அல்லது காப்பாளரின் இனம், நிறம், மதம், பால், மொழி, அரசியல் கருத்து முதலிய கருதுகோள்கள் தேசிய வம்சாவளி, சமூக வம்சாவளி, கலாச் சார வம்சாவழி, சொத்து பிறப்பு அல்லது பிறகாரணங்கள் சார்ந்த அந்தஸ்து, ஊனம் ஆகிய எக்காரணம் கொண்டும் பாகுபாடு காட்டாமல் தத்தம் இறையாண்மை பகுதியில் வசிக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும் இவ்வரசுகள் இவ்வுடன்படிக் கையில் பேசப்பெறும் உரிமைகளை மதித்து அவர்களுக்கு அவ்வுரிமை கிடைப்பதை உறுதிசெய்யும்.
2. ஒரு குழந்தையின் பெற்றோரோ, காப்பாளரோ, குடும்ப உறுப்பினரோ கொண்டுள்ள நம்பிக்கைகள், வெளியிடும்

கருத்துகள், அவர் தம் நடவடிக்கைகள் சமூக நிலை காரணமாக எக்குழந்தையும் தண்டிக்கப்படுவது வேறு விதமாக நடத்தப் படுவது ஆகியவற்றிலிருந்து குழந்தைகள் பாதுகாப்பு பெறுவ தற்கான தேவைப்படும் அனைத்து நடவடிக்கைகளையும் இவ்வரசுகள் மேற்கொள்ளும்.

**விதி 3**

1. குழந்தைகள் பற்றிய எல்லாவித செயல்பாடுகளிலும், அது அரசுத்துறை சமூகநல அமைப்போ, தனியார் துறை சமூக நல அமைப்போ, நீதிமன்றங்களோ, நிர்வாகமோ, சட்டப் பேரவைகளோ, யாரெடுக்கும் நடவடிக்கைகளாயினும் அங்கே குழந்தைகளின் உயர்ந்தபட்ச நன்மையே தலையாய அக்கறையாக அமையும்.
2. குழந்தைகளின் பெற்றோர், காப்பாளர், அவர்கள் நலத்துக்குப் பொறுப்பான மற்றவர்கள் ஆகியோரின் கடமைகளையும் உரிமைகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டு, குழந்தைகள் நல்வாழ்வுக்குத் தேவையான அக்கறையும் பாதுகாப்பும் காட்டுவதை உறுதி செய்ய இவ்வரசுகள் உறுதியெடுத்துக் கொள்கின்றன. அந்த நோக்கத்துக்கு இசைவாக எல்லாவித சட்டமியற்றும் நடவடிக்கைகளும், நிர்வாக நடவடிக்கைகளும் எடுக்கப்படுமென்றும் உறுதி கொள்கின்றன.

......

**விதி 5**

பெற்றோர், உரிய இடங்களில் பெரிய குடும்பத்தின் பிறஉறுப் பினர்கள், அவர்கள் சார்ந்துள்ள சமூகம், உள்ளூர் மரபுகளுக்கேற்ப பிறர், சட்டபூர்வமான காப்பாளர்கள், குழந்தையின் நன்மைக்கு சட்டப்படி பொறுப்பாக வேறு யாரும் அமைந்தால் அவர்கள் ஆகியோருக்கு அக்குழந்தை தனது பரிணாம வளர்ச்சி, வலு ஆகிய வற்றுக்கேற்ப இவ்வுடன்படிக்கை குறிப்பிடும் தனது உரிமைகளை பயன்படுத்திக்கொள்ள சரியான அறிவுரைகள் கூறவும் வழிகாட்டவும் கொண்டுள்ள உரிமைகளையும், கடமைகளையும், பொறுப்புகளையும் இவ்வரசுகள் மதிக்கும்.

**விதி 6**

1. ஒவ்வொரு குழந்தைக்கும் உள்ள உயிர் வாழ்தலுக்குரிய

உள்ளார்ந்த உரிமையை இவ்வரசுகள் ஒப்புக்கொள்கின்றன.

2. குழந்தைகள் உயிர்வாழவும் வளரவும் உயர்ந்தபட்சமாக இயலும் வகையில் உறுதியளிக்கும்.

## விதி 7

1. குழந்தை பிறந்தவுடன் அதன் பிறப்பு பதிவு செய்யப்படும். பெயர், தேசியம் பெறுதல் ஆகியவற்றுக்கான உரிமை பிறவியிலேயே அதற்கு உண்டு. கூடியவரை தன் பெற்றோரைத் தெரிந்துகொள்ளும் உரிமை அவர்களால் பேணப்படும் உரிமை ஆகியவையும் உண்டு.

----

## விதி 9

1. நீதிமன்ற பரிசீலனைக்கு கட்டுப்பட்டு, தகுந்த அதிகாரம் நிர்ணயிக்கப்பட்ட நிர்வாக அதிகாரிகள் சம்பந்தப்பட்ட சட்டங்களின்படியும், சட்ட முறைகளின்படியும் குழந்தையின் நலத்துக்கு அத்தகைய பிரிவு கட்டாயம் என்று தீர்மானித்தாலொழிய, குழந்தைகள் தம் விருப்பத்துக்கெதிராக பெற்றோரிடமிருந்து பிரிக்கப்படமாட்டார்கள் என்பதற்கு இவ்வரசுகள் உறுதியளிக்கும். குறிப்பிட்ட சந்தர்ப்பங்களைப் பொறுத்து இத்தகு தேவைகள் அமையும். பெற்றோரே குழந்தையை தீய செயல்களுக்கு இரையாக்குதல், புறக்கணிப்பு அல்லது பெற்றோர் தனித்தனியே வாழும் நிலையில் குழந்தை எங்கே வசிப்பது என்ற சிக்கல் ஆகியவை அத்தகைய சந்தர்ப்பங்களில் சிலவாகும்.

......

## விதி 11

1. சட்டவிரோத இடமாற்றம், வெளிநாட்டிலிருந்து குழந்தை திரும்பாமை ஆகியவற்றுக்கெதிராய் இவ்வரசுகள் நடவடிக்கை எடுக்கும்.

2. இந்த நோக்கத்துக்காக தம்முள் அவை இரு முனை ஒப்பந்தங்களும், பல்முறை ஒப்பந்தங்களும் ஏற்படுத்திக் கொள்ளும். உள்ள ஒப்பந்தங்களில் உரிய பகுதிகளைச் சேர்த்துக் கொள்ளும்.

**விதி 12**

1. தானாக முடிவெடுக்கும் நிலையை எய்திய குழந்தைகளுக்கு தம்மைப் பாதிக்கும் விஷயங்களில் தமது கருத்துக்களை சுதந்திரமாக வெளியிடும் உரிமையை இவ்வரசுகள் உறுதி செய்யும். வயது, மன வளர்ச்சி ஆகியவற்றுக்கேற்ப அக்கருத்துக் களுக்கு உரிய மதிப்பு தரப்படும்.

......

**விதி 13**

1. கருத்துக்கூறும் உரிமை குழந்தைகளுக்கு உண்டு; அதில் எல்லா வித செய்திகளையும் கருத்துக்களையும் தேடிச் செல்லவும்-பெறவும்-பரப்பவும், எல்லை தொடர்பான தடைகளின்றி பேச்சு, எழுத்து, அச்சு, கலைகள் உள்ளிட்ட விரும்பும் எந்த ஊடகத்தையும் பயன்படுத்திக்கொள்ளும் உள்ள உரிமையும் அடங்கும்.

......

**விதி 14**

1. குழந்தைகளின் மதம், எண்ணம், மனச்சான்று, சம்பந்தப்பட்ட உரிமைகளை இவ்வரசுகள் மதிக்கும்.
2. பெற்றோர்க்கும் உரிய இடங்களில் சட்டபூர்வ காப்பாளர் களுக்கும், குழந்தையின் பரிணாம வளர்ச்சி வலுவுக்கேற்ப தனது உரிமைகளைப் பயன்படுத்திக்கொள்ள நெறிகாட்டு வதற்குள்ள உரிமைகளையும் கடமைகளையும் இவ்வரசுகள் மதிக்கும்.
3. தன் மதம் பற்றியும் நம்பிக்கைகள் பற்றியும் பேசும் உரிமை பொதுப்பாதுகாப்பு, ஒழுங்கு, சுகாதாரம், நியமங்கள் மற்றவர் களின் அடிப்படை உரிமைகள்—சுதந்திரங்கள் ஆகியவை பாதிக்கப்படும் என்கிறபோது மட்டுமே, அதுவும் சட்டம் கூறுகிற வகையில் மட்டுமே கட்டுப்படுத்தப்படலாம்.

**விதி 15**

1. இவ்வரசுகள் அமைதியாகக் கூடவும், கூடிப்பேசவும் குழந்தைகளுக்கு உள்ள உரிமையை அங்கீகரிக்கின்றன.
2. ஒரு ஜனநாயக சமுதாயத்தில் அமைதியாகக் கூடிப்பேசும் உரிமை அங்கீகரிக்கப்படும்; இது தேசிய பாதுகாப்பு,

பொதுமக்கள் பாதுகாப்பு, பொது அமைதி, பொது சுகாதாரம், ஒழுக்கம் ஆகியவற்றின் பாதுகாப்பு மற்றவர்களின் உரிமைகள் சுதந்திரங்கள் ஆகியவற்றுக்கு இதமாக எவ்வளவு தேவையோ அந்த அளவு மட்டும் அதுவும் சட்டத்துக்கு இசைந்து மட்டுமே கட்டுப்படுத்தப்படலாம்.

**விதி 16**

1. எந்தக் குழந்தையின் தனிமையும், எவரது தனிமையும், குடும்பமும், வீடும், கடிதங்களும் குறுக்கீடுகளுக்கு இடமாகக் கூடாது. எவரது பெருமையும் மரியாதையும் சட்டவிரோத பாதிப்புக்கு ஆளாகக் கூடாது.
2. அத்தகைய மீறல்களுக்கும் பாதிப்புகளுக்கும் எதிரான பாதுகாப்பு எல்லாக் குழந்தைகளுக்கும் உரிய உரிமையாகும்.

**விதி 17**

இவ்வரசுகள் மக்கள் தொடர்பு சாதனங்கள் செய்துவரும் முக்கிய பணிகளை உணர்கின்றன. குழந்தைகளுக்கு தேசிய அளவிலும் சர்வதேசிய அளவிலும் பலவித சாதனங்கள் மூலமும் தகவல்களும் செய்திகளும்—குறிப்பாக அவர்களின் சமூக, தார்மிக ஆன்மிக நல்வாழ்வு, மன-உடல் நலம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கான விபரங்கள் பெறும் வழிவகைகளை இவ்வரசுகள் உறுதி செய்யும். அதற்காக இவ்வரசுகள்

அ. இவ்வுடன்படிக்கையின் 29ஆம் விதிக்கிசைவாக தொடர்பு சாதனங்கள் குழந்தையின் சமூக-கலாச்சார நன்மைகள் குறித்த செய்திகளையும் விபரங்களையும் தொகுத்தளிப்பதையும்

ஆ. அத்தகைய தகவல்களை பல்வேறு கலாச்சார, தேசிய சர்வ தேசிய சக்திகள் வழியே பெற்று பரப்புவதிலும், தயாரிப்பதிலும், மாற்றிக் கொள்வதிலும் பன்னாட்டுக் கூட்டு முயற்சிகளையும்

இ. சிறுவர் நூல்கள் தயாரிப்பையும், பரப்புதலையும்

ஈ. சிறுபான்மை மொழிக் குழந்தைகள், பழங்குடிக் குழந்தைகள் ஆகியோருக்கு மொழிச்சிக்கல் இல்லாதவாறு அமைவதற்கான தேவைகளையும் தகவல் சாதன அமைப்புகள் கணக்கில் கொள்வதையும்;

உ. பதின்மூன்றாம் விதி பதினெட்டாவது விதி இரண்டையும் மனதில்கொண்டு, குழந்தைகள் நலனுக்கெதிரான தகவல் சாதன நிகழ்ச்சிகளிலிருந்து அவர்களைக் காக்கும் முகமாக

தக்க வழிகாட்டுநெறிகள் உருவாக்கப்படுவதையும், ஊக்குவிக்கும்.

**விதி 18**

1. குழந்தையை வளர்த்து ஆளாக்கும் பொறுப்பு தாய்-தந்தை இருவருக்கும் பொதுவானது என்ற கோட்பாட்டை உறுதி செய்ய இவ்வரசுகள் இயன்ற வகையிலெல்லாம் செயல்படும். குழந்தையை வளர்ப்பதிலும் ஆளாக்குவதிலும் பெற்றோர் அல்லது காப்பாளர் பொறுப்பே தலையாயது. குழந்தைகளின் மேலதிக நல்வாழ்வே அவர்களது அக்கறை.
2. இவ்வுடன்படிக்கையில் பேசப்பெறும் உரிமைகளைப் பரப்பவும் உறுதிசெய்யவும் என்ற நோக்கத்துடன் இவ்வரசுகள் குழந்தை வளர்ப்புப் பொறுப்பில் பெற்றோரும் காப்பாளரும் செய்யும் பணிகளில் தக்க உதவிகளைச் செய்யும். குழந்தைகள் நலத்துக்கான நிறுவனங்கள், வசதிகள், உதவிகள் ஆகியவை உருவாவதையும் உறுதிப்படுத்தும்.
3. பெற்றோர் இருவரும் வேலைபார்ப்பவர்களாக இருந்தால், அந்தக் குழந்தைகளுக்கான காப்பாக வசதிகள் பெறுவதை உறுதி செய்யும்படிக்குத் தக்க நடவடிக்கைககள் அனைத்தையும் இவ்வரசுகள் எடுக்கும்.

**விதி 19**

1. பெற்றோர் அல்லது காப்பாளர் அல்லது யாரின் பொறுப்பில் குழந்தை வளர்கிறதோ, அவர் பொறுப்பில் இருக்கும்போது கூட வன்முறை, மனவியல் வன்முறை, பாலியல் தீங்கு, தவறாக நடத்தப்படுதல், காயம்படுதல், புறக்கணிப்பு, ஏனோதானோ என்று நடத்தப்படுதல், சுரண்டல் ஆகியவைகளினால் துன்புறாது தடுப்பதற்கேற்ற சட்டமியற்றல், நிர்வாக இயல், சமூகம் சார்ந்த நடவடிக்கை, கல்வி ஆகிய எல்லாவித நடவடிக்கைகளையும் இவ்வரசுகள் மேற்கொள்ளும்.

—

**விதி 20**

1. தற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ தன் குடும்பச் சூழலை இழந்துவிட்ட குழந்தைகளும், அதன் நன்மையைக் கருத்தில் கொண்டே அச்சூழலிலிருந்து விலக்கப்பட வேண்டிய நிலையில் உள்ள குழந்தைகளும் அரசின் விசேஷ

பாதுகாப்புக்கும் உதவிக்கும் உரியனவாகும்.

......

**விதி 21**

தத்தெடுத்துக் கொள்வதை அங்கீகரிக்கிற அனுமதிக்கிற அரசுகள் குழந்தையின் உயர்ந்த பட்ச நன்மையே அதில் முதன்மையான நோககமாக அமையவும் உறுதி செயயவேண்டும்.

......

**விதி 23**

1. உடல்ஊனமோ-மனஊனமோ உளள குழந்தைகளும் சுய மதிப்பை ஊர்ஜிதம் செய்கிற, தற்சார்பை வளர்க்கிற சமூகத்தில் அத்தகைய குழந்தைகளின் பங்களிப்பையும் வளர்க்கிற சூழ்நிலையில் நாகரிகமான நிறைவாழ்வு பெற வேண்டும் என்பதை இவ்வரசுகள் ஏற்றுக்கொள்கின்றன.
2. அத்தகைய குழந்தைகள் சிறப்பு கவனத்துக்குரியவர்கள் எனவும் ஏற்றுக்கொண்டு, விண்ணப்பிக்கும்போது, தமக்குள்ள வசதிக் கேற்ப அரசுகள், அத்தகைய குழந்தைகளுக்கும், அவர்களின் பெற்றோர், காப்பாளர் ஆகியோருக்கும், குழநதையின் தகுதிக்கு ஏற்பவும், பெரியவர்களின் சூழ்நிலைகளுககு ஏற்பவும், தகுந்தபடி உதவி கிடைக்க உறுதி செய்யவேண்டும், அத்தகைய உதவிகள் நீடிக்க ஊக்கம் தரவேண்டும்.
3. ஊனக் குழந்தைகளுக்கென்றுள்ள தனித் தேவைகளை அங்கீகரித்து, பெற்றோர் அல்லது வளர்ப்பவர்களின் நிதி நிலையைக் கவனத்தில்கொண்டு, முந்தையப் பத்தியில் உள்ள உதவிகளை கூடியவரை இலவசமாக கிடைக்கச் செய்ய வேண்டும். கல்வி, பயிற்சிகள், மருத்துவ உதவி மறுவாழ்வு சேவை, பொழுதுபோக்கு, வேலைவாய்ப்புக்கல்வி ஆகியவை எளிதில் கிடைக்க வழி வகை செய்வனவாக அவ்வுதவிகள் உருவாக்கப்படுவதை உறுதிசெய்ய வேண்டும். அவர்கள் சமூகத்துடன் முழுவதும் ஒத்திசைவும், தனிமனிதனாக கலாச்சார, ஆன்மீக தளங்கள் உட்பட முழுவளர்ச்சியும் பெறத்தக்க வகையிலும் இவ்வுதவிகள் ஏற்பாடு செய்யப் படவேண்டும்.
4. சர்வதேச ஒத்துழைப்பு உணர்வுக்கேற்ப இவ்வரசுகள் தடுப்பு மருத்துவ ஏற்பாடுகள், ஊனமுற்ற குழந்தைகளுக்கு மருத்துவ,

மனோதத்துவ, செயல்பாட்டு, சிகிச்சைகள் முதலிய துறைகளில் தகுந்த தகவல் பரிமாற்றத்தை வளர்க்கும். அப்படிப் பரிமாறிக் கொள்ளும் தகவல்களில் புனர்வாழ்வு முறைகள் பற்றிய செய்திகளைப் பகிர்ந்துகொள்ளுதல், கல்விச் செய்திகள், வேலைப்பயிற்சி விபரங்கள் ஆகியவை உள்ளடக்கமாக இருக்கும். அதன் நோக்கம் இவ்வரசுகள் இத்துறைகளில் தம் திறமையையும் தகுதிகளையும் செழுமைப்படுத்திக் கொள்வதாயும் அனுபவங்களை விரிவுபடுத்திக் கொள்வதாயும் இருக்கும்.

### விதி 24

1. ஆரோக்கிய சீரமைப்பு, நோய்க்கு சிகிச்சை ஆகியவற்றுக்கான வழிவகைகளுக்கும், இயலக்கூடிய உயர்ந்தபட்ச உடல்நலத்தை அனுபவிப்பதற்கும் குழந்தைகளுக்குள்ள உரிமையை இவ்வரசுகள் அங்கீகரிக்கின்றன. அத்தகைய உடல்நல வசதிகள் எந்தக் குழந்தைக்கும் எட்ட முடியாத உரிமைகளாகி விடாமலிருக்கவும் பாடுபடும்.
2. இவ்வுரிமைகளை முழுவதும் கிட்டச்செய்ய இவ்வரசுகள் பாடுபடும் அதற்காக,
   அ. சிசுமரணம், குழந்தை மரணம் இவற்றைக் குறைக்கவும்,
   ஆ. அடிப்படை சுகாதார வசதியைப் பெருக்குவதற்கு அழுத்தம் தந்து, குழந்தைகள் அனைவருக்கும் தேவையான மருத்துவ வசதியும் சுகாதார உதவிகளும் கிடைப்பதை உறுதி செய்யவும்,
   இ. சுற்றுச் சூழலில் மாசு படர்ந்திருப்பதையும், அதனால் விளையும் தீங்குகள், ஆபத்துக்கள் நோய்களையும் சத்துணவுக் குறைவையும் ஒழிக்க, அடிப்படை சுகாதார உதவிகளிலேயே எளிதாய் கிடைத்துள்ள தொழில்நுட்பங்களின் மூலமும் பிறவகைகளிலும், தேவையான சத்துணவளிக்கவும் தூய குடிநீர் வழங்கவும்,
   ஈ. தாய்மார்களுக்கு பிரசவத்துக்கு முன்னும் பின்னும் மருத்துவ வசதிகள் கிடைப்பதை உறுதி செய்யவும்,
   உ. சமூகத்தின் அனைத்துக் கூறுகளுக்கும், குறிப்பாக, குழந்தைகளுக்கும், பெற்றோர்க்கும் குழந்தைநலம் சத்துணவு ஆகியவை பற்றிய ஆதார அறிவும், தாய்ப் பாலின் நன்மைகள் பற்றியும், சுகாதாரம், சுற்றுப்புறத் தூய்மை, விபத்துத் தடுப்பு ஆகியவை பற்றியும் தெரிந்து

கொள்ளவும், இத்துறைகளில் முறையான கல்வி அவர்களுக்குக் கிட்டவும், தெரிந்துகொண்டதைப் பயன்படுத்த முடிவதற்கும் உறுதி செய்யவும்,

ஊ. தடுப்புமுறை சுகாதார வசதி, பெற்றோர்க்கான வழிகாட்டுதல் குடும்பக்கட்டுப்பாடு பற்றிய கல்வியும் உதவியும் ஆகியவைகளை உருவாக்கவும் தகுந்த நடவடிக்கைகளை எடுககும்.

3. குழந்தைகளின் உடல்நலத்துக்கெதிரான சமூக மரபுப்பழக்க வழக்கங்களை ஒழிக்கும் நோக்கத்துடன் தக்கனவும் உறுதியான பலனளிப்பனவுமான நடவடிக்கைகளையும் இவ்வரசுகள் எடுக்கும்.

4. இந்த 24வது விதியில் இடம்பெறும் உரிமைகள் படிப்படியாக எய்தப்படும் வகையில் பன்னாட்டு ஒத்துழைப்பை இவ்வரசுகள் வளர்க்கவும், ஊக்குவிக்கவும் உறுதி கொள்கின்றன. இதில் குறிப்பாக வளரும் நாடுகளின் தேவைகள் முக்கியமாக எடுத்துக்கொள்ளப்படும்.

.......

**விதி 27**

1. ஒவ்வொரு குழந்தைக்கும் தன் உடல்வளர்ச்சி, மன வளர்ச்சி, ஆன்மிக, தார்மிக, சமூக வளர்ச்சிக்குப் போதுமான அளவு தரமான வாழ்க்கைக்கு உரிமை உண்டு என்பதை இவ்வரசுகள் ஏற்கின்றன.
2. வளர்ச்சிக்கான சூழலை, தம் திறமைக்கும் நிதி வசதிக்கும் ஏற்ப உருவாக்கித்தர வேண்டியது பெற்றோர் அல்லது காப்பாளரின் அடிப்படைப் பொறுப்பாகும்.
3. இவ்வரசுகள், அந்தந்த நாட்டு நிலைமைகளுக்கும், நிதி வசதிக்கும் ஏற்ப அவர்கள் இவ்வுரிமையை நனவாக்கிட உதவக்கூடிய தகக நடவடிக்கைகளை எடுக்கும். சத்துணவு, உடை, உறையுள் இவற்றுக்கான திட்டங்களுக்கு உதவும்.

---

**விதி 28**

1. குழந்தைகளுக்கான கல்வி பெறும் உரிமையை ஏற்கும் இவ்வரசுகள் படிப்படியாகவும் சமத்துவ அடிப்படையிலும் இதை நனவாக்கும் வண்ணம், குறிப்பாக கீழ்வரும்

நடவடிக்கைகளை எடுக்கும்:

அ. ஆரம்பக் கல்வியைக் கட்டாயமாகவும் இலவசமாகவும் ஆக்குதல்;

ஆ. பொதுக்கல்வி, வேலைகள் கல்வி உட்பட்ட பலவித இடைநிலைப் படிப்புகளின் வளர்ச்சியையும் ஊக்குவித்தல்; அவற்றை ஏற்படுத்துதல், எளிதாய்க் கிடைக்கச் செய்தல்; இலவசக் கல்வியை நடைமுறைப்படுத்துதல், தேவையுள்ளவர்களுக்கு நிதிஉதவி முதலிய தேவையான உதவிகள்,

இ. இயன்ற வகைகள் அனைத்தாலும் தகுதிபெற்றோர்க்கு உயர்கல்வி எளிதாய்க் கிடைக்கச் செய்தல்;

ஈ. கல்வி, பணிசார் கல்வி பற்றிய தகவல்களையும், வழிமுறைகளையும் தொகுத்தல், அனைவருக்கும் எளிதில் கிடைத்திடச் செய்தல்;

உ. குழந்தைகள் ஒழுங்காகப் பள்ளிக்கு வருவதை ஊக்குவிக்கும் பணிகள்; பள்ளியைவிட்டு நின்றுவிடுவதைக் குறைக்கும்படிக்கான பணிகள்.

2. இவ்வுடன்படிக்கைக் கேற்பவும், குழந்தையின் மானிட மாண்புக்கு இசைவாகவும் பள்ளியில் கட்டுப்பாடு கடைப்பிடிக்கப்படுவதை உறுதிசெய்யும் வகையில் தகுந்த நடவடிக்கைகள் அனைத்தையும் இவ்வரசுகள் மேற்கொள்ளும்

3. கல்வி தொடர்பான விஷயங்களில்—குறிப்பாக உலகெங்கிலுமே அறியாமையையும் கல்லாமையையும் ஒழிக்க உதவக் கூடிய நோக்கத்துடனும், விஞ்ஞான தொழில்நுட்ப அறிவினை பெறுவதை எளிதாக்கும் நோக்கத்துடனும் நவீன கற்பித்தல் முறைகளைப் பரப்பிடவும் பன்னாட்டுக் கூட்டுறவைப் பரப்பும்-உற்சாகப்படுத்தும். இதில் வளரும் நாடுகளின் தேவைக்கு முக்கிய இடம் தரப்படும்.

## விதி 29

1. குழந்தையின் கல்வி கீழ்க்கண்டவைகளை நோக்கமாகக் கொண்டு அமையும் என்பதை இவ்வரசுகள் ஏற்கின்றன.

அ. குழந்தையின் ஆளுமை, திறமைகள், உடல்மனவலிமை அவர்களின் முழு வீச்சிலுமான வளர்ச்சி;

ஆ. மனித உரிமைகள், அடிப்படை சுதந்திரங்கள், ஐ.நா. அமைப்புச்சட்டத்தினை அணி செய்யும் கோட்பாடுகள், ஆகியவற்றின் மீது மரியாதையை உருவாக்குதல்.

இ. பெற்றோர் மீதும், தனது கலாச்சார அடையாளம், மொழி, மதிப்பீடுகள், வாழும்நாட்டின் தேசிய மதிப்பீடுகள், எந்த நாட்டின் வம்சாவழியோ அந்நாட்டின் மதிப்பீடுகள், தனது நாகரிகமல்லாத பிறநாகரிகங்கள் ஆகியவைமீதும் மரியாதையை ஏற்படுத்தல்;

ஈ. பிறரைப்புரிந்து கொள்ளுதல், அமைதி, சகிப்பு, ஆண்-பெண் சமத்துவம், கலாச்சார இனம்—தேசியம்—மதம் என்ற பல்வகைக் குழுவாகவும் ஆதிகுடிகளாகவும் குழுக் களாய் பிரிந்துள்ள எல்லா மாந்தருக்குள்ளும் நட்புறவு ஆகியவற்றுடனானதோர் புதியதோர் சுதந்திரபூமியின் பொறுப்புள்ள வாழ்க்கைக்கு அக்குழந்தையை ஆயத்தப்படுத்துதல்

உ. இயற்கைச் சூழலுக்கு மரியாதை செலுத்தக் குழந்தைகள் கற்றுக்கொள்ளல்.

2. முந்தைய பத்தியில் குறிப்பிட்டுள்ள கோட்பாடுகள் கடைப் பிடிக்கப்பட்டும், அரசு விதிக்கும் குறைந்தபட்ச தரத்துக்குக் குறையாமலும், கல்வியளிக்கும் பட்சத்தில், தனியாருக்கும், நிறுவனங்களுக்கும் கல்விநிறுவனங்களை நிறுவி நடத்தும் உரிமையில் குறுக்கிடும் வகையில் 28 மற்றும் 29ஆம் பிரிவில் உள்ள எப்பகுதியும் பொருள் கொள்ளப்படக்கூடாது.

## விதி 30

கலாச்சார இன அடிப்படையிலோ, மதம் அல்லது மொழி வகையாலோ சிறுபான்மையினர் வாழும் நாடுகளிலும், ஆதிகுடிகள் வாழும் நாடுகளிலும், அச்சிறுபான்மைக் குழுவையோ, ஆதி இனக் குழுவையோ சார்ந்த குழந்தைக்கு தனது சமுதாயத்தைச் சார்ந்த குழந்தைகளுடன் சேர்ந்து தனது சொந்தக் கலாச்சாரத்தை அனுப விக்கவோ, தனது மதத்தைப் பின்பற்றவோ அதன்படி வாழவோ தன் தாய்மொழியைப் பயன்படுத்தவோ உள்ள உரிமையை யாரும் மறுக்க முடியாது.

## விதி 31

1. ஓய்வுக்கும், பொழுதுபோக்குக்கும், தன் வயதுக்கு ஒத்த விளையாட்டுகளிலும், கேளிக்கைகளிலும் ஈடுபடவும், கலை களிலும், கலாச்சார வாழ்விலும் சுதந்திரமாகப் பங்குபெறவும் குழந்தைகளுக்குள்ள உரிமையை இவ்வரசுகள் ஒப்புக் கொள்கின்றன.

2. சுதந்திரமாயும், முழுமையாகவும் கலாச்சாரத்திலும் கலை வாழ்விலும் பங்குபெற குழந்தைகட்குரிய உரிமையை இவ்வரசுகள் மதிக்கும், வளர்க்கும். கலையும் கலாச்சாரமும் சார்ந்த நடவடிக்கைகளுக்கும் ஓய்வுக்கும் கேளிக்கைக்குமான நடவடிக்கைகள் ஆகியவற்றுக்கு பொருத்தமான சம வாய்ப்புகளை ஏற்படுத்துவதையும் ஊக்குவிக்கும்.

## விதி 32

1. குழந்தைகளுக்குள்ள பொருளாதார சுரண்டலுக்கெதிராகவும், மிகவும் சிரமமான பணிகளைச் செய்ய வேண்டிய கட்டாயத்திலிருந்தும், தன் கல்வியில் குறுக்கிடுவதாகவோ, தன் உடல்நலம், உடல் வளர்ச்சி, மனநலம் ஆன்மீக, தார்மிக, சமூக வளர்ச்சி ஆகியவற்றில் குறுக்கிடுவதாகவோ உள்ள வேலைகளிலிருந்தும் பாதுகாப்புப் பெறும் உரிமையையும் இவ்வரசுகள் ஒப்புக்கொள்கின்றன.
2. இந்த (32வது) விதியை நடைமுறையில் செயல்படுத்துவதை உறுதி செய்வதற்கு சட்டமியற்றல், சமூக, கல்விசார்ந்த, நிர்வாக நடவடிக்கைகளையும் இவ்வரசுகள் மேற்கொள்ளும். அதற்காக, மற்ற பன்னாட்டு ஆவணங்களின் நோக்கங்களுக்கு ஊறு இல்லாத வகையில் இவ்வரசுகள் கீழ்க்கண்ட குறிப்பிட்ட நடவடிக்கைகளை எடுக்கும்.
   அ. வேலையில் சேருவதற்கு ஒரு குறைந்த பட்சவயது அல்லது வெவ்வேறு வேலைகளுக்கு வெவ்வேறு குறைந்த பட்ச வயதை நிர்ணயித்தல்,
   ஆ. வேலைநேரம் குறித்தும் வேலைக்கான நிபந்தனைகள் குறித்தும் விதிகளை வகுத்தல்.
   இ. இந்த விதி பலனுள்ள முறையில் நடைமுறைப்படுத்தப் படுவதை உறுதிசெய்ய, விதிமீறல்களுக்கு உரிய தண்டனைகளும் அபராதங்களும் நிர்ணயித்தல்.

## விதி 33

சம்பந்தப்பட்ட பன்னாட்டு உடன்படிக்கைகளில் குறிக்கப்பட்டுள்ள மனநிலையைப் பாதிக்கும் மருந்துகள், போதை மருந்துகள் முதலியவற்றை தவறான வழியில் குழந்தைகள் பயன்படுத்தாமல் தடுக்கவும் அவற்றின் உற்பத்தியிலும் விநியோகத்திலும் சிறார்கள் பயன்படுத்தப் படுவதைத் தடுக்கவும் இவ்வரசுகள் சட்டமியற்றல், நிர்வாகச் செயல்பாடு, சமூக-கல்வி ஏற்பாடு உள்பட உரிய நடவடிக்கை எடுக்கும்.

### விதி 34

பாலியல் ஆதிக்கம், தவறான பாலியல் உறவுகளுக்கு ஆட்படுத்தப் படுதல் முதலிய எந்த வித பாலியல் குற்றங்களுக்கும் ஆளாகி விடாமல் குழந்தைகளைப் பாதுகாக்க இவ்வரசுகள் உறுதிபூணு கின்றன. இந்நோக்கத்தில், குறிப்பாகக் கீழ்க்கண்டவற்றைத் தடுக்க தேசிய அளவிலும், இருநாட்டு-பன்னாட்டு நடவடிக்கைகளாகவும் தக்க செயல்பாடுகளனைத்தையும் மேற்கொள்ளும்.

அ. சட்ட விரோதமாக எந்த பாலியல் நடவடிக்கையில் ஈடுபடுமாறு ஆசைகாட்டுதலும் அச்சுறுத்துதலும்.

ஆ. விபசாரத்திலும் மற்ற சட்டவிரோத பாலியல் நடவடிக்கை களில் குழந்தைகளைப் பயன்படுத்தி லாபமடைதல்.

இ. பாலியல் ஆபாச ஏடுகள், கலைநிகழ்ச்சிகளில் ஈடுபடுத்தி லாபமடைதல்.

### விதி 35

எந்த நோக்கத்துக்காகவும், எந்த உருவிலும், குழந்தை வணிகத்தில் ஈடுபடல், குழந்தை விற்பனை, கடத்தல் ஆகியனவற்றைத் தடுக்க தேசிய அளவிலும், இரு நாடுகளுக்கிடையேயும் பன்னாட்டு அளவிலும் தக்க நடவடிக்கைகள் அனைத்தையும் இவ்வரசுகள் எடுக்கும்.

### விதி 36

குழந்தைகள் நலத்துக்கு எந்த வகையிலாவது எதிரான எல்லாவித சுரண்டல்களிலிருந்தும் அவர்களை இவ்வரசுகள் பாதுகாக்கும்.

### விதி 37

இவ்வரசுகள் கீழ்க்கண்டவற்றுக்கு உறுதி செய்யும்:

அ. எந்தக் குழந்தையும் சித்திரவதைக்கோ மற்ற கொடூரமான மனிதத் தன்மையற்ற ஈனப்படுத்தும் தண்டனைகள் அல்லது அவ்வளவு மோசமாக நடத்தப்படுதல் முதலிய வற்றுக்கு உட்படுத்தப்படாது. 8 வயதுக்குட்பட்டவர்கள் இழைக்கும் குற்றங்களுக்காக மரண தண்டனையோ, விடுதலைக்கு வழியற்ற ஆயுள்தண்டனையோ விதிக்கப்படாது.

ஆ. சட்டவிரோதமாகவும் நியாயமற்ற முறையிலும் எந்தக் குழந்தையின் சுதந்திரமும் பாதிக்கப்படாது. ஒரு குழந் தையை கைது செய்வது, சிறையிலிடுவது, அடைத்து

வைப்பது ஆகியவை சட்டபூர்வமாகத்தான் இருக்க வேண்டும். வேறு வழியே இல்லாதபோது, அதுவும் ஆகக்கூடிய குறைந்த காலத்துக்கே அப்படி செய்யலாம்.

இ. ஒரு குழந்தையின் உரிமை பறிக்கப்படும்போதும் மனிதப்பிறவி என்ற முறையில் அதற்கு இருக்கிற உள்ளார்ந்த கவுரவத்துக்கு மரியாதை தந்து மனிதப் பண்போடு நடத்தப்படும். அதனையொத்த வயதினரின் தேவைகள் கவனத்தில் கொள்ளப்படும். குழந்தைக்கு அதுவே நல்லதல்ல என்றாலன்றி கைதாகும் குழந்தை பெரியவர்களிடமிருந்து தனியே தான் வைக்கப்படும். அசாதாரணமான சந்தர்ப்பங்களில் தவிர, கடித மூலமும், சந்திப்புகள் மூலமும் தன் குடும்பத்தாருடன் தொடர்பு கொள்ளும் உரிமை அப்போதும் அவர்களுக்கு உண்டு.

ஈ. இவ்விதமாக உரிமை பறிக்கப்பட்ட சிறுவருக்கு உடனடி யாக சட்ட உதவியுட்பட உதவிகள் பெறும் உரிமை உண்டு. தன் உரிமை பறிக்கப்பட்டது சட்டவிரோதம் என்று நீதி மன்றத்திலோ, அவற்றுக்கிணையாக தகுதி பெற்ற, பாரபட்சமற்ற அமைபபுகளிலோ முறையீடு செய்யவும் உரிமை உண்டு. அத்தகைய முறையீடுகளில் விரைவில் தீர்ப்பாணை கோரவும் உரிமை உண்டு.

## விதி 38

1. இவ்வரசுகள், போர்க்கால நடவடிக்கைகளின்போது தம்மைக் கட்டுப்படுத்தும் சட்டங்களின்கீழ் பன்னாட்டு மனித நேய சட்ட விதிகளில் குழந்தைகள் சம்பந்தப்பட்ட நியமங்களை மதிக்கவும், அவற்றுக்கான மதிப்பினை நிச்சயம் செய்யவும் உறுதிமேற்கொள்கின்றன.
2. பதினைந்து வயதுக்குக் கீழ்ப்பட்டோர் போர் நடவடிக்கை களில் நேரடிப் பங்கெடுக்காமலிருப்பதை உறுதி செய்வதற்காக தமது சக்திக்குட்பட்ட எல்லா நடவடிக்கைகளையும் எடுக்கும்.
3. தமது படைகளில் பதினைந்து வயதுக்குட்பட்டவர்களை சேர்த்துக் கொள்ளாது.
4. போரின்போது படை வீரரல்லாத குடிமக்களின் பாதுகாப்பு என்பது பற்றிய பன்னாட்டு மனித நேயச்சட்டங்களின்கீழ் தமக்குள்ள கடப்பாட்டின்படி போரினால் பாதிக்கப்படும் குழந்தைகளின் நலத்தையும் பாதுகாப்பையும் உறுதி செய்யத் தன்னாலான அனைத்தையும் செய்யும்.

**விதி 39**

சுரண்டலுக்கோ, தவறான பயன்படுத்தலுக்கோ எந்த விதப் புறக்கணிப்புக்கோ, சித்திரவதை அல்லது மனிதத் தன்மையற்று கொடுமையாக கையாளப்படுவதற்கோ தண்டனைக்கோ ஆளாக்கப் பட்ட குழந்தைகளின் உடல்நலம், மனநலம், சமூகத்தில் மீண்டும் ஒன்றிணைதல் ஆகியவற்றுக்கு உதவியான எல்லாவித செயல்பாடு களையும் இவ்வரசுகள் மேற்கொள்ளும்.

......

## பகுதி 2

**விதி 42**

பொருத்தமான விறுவிறுப்பான முறைகளின்மூலம் இவ்வுடன்படிக்கையின் கோட்பாடுகளையும், விபரங்களையும் பெரியோர் சிறியோர் அனைவரும் அறியச் செய்யவும் இவ்வரசுகள் உறுதிபூணுகின்றன.

# 10

# தேசிய, இன, மத, மொழி சிறுபான்மை சமூகத்தினர் உரிமை பற்றிய பிரகடனம்

*இப்பிரகடனம் ஐ.நா. பொதுச்சபையால் 18.12.1992 அன்று நிறைவேற்றப்பட்டதாகும்.*

---

தனது அமைப்புத் திட்டத்தில் அறிவித்திருப்பதுபோல் இனம், பால், மொழி, மதவேறுபாடின்றி அனைவருக்கும் மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் உண்டென்பதனைப் பேணுதலும் அதற்குரிய மரியாதை கிடைப்பதை ஊக்குவித்தலும் ஐ.நாவின் அடிப்படை நோக்கங்களில் ஒன்றென்பதை மீண்டும் உறுதி செய்யும் வகையிலும்,

— அடிப்படை மனித உரிமைகளிலும் மானிடனின் கண்ணியம், மதிப்பு ஆகியவற்றிலும், சிறிதும் பெரிதுமான நாடுகளின் ஆண்-பெண் அனைவரது சமமான உரிமைகளிலும் நம்பிக்கையை மீண்டும் உறுதிசெய்யும் வகையிலும்,

— அமைப்புத் திட்டத்திலும், பன்னாட்டு மனித உரிமை மனித உரிமைப்பிரகடனம், இனக்கொலை பாதகத்தைத் தடுப்பதற்கும், தண்டிப்பதற்குமான உடன்படிக்கை, அனைத்துவிதமான இனப்பாகு பாடுகளையும் ஒழிப்பது பற்றிய பன்னாட்டு உடன்படிக்கை. குடிமக்களின் உரிமைகள் அரசியல் உரிமைகள் மீதான பன்னாட்டு உடன்படிக்கை, பொருளாதார சமூக பண்பாட்டு உரிமைகள் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கை, மதம்-நம்பிக்கை இவற்றின் அடிப் படையிலான சகலவித சகிப்பின்மை பாகுபாடு ஆகியவற்றை ஒழிப்ப தற்கான பிரகடனம், குழந்தைகளின் உரிமைகள் பற்றிய உடன் படிக்கை மற்றும் இது போன்றவை தொடர்பாக உலகளாவிய தாகவோ குறிப்பிட்ட பகுதிகளிலோ ஏற்படுத்தப்பட்டுள்ள ஆவணங்கள், ஐநா. உறுப்புநாடுகளுக்குள் ஏற்படுத்திக்கொள்ளப்பட்

டுள்ள உடன்படிக்கைகள் முதலியவற்றில் ஒளிர்கின்ற தத்துவங்களை நனவாக்குவதற்கு உறுதுணைசெய்ய விழைந்தும்,

— இன-மத-மொழிச் சிறுபான்மை மக்களின் குடிமக்கள் உரிமை, அரசியல் உரிமை பற்றிய பன்னாட்டுடன்படிக்கையில் 27ஆம் பிரிவின் வாசகங்களால் உந்தப்பட்டும்,

— தேசிய வழி, மொழிவழி, மதவழி, இனவழி, சிறுபான்மை மக்களின் உரிமைகள் பாதுகாக்கப்படுவதும், பேணப்படுவதும் அவர்கள் வாழும் நாடுகளின் அரசியல் சமூக உறுதிதன்மைக்கு உதவும் என்பதைக் கருதியும்,

— ஒட்டுமொத்தமான சமூக வளர்ச்சியின் பிரிக்க முடியாத பகுதியாக சட்டத்தின் ஆட்சி என்ற அடிப்படையிலான ஜனநாயக அமைப்புக்குள் இன, மத, மொழி, தேசியச் சிறுபான்மையினரின் உரிமைகள் தொடர்ந்து பேணப்படுவதும் பாதுகாக்கப்படுவதும் மக்களிடையிலும் நாடுகளுக்கிடையிலும் நட்பையும் கூட்டுறவையும் வலுப்படுத்தும் என்பதை வலியுறுத்தியும்,

— சிறுபான்மையோர் பாதுகாப்பில் ஐ.நாவின் முக்கியப பங்கினைக் கருதியும்,

— ஐ.நா. அமைப்பின்மூலம், குறிப்பாக மனித உரிமை ஆணையம் மூலமும் சிறுபான்மையினர் பாகுபாட்டுத்தடுப்பு, பாதுகாப்பு ஆகியவற்றுக்கான துணை ஆணையம் மூலமும், பன்னாட்டு மனித உரிமை உடன்படிக்கைகள் மற்றும் இது தொடர் பான பன்னாட்டு மனித உரிமை உடன்படிக்கைகள்மூலம் அமைக்கப்பட்ட பிற நிறுவனங்கள் வழியாகவும், இன-மொழி-மத-தேசிய சிறுபான்மையினர் உரிமைகளைக் காப்பதிலும், பேணுவதிலும் இதுவரை செய்யப்பட்டிருக்கும் பணிகளை மனதில் இருத்தியும்,

— சிறுபான்மையினரைப் பாதுகாப்பதிலும் இன, மத, மொழி, தேசிய சிறுபான்மையோர் உரிமைகளைப் பேணுவதிலும் பாதுகாப் பதிலும் பல அரசுக் கூட்டுறவிலும் அரசுசாரா அமைப்புகள் மூலமும் செய்யப்பட்டு வரும் நற்பணிகளையும் கணக்கில் எடுத்துக் கொண்டும்,

— இன, மத, தேசிய, மொழிவழி சிறுபான்மையினர் உரிமை மீதான பன்னாட்டு மனிதஉரிமை ஆவணங்களை இன்னும் பயனுள்ள முறையில் நடைமுறைப்படுத்துவதை உறுதி செய்ய வேண்டிய தேவையினை ஒப்புக்கொண்டும்

— ஐ.நா. பொதுச்சபை

இந்த தேசிய, இன, மத, மொழிச் சிறுபான்மையினர் உரிமைகள் மீதான பிரகடனத்தை முழங்குகிறது.

**விதி 1**

1. சிறுபான்மையினரின் தேசிய, இன, கலாச்சார, மத, மொழி அடையாளங்களை தமது ஆட்சிப் பரப்புக்குள் அரசுகள் அங்கீகரிக்கும்; பாதுகாக்கவும் செய்யும். அவர்களின் அவ்வித அடையாளங்கள் பேணப்படுவதை ஊக்குவிக்கும்.
2. இந்த நோக்கங்களை நிறைவு செய்ய சட்டமியற்றல் மற்றும் பிறவகை நடவடிக்கைகளை மேற்கொள்ளும்.

**விதி 2**

1. தம்முள்ளும், வெளியிலும், சுதந்திரமாகவும், குறுக்கீடோ-எவ்வகைப் பாகுபாடோ இன்றி தமது சொந்தக் கலாச்சாரத்தை அனுபவிக்கவும், தமது மதத்தை நம்பவும், கடைப்பிடிக்கவும், தமது மொழியைப் பயன்படுத்தவும். தேசிய, இன, மத, மொழிச் சிறுபான்மையினருக்கு (இனி இங்கு சிறுபான்மை யினர் என்று குறிக்கப்படவிருப்போருக்கு) உரிமை உண்டு.
2. பண்பாட்டு, மத, சமூக, பொருளாதார, பொதுவாழ்வில் பயனுள்ள வகையில் பங்கு பெற சிறுபான்மையினருக்கு உரிமை உண்டு.
3. அந்தந்த தேச சட்டங்களுக்கு உட்பட்ட வழியில், தங்கள் வாழிடங்களிலும் தமது சிறுபான்மை இனத்துள்ளும் தேசிய அளவிலும் வட்டார அளவிலும் முடிவுகளெடுப்பதில் பயனுள்ள முறையில் பங்கெடுக்க சிறுபான்மையினருக்கு உரிமையுண்டு.
4. சிறுபான்மையினருக்கு தமக்கென்று சங்கங்கள் அமைத்துக் கொள்ளவும் அவற்றை நடத்திச் செல்லவும் உரிமையுண்டு.
5. சிறுபான்மையினருக்கு, எந்தவிதப் பாகுபாடுமின்றி, தமது குழுவின் பிற உறுப்பினர்களுடனும், பிற சிறுபான்மை இனத்தாருடனும், எல்லைத்தாண்டியும் பிற அரசுகளின் குடிமக்களுடன் தேசிய வழியிலோ, இன, மொழி, மத வழியிலோ இணைக்கும் உறவுகள் இருந்தால் அவர்களுடனும் தன்னிச்சையாக அமைதிபூர்வமான தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்ளவும், வளர்த்துக் கொள்ளவும் உரிமை உண்டு.

**விதி 3**

1. இந்தப் பிரகடனத்தில் பொதிந்துள்ளவை உட்பட தமது எல்லா உரிமைகளைத் தனியாகவோ, தம் குழுவினருடன் இணைந்தோ எவ்விதப் பாகுபாடுமின்றி பயன்படுத்தலாம்.

2. இந்தப் பிரகடனத்தில் பொதிந்துள்ள உரிமைகளைப் பயன் படுத்துவதாலோ பயன்படுத்தாமையாலோ எந்தச் சிறுபான்மை மனிதருக்கும் எவ்வித சிரமமும் ஏற்படாது.

## விதி 4

1. தமது மனித உரிமைகள் அடிப்படை சுதந்திரங்கள் அனைத்தையும் எவ்விதப் பாகுபாடு இன்றியும், சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்ற அடிப்படையிலும் சிறு பான்மையினர் முழுமையாகவும் பயனுள்ள வகையிலும் அனுபவிப்பதை உறுதிப்படுத்தும் நடவடிக்கைகளை அரசுகள் தேவைப்படும்போது மேற்கொள்ளும்.
2. குறிப்பான சில வழக்கங்கள் தேசிய சட்டங்களை மீறுவன. வாகவோ அனைத்துலகத் தரங்களுக்கு மாறாகவோ இருந்தா லன்றி சிறுபான்மைக் குழுவினர் தமக்கென உள்ள அடை- யாளங்களை வெளிப்படுத்துவதற்கும் தமது பண்பாடு, மொழி, மதம், மரபு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை மேம்படுத்திக் கொள்ளவும் வசதியான சூழலை ஏற்படுத்தித் தரத்தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளும்.
3. அரசுகள் சிறுபான்மையினர் தமது தாய்மொழியைக் கற்கவும் தாய்மொழியில் கற்கவும் முடிந்தவரையில் தக்க நடவடிக்கை எடுக்கும்.
4. தேவையான இடங்களிலெல்லாம் அரசுகள் தமது எல்லைக்குள் வாழும் சிறுபான்மையினரின் வரலாறு, மரபுகள், மொழி, பண்பாடு பற்றி அறிவதை ஊக்குவிக்கும் வண்ணம் கல்வித்துறையில் நடவடிக்கைகள் எடுக்கும். ஒட்டுமொத்தமாக சமூகத்தைப் பற்றி கற்கவும் அவர்களுக்கு போதிய வாய்ப்புகள் இருக்கும்.
5. தத்தம் நாடுகளில் பொருளாதார முன்னேற்றம், மேம்பாடு ஆகியவற்றில் சிறுபான்மையினர் முழுமையாகப் பங்கெடுக்க வகை செய்ய அரசுகள் தகுந்த நடவடிக்கைகளை பரிசீலிக்கும்.

## விதி 5

1. தேசியக் கொள்கைகளையும் திட்டங்களையும் தீட்டுவதிலும், நடைமுறைப்படுத்துவதிலும் சிறுபான்மையினரின் நியாயமான நலன்களுக்கு உரிய கவனம் தரப்படும்.
2. அரசுகளுக்கிடையிலான உதவித்திட்டங்கள் ஒத்துழைப்புத் திட்டங்கள் ஆகியவற்றைத் திட்டமிடுவதிலும் நடைமுறைப்

படுத்துவதிலும் சிறுபான்மையினரின் நியாயமான நலன்களுக்கு உரிய கவனம் தரப்படும்.

**விதி 6**

சிறுபான்மையினர் பற்றிய பிரச்சினைகளில் தகவல்களையும் அனுபவங்களையும் பகிர்ந்து கொள்வது உட்பட அரசுகள் பரஸ்பர நல்லெண்ணமும் நம்பிக்கையும் பேணும் வகையில் தம்முள் ஒத்துழைக்க வேண்டும்.

**விதி 7**

இப்பிரகடனத்தில் பொதிந்துள்ள உரிமைகள் மதிக்கப்பட வசதியாக அரசுகள் தம்முள் ஒத்துழைப்பு தந்துகொள்ள வேண்டும்.

**விதி 8**

1. சிறுபான்மையினர் தொடர்பாக அரசுகளுக்குரிய எந்தக் கடப்பாட்டை நிறைவேற்றுவதற்கும் இந்தப் பிரகடனத்தில் கண்டுள்ள எதுவும் தடையாக இராது.
2. இந்தப் பிரகடனத்தில் பொதிந்துள்ள உரிமைகளை அனுபவிப்பது உலகு ஒப்பிய மனித உரிமைகளையும், அடிப்படை சுதந்திரங்களையும் யார் அனுபவிப்பதையும் பாதிக்காது.
3. இந்தப் பிரகடனத்தில் பொதிந்துள்ள உரிமைகளை அனுபவிப்பதை உறுதி செய்வதற்கான அரசுகளின் எந்த நடவடிக்கையும் அதன் அளவிலே ஐ.நா. மனித உரிமைகள் பிரகடனத்தில் கண்டுள்ள சமத்துவ தத்துவத்துக்கு முரணானதாக கருதப்படமாட்டாது.
4. இப்பிரகடனத்தில் கண்டுள்ள எதுவும், அரசுகளின் இறையாண்மை சமத்துவம், எல்லை நிர்ணயிப்பு அரசியல் சுதந்திரம் முதலிய ஐ.நாவின் கோட்பாடுகள் நோக்கங்கள் ஆகியவற்றுக்கு முரணான எவ்வித நடவடிக்கையையும் அனுமதிக்கிற வழியில் பொருள் கொள்ளப்படக்கூடாது.

**விதி 9**

ஐ.நா. அமைப்பைச் சேர்ந்த நிறுவனங்களும், சிறப்பு நிறுவனங்களும் தத்தம் துறைகளின் எல்லைக்குள் இப்பிரகடனத்தில் பொதிந்துள்ள உரிமைகளும் தத்துவங்களும் முழுதாக அனுபவிக்கப்பட தமது பங்களிப்பைத் தரும்.

11

# வியன்னா பிரகடனமும் நடவடிக்கைத் திட்டமும்

ஆஸ்திரியாவிலுள்ள வியன்னாவில் 1993 ஜூன் 14 முதல் 25 வரை மனித உரிமைகள் பற்றிய உலக மாநாடு நடைபெற்றது. இந்த வகையில் இதுவரை இராத பெரிய அளவில் நடைபெற்ற அம்மாநாட்டில் 171 அரசுகளின் பிரதிநிதிகளும், ஏராளமான தேசிய, சர்வதேசிய அமைப்புகளையும், அரசுசாரா நிறுவனங் களையும் சார்ந்தவர்களாக ஏறத்தாழ ஏழாயிரம்பேர் கலந்து கொண்டனர். மாநாட்டின் நோக்கங்களில் 'அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் ஏற்கப்பட்ட 1948இலிருந்து மனித உரிமைகள் துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் குறித்த ஆய்வும் மதிப்பீடும், வளர்ச்சிக்கும் பொருளாதார, சமூக, பண்பாட்டு, அரசியல் உரிமைகள் குடிமக்கள் உரிமைகள் ஆகியவற்றை அனுபவிப்பதற்கும் உள்ள தொடர்பு பற்றிய ஆய்வு, தடைகளைக் கண்டறிதல், தடைகளைக் களையும் வழிகளை ஆராய்தல்' ஆகியவை சிலவாகும். இந்த மாநாட்டுக்கு முன்பாக டுனிசியாவில் டுனீஸ், கோஸ்டா ரிக்காவில் சான்ஜோஸ், தாய்லாந்தில் பாங்காக் ஆகிய நகரங்களில் வட்டார மாநாடுகள் நடைபெற்றிருந்தன. வியன்னா மாநாடு 25 ஜூன் 1993 அன்று வியன்னா பிரகடனமும் நடவடிக்கைத் திட்டமும் என்ற ஆவணத்தை ஏற்று நிறைவேற்றியது. பிறகு ஐ.நா. பொதுச்சபை இதனை அங்கீகரித்து ஏற்றுக் கொண்டது. ஒரு பக்கம் மக்களாட்சி, மனித உரிமைகள், மேம்பாடு ஆகியவையும் ஒருபக்கம் மனித உரிமைகளின் உலகளாவிய தன்மை, பகுக்கப் படாமை, தம்முள் அவ்வுரிமைகள் ஒன்றையொன்று சார்ந்திருத்தல் ஆகிய இருவித அம்சங்களும் ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதைக் கண்டுகொண்டதும் ஏற்றுக் கொண்டதும் வியன்னா பிரகடனத்தின் குறிப்பிடத்தக்க முக்கியத்துவமாகும். இப்பிரகடனம்

'மனித உரிமைகளுக்கான உயர் ஆணையர்' ஒருவர் நியமிக்கப்பட வேண்டும் என்று பரிந்துரைத்ததை ஐ.நா பேரவை 1993 டிசம்பரில் ஏற்றுக் கொண்டது. எல்லா மனித உரிமைகளையும் பேணவும் காக்கவும் வேண்டி இப்பரிந்துரை கூறப்பட்டிருந்தது. இந்தப் பிரகடனத்தின் சில பகுதிகள் கீழே தரப்படுகின்றன.

---

## பகுதி 1

1. ஐ.நா. அமைப்புத்திட்டம் மனித உரிமைகள் பற்றிய பிற ஆவணங்கள், சர்வதேசச் சட்டம் ஆகியவற்றுக்கிணங்க அனை வருக்கும் எல்லா மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங் களும் உண்டென்பதைக் கடைப்பிடிக்கவும், காப்பாற்றவும் அவற்றுக்கு உலகளாவிய மரியாதையைப் பேணவும் தமது கடமையை நிறைவேற்றுவதில் அரசுகளுக்குள்ள புனிதக் கடப்பாட்டினை இந்த மனித உரிமைகள் பற்றிய உலக மாநாடு மீண்டும் உறுதி செய்கிறது. இவ்வுரிமைகளும் சுதந்திரங்களும் உலகளாவியவை என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

இந்தக் கட்டுமானத்தில், ஐ.நா.வின் நோக்கங்களை முழுமையாக நிறைவேற்றுவதில் மனித உரிமைகள் துறையில் பன்னாட்டுக் கூட்டுறவை வளர்ப்பது இன்றியமையாத தேவையாகும்.

மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் மனிதப் பிறவியின் பிறப்புரிமையாகும். அவற்றைப் பேணு வதும் காப்பதும் அரசாங்கங்களின் முதற்பொறுப்பாகும்.

2. மக்கட்குழுக்கள் அனைத்துக்கும் சுயநிர்ணய உரிமை உண்டு. அவ்வுரிமையின் வாயிலாக தமது அரசியல் நிலையை சுயசார்பாக நிர்ணயித்துக் கொள்கின்றனர்; பொருளாதார, சமூக, கலாச்சார மேம்பாட்டிற்கு முயற்சிக்கிறார்கள்.

குடியேற்ற நாடுகள் மீதான (காலனி) ஆதிக்கம் அல்லது வேறுவித அயலார் ஆதிக்கம் அல்லது அயலார் கைப்பற்றலின் கீழான ஆதிக்கத்தில் துன்புறும் மக்களின் நிலையை மனதில்கொண்டு ஐநா. அமைப்புத்திட்டத்துக்கேற்ப தமது பிரிக்க முடியாத சுயநிர்ணய உரிமைக்காக சட்டபூர்வமான நடவடிக்கையும் எடுக்க மக்களுக்குள்ள உரிமையை இம் மாநாடு ஒப்புக்கொள்கிறது. சுயநிர்ணய உரிமையை மறுப்பதை மனித உரிமை மீறல் என்று கருதுகின்ற இந்த

மாநாடு சுயநிர்ணய உரிமை பயனுள்ள முறையில் அனுப விக்கப்பட வேண்டியதன் முக்கியத்துவத்தை அடிக் கோடிட்டுக் காட்டுகிறது.

......

5. மனித உரிமைகள் அனைத்தும் உலகளாவியவை, பகுக்க முடியாதவை, ஒன்றுக்கொன்று தொடர்பானவை, ஒன்றை யொன்று சார்ந்தவை. அவற்றை உலக (நாடுகளின்) சமுதாயம் உலக முழுவதற்கும் ஒரே தளத்தில், ஒரே முறையில் ஒரே தரத்தில், நியாயமான முறையில், ஒரே அழுத்தத்தோடு நோக்க வேண்டும். தேசிய வட்டார தனித்தன்மைகள், பல்வேறு வரலாற்று-பண்பாட்டு சமய பின்னணிகளின் முக்கியத்துவம் ஆகியவை மனதில் கொள்ளப்படவேண்டியவைகளா யிருப்பினும், அரசுகள் தாம் எவ்வித அரசியல்-பொருளாதார-கலாச்சார அமைப்புகளின் பாற்பட்டவைகளாயிருப்பினும், எல்லா மனித உரிமைகளையும் அடிப்படை சுதந்திரங்களையும் பேணுவதும் காப்பதும் அவற்றின கடமையாகும்.

......

8. மக்களாட்சி, மேம்பாடு, மனித உரிமைகளுக்கும் அடிப்படை சுதந்திரங்களுக்குமான மரியாதை ஆகிய மூன்றும் ஒன்றை யொன்று சார்ந்தவையும் ஒன்றையொன்று வலுப்படுத்துபவையு மாகும். தமது அரசியல், சமூக, பொருளாதார, கலாச்சார அமைப்புகளை நிர்ணயிப்பது குறித்து மக்கள் தமது சுதந்திரமான கருத்தை வெளியிடுவதன் அடிப்படையிலும், தம் வாழ்வில் அவற்றில் முழுப்பங்கெடுப்பதன் அடிப்படை யிலும் அமைகிறது. அந்தப் பின்னணியில் பார்த்தால், மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் தேசிய அளவிலும் சர்வதேச அளவிலும் பேணப்படுவதும், காக்கப்படுவதும் எங்கும் நிகழ வேண்டும். எந்த நிபந்தனையுமின்றி நடைபெற வேண்டும். உலகு முழுதும் மக்களாட்சி, மேம்பாடு, மனித உரிமைகளுக்கும் அடிப்படை சுதந்திரங்களுக்கும் மதிப்பு அளித்தல் ஆகியவை பேணப்படவும் வலுப்படுத்தப்படவும் உலக (நாடுகள்) சமுதாயம் ஆதரவளிக்கவேண்டும்.

9. மக்களாட்சிமுறை அமல்படுத்தலுக்கும் பொருளாதார சீர்திருத்தங்களுக்குமான முயற்சிகளில் தம்மை ஒப்புக் கொடுத்துள்ள அனைவரிலும் குறைந்த மேம்பாடமைந்துள்ள

நாடுகள் பெரும்பாலானவை ஆப்ரிக்காவில் உள்ளன. அவை மக்களாட்சியும் பொருளாதார முன்னேற்றமும் நாடும் மாற்றத்தில் வெற்றிபெற உலக சமுதாயம் ஆதரவுதரும் என்று இம்மாநாடு மீண்டும் உறுதி செய்கிறது.

10. மேம்பாட்டு உரிமை பற்றிய பிரகடனத்தில் நிறுவப்பட்டுள்ள மேம்பாட்டுரிமை ஒரு உலகளாவிய பிரிக்கப்படமுடியாத உரிமை என்றும் அடிப்படை மனித உரிமைகளின் ஒருங்கிணைந்த ஓர் பகுதி என்றும் மனித உரிமைகள் பற்றிய உலக மாநாடு மீண்டும் உறுதி செய்கிறது.

அப்பிரகடனம் கூறுவதுபோல், மேம்பாட்டின் மையமே மானிடப் பிறவிதான்.

மேம்பாடு எல்லா மனித உரிமைகளையும் அனுபவிக்க வகை செய்கிறது. அதற்காக மேம்பாடு அடையாமையைக் காரணமாகக் காட்டி உலகமே ஏற்றுக்கொண்ட மனித உரிமைகளை ஒடுக்குவதை நியாயப்படுத்த முடியாது.

மேம்பாடு அடையவும், அதனெதிர்வரும் தடைகளை உடைக்கவும் அரசுகள் ஒன்றுக்கொன்று உதவ வேண்டும். மேம்பாட்டுரிமை அனைவருக்கும் கிட்டவும், அதனெதிர்வரும் தடைகள் உடைபடவும் உலக சமுதாயம் உலக நாடுகளிடையே ஒரு பயனுள்ள கூட்டுறவை பேணி வளர்க்க வேண்டும். மேம்பாட்டுரிமையை நடைமுறைப்படுத்துவதில் நிலைத்த முன்னேற்றம் காண்பதற்கு தேசிய அளவில் பயனுள்ள மேம்பாட்டுக்கொள்கைகளும் சர்வதேச அளவில் நியாயமான பொருளாதார உறவுகள், வசதியான பொருளாதார சூழல் ஆகியவையும் தேவைப்படுகின்றன.

11. இன்றைய தலைமுறைக்கும் நாளைய தலைமுறைக்கும் வேண்டியிருக்கிற மேம்பாட்டுத்தேவைகளும், சுற்றுச்சூழல் தேவைகளும் சீராகக் கிட்டுவதற்கு உரிய வண்ணம் மேம்பாட்டுரிமை நிறைவேற்றிக் கொள்ளப்படவேண்டும். சட்டவிரோதமாக போதை மருந்துகளையும், அபாயமான பொருட்களையும் கழிவுகளையும் குவிப்பது ஒவ்வொருவரது உயிருக்கும் சுகாதாரத்துக்குமான மனிதஉரிமைக்கு மோசமான ஒரு சவாலை ஆபத்தான முறையில் உருவாக்குகிறது என்பதை இம்மாநாடு ஒப்புக்கொள்கிறது.

அறிவியல் முன்னேற்றத்தையும் அதன் பயன்பாடுகளையும் அனுபவிக்கும் உரிமை அனைவருக்கும் உண்டு. சில போக்குகள்—குறிப்பாக உயிரியல் மருத்துவத்திலும் உயிர்

விஞ்ஞானத்திலும் தகவல் தொழில்நுட்பத்திலும் நடைபெறுபவை—தனிமனிதனின் மானிடமாண்பு, மனித உரிமைகள், முழுமை ஆகியவற்றுக்கெதிரான தீங்கான கூறுகளைக் கொண்டவையாக இருப்பதை இம்மாநாடு காண்கிறது.

உலக முழுவதன் அக்கறைக்கும் உரித்தாக வேண்டிய இந்தத்தளத்தில் மனித மாண்பும் மனித உரிமைகளும் முழு மரியாதை பெறுவதை உறுதிசெய்துகொள்ள பன்னாட்டுக் கூட்டுறவு வேண்டுமென்றும் இம்மாநாடு வேண்டுகோள் விடுக்கிறது.

12. தமது நாட்டு மக்கள் பொருளாதார சமூக பண்பாட்டு உரிமைகளை முற்றிலுமாகத் துய்ப்பதற்கு வளரும் நாடுகள் செய்யும் முயற்சிகளுக்கு உறுதுணையாக அந்நாடுகளின் வெளிக் கடன் சுமைகளை ஒழிப்பதில் உதவ எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ளுமாறு இம்மாநாடு உலக சமுதாயத்தை வேண்டிக்கொள்கிறது.

......

14. பரவலான கொடிய வறுமை நிலவுவது, மனித உரிமைகள் பயனுள்ள முறையில் ஒழுங்காகத் துய்க்கப்படுவதைப் பாதிக்கிறது. அதனை உடனடியாகக் குறைப்பதும் ஒருநாள் முற்றிலும் ஒழிப்பதும் உலக சமுதாயத்தின் கவனப் பணிகளில் முன்னுரிமை பெறவேண்டும்.

15. மனித உரிமைகளும் அடிப்படை சுதந்திரங்களும் எவ்விதப் பாகுபாடுமின்றி மதிக்கப்படவேண்டும் என்பது சர்வதேச மனித உரிமைகள் சட்டத்தில் ஒரு அடிப்படை விதியாகும். அனைத்துவித இனவாதங்களும், இனப்பாகுபாடுகளும் அன்னியர் வெறுப்பும் அதுபோன்ற சகிப்பின்மைகளும் விரைவாகவும் முற்றிலுமாகவும் அழித்தொழிக்கப்பட வேண்டியது உலக சமுதாயத்தின் முன்கவனப் பணிகளில் ஒன்றாயிருக்க வேண்டும். அவற்றைத் தடுக்கவும் எதிர்க்கவும் அரசாங்கங்கள் பலனுள்ள நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

16. இம்மாநாடு நிறவெறிக் கொள்கையை உடைத்தெறிவதில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தை வரவேற்கிறது. உலக சமுதாயமும் ஐ.நா. அமைப்பும் இத்துறையில் உதவிட வேண்டுமென்று வேண்டிக் கொள்கிறது.

17. பயங்கரவாதம்—அதன் எல்லா உருவிலும் வகைகளிலும் அதன்

நடவடிக்கைகள், செயல்முறைகள், பழக்கங்கள், சில நாடுகளில் அதற்கும் போதை மருந்துக் கடத்தலுக்கும் உள்ள இணைப்புக்கள் ஆகியவை மனித உரிமைகள், அடிப்படை சுதந்திரங்கள், மக்களாட்சி, எல்லைகள் பற்றிய மேலாண்மை அரசுகளின் பாதுகாப்பு, சட்டபூர்வமாக அமைந்த அரசாங் கங்களின் நிலைப்பு ஆகியவற்றை அழிக்கும் நோக்கில் அமையும் நடவடிக்கைகள் ஆகும். உலக சமுதாயம் பயங்கர வாதத்தைத் தடுக்கவும் எதிர்க்கவும் கூட்டுறவை வளர்க்கவும் தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும்.

18. ஒட்டுமொத்த மனித உரிமைகளில் மாதர், சிறுமிகள், மனித உரிமை பிரிக்க முடியாத, மாற்ற முடியாத, ஒருங்கிணைந்த பகுதியாகும். அரசியல், பொருளாதார சமூக, கலாச்சார குடியியல் வாழ்வில் பெண்களுக்கு சமமான முழுமையான பங்கு தேசிய அளவிலும் சர்வதேசிய அளவிலும் கிடைப்பதும், பால் அடிப்படையிலான எல்லா பாகுபாடுகளையும் ஒழிப்பதும் உலக சமுதாயத்தின் முன்னுரிமை லட்சியங் களாக வேண்டும்.

பால் வன்முறை, பாலியல் மேலாதிக்கம், சுரண்டல், கலாச்சார விருப்பு வெறுப்புகளின் பாற்பட்ட அத்தகைய குற்றங்கள், சர்வதேசக் கடத்தல்கள் ஆகியவை மானிடப் பிறவியின் கண்ணியம் மதிப்பு ஆகியவற்றுடன் ஒவ்வாதவை. அவை அழித்துவிலக்கப்படவேண்டும்.

19. சிறுபான்மையினர், உரிமைகளைப் பேணுவது-பாதுகாப்பது ஆகியவற்றின் முக்கியத்துவம், அப்படிப் பேணுவதும் பாதுகாப்பதும் அவர்கள் வாழும் நாடுகளின் சமூக-அரசியல் உறுதிப்பாட்டுக்கு செய்யும் பங்களிப்பு ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு,

அத்தகைய சிறுபான்மையினர் சகலவித மனித உரிமை களையும் அடிப்படை சுதந்திரங்களையும் எவ்விதப் பாகுபாடு மின்றியும் சட்டத்தின் முன் முழுசமத்துவ அடிப்படையிலும் முழுமையாகவும் பயனுள்ள வகையிலும் அனுபவிப்பதை உறுதிசெய்ய வேண்டிய கடப்பாடு அரசுகளுக்கு இருப்பதை இம்மாநாடு உறுதியிட்டுரைக்கிறது.

தம்முள்ளும், வெளியிலும், சுதந்திரமாகவும், குறுக்கீடோ, எந்த வகையான பாகுபாடுள் இன்றியும் தமது சொந்தக் கலாச்சாரத்தை அனுபவிக்கவும், தமது மதத்தை நம்பவும், அதைக் கடைப்பிடிக்கவும், தமது மொழியைப் பயன்படுத்தவும்,

சிறுபான்மையினருக்கு உரிமை உண்டு.

20. சமூகத்தின் மேம்பாட்டுக்கும் பன்முக அமைப்புக்கும், ஆதிகுடிகள் ஆற்றியுள்ள தனித்தன்மை கொண்ட பங்களிப்பையும் அவர்களின் உள்ளார்ந்த கண்ணியத்தையும் அங்கீகரிக்கும் இம்மாநாடு அவர்களது பொருளாதார, சமூக, கலாச்சார நலவாழ்வுக்கும் நிலைகுலைக்காத மேம்பாட்டின் பயன்களை அவர்களும் துய்ப்பதற்கும் உலக சமுதாயத்துக் குள்ள கடப்பாட்டினை மீண்டும் உறுதி செய்துரைக்கிறது. சமூகத்தின் சகலதுறை நடவடிக்கைகளிலும், குறிப்பாக அவர்கள் சம்பந்தப்பட்டவைகளில், அத்தகைய மக்கள் முழுமையாகவும், தடைகளின்றியும் பங்கெடுப்பதை இவ் வரசுகள் உறுதி செய்யவேண்டும். ஆதிகுடிகளின் உரிமை களைப் பேணுவது பாதுகாப்பது ஆகியவற்றின் முக்கியத் துவம், வாழும் நாடுகளின் சமூக-அரசியல் உறுதிப்பாட்டுக்கு செய்யும் பங்களிப்பு ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு, ஆதிகுடிகளின் அனைத்து மனித உரிமைகள், அடிப்படை சுதந்திரங்கள் ஆகியவற்றுக்கான மதிப்பினை, பாகுபாடு ஏதுமின்றி சமத்துவ அடிப்படையில் உறுதி செய்யவும் அவர்களது தெள்ளத்தெளிவான தனி அடையாளங்கள், பண்பாடுகள், சமூக அமைப்பு ஆகியவற்றின் பன்மைப் பாங்கையும் மாண்பையும் மதிப்பதை உறுதி செய்யும் வகையில் சர்வதேச சட்டத்துக்கிணங்க உறுதியான நேர்மறை நடவடிக்கைகளை மேற்கொள்ளும்.

—

22. உடல் ஊனமுற்றோர், பாகுபடுத்தப்படாமல் எல்லா மனித உரிமைகளையும் அடிப்படை சுதந்திரங்களையும் சமமாக அனுபவிப்பதையும் சமூக வாழ்வின் எல்லா நடவடிக்கை களிலும் அவர்களும் தீவிரமாகப் பங்கெடுப்பதையும் உறுதி செய்ய சிறப்பு கவனம் செலுத்தப்படுவது தேவையாய் உள்ளது.

23. எல்லாருக்கும், எவ்விதப் பாகுபாடுமின்றி, துன்புறுத்தப்படுவதி லிருந்து தப்ப வேற்றுநாடுகளில் அடைக்கலம் கோரவும், அடைக்கலம் கிடைத்தால் அதை ஏற்றுக் கொள்ளவும் தன் தாயகம் திரும்புவதற்கும் உள்ள உரிமைகளை இம்மாநாடு மீண்டும் உறுதியிட்டுரைக்கிறது.

மனிதர்களைப் புலம்பெயர்ந்து செல்லவைக்கும் பலவித

மான காரணங்களில், போர் உட்பட பல சமயங்களில் நிகழ்கிற கொடூரமான மனித உரிமை மீறல்களும் அடங்கும்.

இந்த மாநாடு, உலகு தழுவிய அளவில் ஏற்படுகிற அகதிகள் பிரச்சினைகளின் சிக்கலான அம்சங்களைக் கருதியும் ஐ.நா. அமைப்புத்திட்டத்துக்கிணங்கவும் இதுபற்றிய பன்னாட்டு ஆவணங்கள், பன்னாட்டு வலுவான ஒற்றுமை ஆகியவற்றுக்கிணங்கவும், சுமைகளைப் பங்கிட்டுக் கொள்ளும் சீரிய உணர்வில் உலக சமுதாயம் இத்துறையில் ஒரு முழுமை யான விரிவான அணுகுமுறையை உருவாக்க வேண்டும். சம்மந்தப்பட்ட நாடுகளின் ஒத்துழைப்பு கூட்டுறவு, இவற்றுடன் இதில் அக்கறையுள்ள நிறுவனங்களின் கூட்டுறவு ஒத்துழைப்பு ஆகியவையும் இதற்குத் தேவைப்படும். அகதிகள் பற்றிய ஐ.நா. உயர் ஆணையர் முடிவுகளையும் மனதில் இருத்தி அந்த அணுகுமுறை தயாரிக்கப்பட வேண்டும்.

ஐ.நா. அமைப்புத்திட்டத்துக் கிணங்கவும், மனித நேயச் சட்டத்தின் கோட்பாடுகளுக்கிணங்கவும், எல்லாவித இயற்கை நாசங்கள், மனித நடவடிக்கைகள் விளைவான நாசங்கள் ஆகியவற்றால் பாதிக்கப்பட்டவர்களுக்கும் மனித நேய உதவி கிட்ட வேண்டியதன் அவசியத்தையும் முக்கியத் தையும் இம்மாநாடு மேலும் அழுத்தமாகக் குறிப்பிடுகிறது.

24. வேலைக்காக நாடுவிட்டு நாடு போகும் புலம்பெயர் தொழிலாளர்கள் உட்பட தற்பாதுகாப்பு வலுவற்றவர்களாக ஆக்கப்பட்டுவிட்ட குழுக்களைச் சேர்ந்த மக்களின் மனித உரிமைகளைப் பேணுவதற்கும் பாதுகாப்பதற்கும் அதிமுக்கியத்துவம் அளிக்கப்படவேண்டும். அவர்களுக்கு எதிரான அனைத்து வகை பாகுபடுத்தல்களும் ஒழிக்கப்பட வேண்டும். நடைமுறை யிலுள்ள மனித உரிமை ஆவணங்கள் அதற்கேற்ப வலுப்படுத்தப்பட்டு பயனுள்ள வகையில் செயல்படுத்தப்பட வேண்டும்.

25. இந்த மாநாடு தீவிர வறுமையும் சமூகப் புறக்கணிப்பும் மனித மாண்புக்கு அத்துமீறல் என்றும் தீவிர வறுமைபற்றியும் அதன் காரணங்கள் குறித்தும் அறிய அவசர நடவடிக்கைகள் தேவை என்றும், அதில் மேம்பாடு பற்றிய சிக்கல்கள் பற்றியும் அறியப்பட வேண்டுமென்றும் எடுத்துரைக்கிறது. இவற்றின் நோக்கம் அந்த ஏழை மனிதர்களின் மனித உரிமைகளையும் பேணுதலும் தீவிர வறுமைக்கும் சமூகப் புறக்கணிப்புக்கும்

முற்றுப் புள்ளிவைப்பதும் சமூக முன்னேற்றத்தின் பலன்களை அவர்களும் சுவைக்கச் செய்வதுமாய் அமைய வேண்டும். அரசுகள் அத்தகையோரும் தாம்வாழும் சமுதாயத்தில் முடிவுகள் எடுக்கும் பொறுப்புகளில் பங்குபெற வகைசெய்து, மனித உரிமைகளைப் பேணி, தீவிர வறுமைக்கு எதிராகப் போர் தொடுக்க வேண்டும்.

—

28. ஒட்டுமொத்த மனித உரிமை மீறல்களை அதுவும் கூண்டோடு கைலாசமனுப்பும் இனக்கொலை, போர்க்காலக் கற்பழிப்புகள், 'இனத்தையே சுத்தம் செய்தல்', மந்தை மந்தையாய் மக்களை புலம்பெயர்ந்தோடும் அகதிகளாக்கல் போன்ற பாதகங்கள் கண்டு இம்மாநாடு மனம் பதறுகிறது. அத்தகைய அருவருப்பூட்டும் செயல்களை வன்மையாகக் கண்டிக்கும், அதே சமயம் அத்தகைய பாதகம் செய்யும் பாவியர் தண்டிக்கப்பட வேண்டும், அச்செயல்கள் உடனடியாக நிறுத்தப்படவேண்டுமென்றும் மீண்டும் அறைகூவல் விடுக்கிறது.

29. பன்னாட்டு மனித உரிமை ஆவணங்களும் சர்வதேச மனித நேய சட்டங்களும் விதித்துள்ள நிர்ணயிப்புகளை அலட்சியப் படுத்தி உலகின் எல்லாப் பகுதிகளிலும் தொடர்ந்து நடைபெறும் மனித உரிமை மீறல்கள் குறித்தும் பாதிக்கப்பட்டவர்களுக்குப் போதுமான, பலனுள்ள நிவாரணங்கள் கிட்டாமை குறித்தும் ஆழ்ந்த கவலையைத் தெரிவிக்கிறது....

30. உலகின் பல பாகங்களிலும் தொடர்ந்து ஒட்டுமொத்த மீறல்கள் திட்டமிட்டு நடத்தப்படுவது குறித்தும், அனைத்து மனித உரிமைகளும் முழுமையாக அனுபவிக்கப்படுவதைத் தடுக்கும் வகையில் சூழ்நிலைகள் உருவாக்கப்படுவது குறித்தும் இம்மாநாடு கண்டனமும் வெறுப்பும் தெரிவிக்கிறது. சித்திரவதை, மனிதத் தன்மையற்ற வகையில், கொடுமையாக அவமானகரமாக நடத்தப்படல், மனிதத் தன்மையற்ற, கொடுமையான அவமானகரமான தண்டனைகள், யதேச்சதிகாரமான—விசாரணையற்ற கொலைகள், 'காணாமல்போதல்' சட்டவிரோதமான கைதுகள், சகலவித இனவெறுப்பு, இனப் பாகுபாடு, நிறபேதம், வெளிநாட்டு ஆக்கிரமிப்பு, அந்நிய ஆதிக்கம், அந்நியர் வெறுப்பு, வறுமை, பசி, பொருளாதார-சமூக-கலாச்சார உரிமை மறுப்புகள், மதசகிப்பின்மை

பயங்கரவாதம், மாதர்களுக்கெதிரான பாகுபாடுகள், சட்டத்தின் ஆட்சியின்மை ஆகியவை இத்தகைய அத்து மீறல்களில் வரும்.

31. சர்வதேசச் சட்டத்துக்கும் ஐ.நா. அமைப்புத்திட்டத்துக்கும் ஒத்துவராத, அரசுகளுக்கிடையான வணிக உறவுக்கு முட்டுக்கட்டையிடுகிறதும், மனித உரிமைகள் பற்றிய சர்வ தேசியப் பிரகடனமும், சர்வதேச மனித உரிமை ஆவணங் களும் முழங்கும் மனித உரிமைகள் (அனைவருக்கும்) கிட்டுவதைத் தடை செய்வது, குறிப்பாக, உணவு-உறையுள், மருத்துவ வசதி மற்றும் தேவையான சமூக வசதிகள் முதலிய சுகாதாரத்துக்கும் நல்வாழ்வுக்கும் போதுமான வாழ்க்கைத் தரம் எய்துவதற்கான உரிமையை பாதிக்கின்ற எந்தவித நடவடிக்கையையும் ஒருதலையாக எடுக்கலாகாதென்று இம்மாநாடு அரசுகளை வேண்டுகிறது. அரசியல் கட்டாயங் களுக்கு உணவை ஒரு ஆயுதமாகப் பயன்படுத்தக்கூடாது என்றும் வலியுறுத்துகிறது.

32. மனித உரிமைப் பிரச்சினைகளை அணுகுவதில், நேரிய நோக்கும், உலகளாவிய பார்வையும், 'சிலவற்றை கண்டு கொள்ளாமல் விடுகிற' பாகுபாடின்மையும் முக்கியம் என்பதை இம்மாநாடு வலியுறுத்துகிறது.

33. சர்வதேச மனித உரிமைப் பிரகடனத்திலும், பொருளாதார-சமூக-கலாச்சார உரிமைகள் பற்றிய பன்னாட்டுடன்படிக்கை யிலும், இன்னும் பிற பல பன்னாட்டு ஆவணங்களிலும் கூறப்பட்டிருப்பதுபோல் மனித உரிமைகளையும் அடிப்படை சுதந்திரங்களையும் மதிப்பதை வலுப்படுத்துவதுதான் கல்வியின் நோக்கமாயிருப்பதற்கு உறுதியளிக்க அரசுகள் கடமைப்பட்டுள்ளன என்று இம்மாநாடு உறுதியாய்க் கூறுகிறது. மனித உரிமைக்கல்வியை கல்வித்திட்டத்தில் இணைப்பதன் அவசியத்தை வலியுறுத்தும் இம்மாநாடு அதனைச் செய்யுமாறு அரசுகளையும் வற்புறுத்துகிறது. நாடு களுக்கிடையிலும் பல்வேறு மதங்களுக்கிடையிலும் இனங் களுக்கிடையிலும் புரிதலும் பொறுத்துக்கொள்ளுதலும், சமாதானமும் நட்புறவும் பரவ கல்வி உதவவேண்டும். இதற்கான ஐ.நா. நடவடிக்கைகள் ஊக்குவிக்கப்படவேண்டும். எனவே, மனித உரிமை பற்றிய கல்வியும், கொள்கை-நடைமுறை இரண்டு தளத்திலுமான இது பற்றிய தகவல் களைப் பரப்புதலும், இனம், பால், மொழி, மதம் என்ற எந்த

வேறுபாடு மின்றி மானிடர் யாவருக்கும் மனித உரிமைகள் பேணப்படுவதிலும் மதிக்கப்படுவதிலும் முக்கியப் பங்கு வகிக்கின்றன. தேசிய அளவிலும் சர்வதேசிய அளவிலும் கல்விக் கொள்கைகள் இவற்றைப் பிரதிபலிக்க வேண்டும். ஆனால் இந்நோக்கங்கள் உடனடியாக எய்தப்பட நிதிப் பற்றாக்குறையும் நிறுவன ரீதியான பற்றாக் குறைகளும் தடையாயிருக்கும் என்பதையும் இம்மாநாடு உணர்கிறது.

......

36. குறிப்பாக அதிகாரமுள்ள இடங்களில் இருப்பவருக்கு அறிவுரை கூறும் பொறுப்புமூலமும் மனித உரிமை மீறல் களுக்கு நிவாரணமளிப்பதன்மூலமும் மனித உரிமை குறித்த தகவல் பரப்புதல் மூலமும், மனித உரிமைக்கல்விப் பணி மூலமும் தேசிய நிறுவனங்கள் மனித உரிமைகள் பேணப் படவும் பாதுகாப்புப் பெறவும் ஆற்றிவரும் ஆக்கப்பூர்வமான பணிகளின் முக்கியத்துவத்தை இம்மாநாடு மீண்டும் உறுதிபடக் குறிப்பிடுகிறது.

"தேசிய நிறுவனங்களின் அந்தஸ்து பற்றிய கோட்பாடுகளுக்கு உரிய மதிப்புக்கொடுத்து இம்மாநாடு தேசிய நிறுவனங்கள் நிறுவப் படுவதையும் வலுவூட்டப்படுவதையும ஊக்குவிக்கிறது. தேசிய அளவில் தத்தம் தேவைகளுக்கேற்ப எது தேவையோ அத்தகைய கட்டுமானத்தை அத்தகைய நிறுவனங்களுக்கு ஏற்படுத்த அரசு களுக்கு உரிமை இருப்பதையும் மாநாடு ஒப்புக்கொள்கிறது.

---

## பகுதி 2

(ஆ) சமத்துவம், கண்ணியம், சகிப்புணர்வு

1. இனவாதம், இனப்பாகுபாடு, இனவெறுப்பு முதலான சகிப்பின்மையும் சகிப்பின்மையின் பிற உருவங்களும்

19. சர்வதேச சமுதாயத்தைப் பொறுத்தவரையும் மனித உரிமைத்துறையில் உலகு தழுவிய அளவிலான நிகழ்ச்சித் திட்டத்துக்கும் இனவாதமும் இனப்பாகுபாடும் ஒழிக்கப்பட வேண்டியது முதல் நோக்கமாக அமைய வேண்டுமென இம்மாநாடு கருதுகிறது. அதிலும் குறிப்பாக சமூக வாழ்வின் அம்சமாகவே நிலைநிறுத்தப்பட்டுவிட்ட நிறவெறி போன்ற

அம்சங்களும் தத்துவ அடிப்படையிலான மேலாண்மை இனவழி உயர்வு, தனிப்படுத்தப்படல் (exclusivity) இன வாதத்தின் தற்கால உருவங்கள் வெளிப்பாடுகள் ஆகியவை அழிக்கப்படவேண்டும்.

......

20. எல்லாவித உருவங்களிலும் வெளிப்பாடுகளிலும் தோன்றும் இனவாதம் இன வெறுப்பு, இவை சம்பந்தப்பட்ட சகியாமை ஆகியவற்றைத் தடுத்துப் போராட உடனடி நடவடிக்கை எடுக்குமாறும், இத்துறையில் வலுவான கொள்கைகளை உருவாக்குமாறும் எல்லா அரசாங்கங்களையும் இம்மாநாடு வற்புறுத்துகிறது. தேவைப்பட்டால் இதற்காக தண்டனைக் கான வகையுரைகள் உட்பட தக்க சட்டங்களை இயற்று மாறும், இத்தகைய எதிர்ப்புக்காக தேசிய நிறுவனங்களை ஏற்படுத்துமாறும் வலியுறுத்துகிறது

....

22. சிந்தனை, சுதந்திரம், மனசாட்சி சுதந்திரம், மத சுதந்திரம், கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரம் ஆகியவை ஒவ்வொரு மனிதனுக்கும் உண்டென்பதை ஒப்புக்கொண்டும் தத்தம் சர்வதேசக் கடப்பாடுகள் நிமித்தமும், தத்தம் சட்ட அமைப்பு களுக்குரிய மதிப்பு கொடுத்து, மகளிர்க்கெதிரான பாகு பாட்டுப் பழக்கங்கள், வழிபாட்டிடங்களை தூய்மை கெடுத்தல் முதலியன உள்ளிட்ட மத அல்லது நம்பிக்கை அடிப்படையிலான சகியாமை, அது குறித்த வன்முறை ஆகியவற்றுக்கெதிரான தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள அரசாங்கங்களை இம்மாநாடு வேண்டுகிறது...

23. (குறிப்பிட்ட பிரிவினரை ஒட்டுமொத்தமாகத் தீர்த்துக்கட்டு வதன்மூலம்) 'இனத்தைத் தூய்மைப்படுத்துகிற' வகையான குற்றங்களைச் செய்கிறவர்களும், அத்தகு பாதகச் செயல்களை அனுமதிப்போரும் அந்தந்த நபர்களே அதற்குப் பொறுப் பாக்கப்பட்டு அத்தகைய மனித உரிமை மீறல்களுக்கு விளக்க மளிக்க வேண்டியவராக்கப்படவேண்டும். பன்னாட்டு சமுதாயம் அத்தகைய மீறல்களுக்கு சட்டபூர்வமான பொறுப் பேற்க வேண்டியவர்களை நீதியின் பிடிக்குள் கொண்டுவர அனைத்து முயற்சிகளும் மேற்கொள்ளவேண்டும்.

24. 'இனத்தூய்மைப்படுத்த'லை விரைவாக முடிவுக்கொண்டுவர,

அதை எதிர்த்து தனியாகவும், ஒருவரோடொருவர் சேர்ந்தும் உடனடி நடவடிக்கை எடுக்குமாறு இந்த மாநாடு அரசு களனைத்தையும் கேட்டுக் கொள்கிறது. அருவருப்பூட்டும் இந்த 'இனத்தூய்மைப்படுத்தல்' பழக்கத்துக்கு இரையான மக்கள் பலனளிக்கக் கூடிய, தகுந்த நிவாரணத்துக்கு உரியோர் ஆவார்.

......

2. தேசிய இனவழியான, மத-மொழி சிறுபான்மையினர்

---

26. தேசிய-இனவழியான-மத-மொழி சிறுபான்மையினர் உரிமை பற்றிய பிரகடனத்துக்கு இணங்க அத்தகைய சிறுபான்மை யரின் உரிமைகளைப் பேணவேண்டும், பாதுகாக்க வேண்டும் என்று உலக (நாடுகள்) சமுதாயத்தையும் அரசுகளையும் இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

27. தேவையான இடங்களிலெல்லாம் தத்தம் நாட்டின் அரசியல்-பொருளாதார-சமூக கலாச்சார வாழ்விலும் பொருளாதார முன்னேற்றத்திலும் எல்லாவகையிலும் அத்தகைய சிறு பான்மையினர் முழுப்பங்கேற்க வகை செய்யும் நடவடிக்கை களும் இதில் அடங்க வேண்டும்.

......

31. ஆதிகுடிகள், சமூகவாழ்வின் எல்லா அம்சங்களிலும், குறிப்பாக தாம் சம்பந்தப்பட்ட அம்சங்களில், முழுமை யாகவும் சுதந்திரமாகவும் பங்கெடுக்க அரசுகள் உறுதி செய்யவேண்டுமென்று மாநாடு வேண்டுகிறது.

......

33. எல்லா புலம்பெயர் தொழிலாளர்களின் உரிமைகள், அவர்தம் குடும்பத்தாரின் உரிமைகள் ஆகியவற்றின் பாதுகாப்பினை அரசுகள் உறுதி செய்யவேண்டுமென்று இம்மாநாடு வலியுறுத்துகிறது.

34. புலம்பெயர் தொழிலாளர்களுக்கும் அவர்கள் வசிக்கும் நாட்டின் பிற மக்களுக்கும் அதிகப்படி இணக்கத்தையும் சகிப்புணர்வையும் ஏற்படுத்தக்கூடிய சூழ்நிலையை உருவாக்க வேண்டியதன் முக்கியத்துவம் குறிப்பிடத்

தக்கதென்று இந்த மாநாடு கருதுகிறது.

--

4. குழந்தைகளின் உரிமைகள்

......

47. உலகளாவிய உச்ச நடவடிக்கைத் திட்டத்தின் இலட்சியங்களை அடைவதற்கான நடவடிக்கைகளை வசதிவாய்ப்புகளுக்கு ஏற்ப, உயர்ந்தபட்ச அளவுக்கு, பன்னாட்டுக் கூட்டுறவுடன் மேற்கொள்ளுமாறு எல்லா நாடுகளையும் மாநாடு வலியுறுத்துகிறது. தமது தேசிய நடவடிக்கைத் திட்டத்தில், 'குழந்தைகளின் உரிமைகள் பற்றிய உடன்படிக்கை'யையும் உட்பொதியுமாறு ஒருங்கிணைத்துக் கொள்ளுமாறு இந்த மாநாடு அரசுகளைக் கேட்டுக் கொள்கிறது. இவ்வகை தேசிய நடவடிக்கைத் திட்டங்கள் மூலமும், சர்வதேச முயற்சிகள் மூலமும், தாய்சேய் உயிரிழப்பு விகிதங்களையும் சத்துணவுக் குறைவு, கல்லாமை ஆகியவற்றின் விகிதங்களையும் குறைக்கவும் பாதுகாப்பான குடிநீர், அடிப்படைக்கல்வி ஆகியவை கிடைக்கச் செய்யவும் குறிப்பிடத்தக்க முன் முக்கியத்துவம் தரப்படவேண்டும். தேவை நேரும் இடங்களிலெல்லாம் தேசிய நடவடிக்கைத் திட்டங்கள் இயற்கைப் பேராபத்துகளிலிருந்தும், ஆயுதப் போராட்டங்களிலிருந்தும் ஏற்படும் பேரழிவூட்டும் நெருக்கடிகளுக்கெதிராகப் போரிடவும் இவற்றுக்கிணையாக எல்லை மீறிய வறுமையில் வாடும் குழந்தைகளின் துயரங்களுக்கெதிராகப் போரிடவும் வகை செய்யவேண்டும்.

48. சர்வதேசக் கூட்டுறவுடன் கடுமையான சிரம சூழ்நிலைகளுக்காளாகி யிருக்கிற குழந்கைளின் மோசமான பிரச்சினைகளைக் கவனிக்க வேண்டுமென எல்லா அரசுகளையும் இம்மாநாடு வலியுறுத்துகிறது. குழந்தைகளுக்கெதிரான சுரண்டல், குழந்தைகளைத் தவறாக நடத்துதல், ஆகியவற்றுக்கெதிராக வலுவாகப் போராட வேண்டும். அவற்றின் அடிப்படைக் காரணங்களை ஆராயவேண்டும். பெண் சிசுக்கொலை, குழந்தைத் தொழிலாளர் கொடுமை, குழந்தைகளை விற்றல், உடலுறுப்புகளை விற்றல், குழந்நைகளை விபசாரத்தில் ஈடுபடுத்தல், ஆபாச நூல்களுக்குப் பயன்படுத்தல், போன்ற பிற பாலியல் கொடுமைகளுக்கெதிராக பயனுள்ள நடவடிக்கைகள் தேவை.

49. பெண் குழந்தைகளின் மனித உரிமைகளைப் பேணுவதையும் வெற்றிகரமாகப் பாதுகாப்பதையும் உறுதி செய்வதற்காக ஐ.நா. மற்றும் அதன் சிறப்பமைப்புகள் எடுக்கும் நடவடிக்கைகள் அனைத்தையும் இந்த மாநாடு ஆதரிக்கிறது. பெண் குழந்தைகளுக்கெதிரான பாகுபாடுகளுக்கு ஆதரவாகவும் அவர்களுக்கு இன்னல் விளைவிப்பதாகவும் உள்ள சட்டங்களையும் விதிமுறைகளையும் நீக்குமாறும் பழக்கவழக்கங்களை அகற்றுமாறும் இம்மாநாடு எல்லா அரசுகளையும் வற்புறுத்துகிறது.

50. ஆயுதப் போர்களின்போது குழந்தைகள் பாதுகாப்பை வலுப்படுத்தும் வழிகளைப் பற்றி ஆராய ஐ.நா. பொதுச் செயலர் ஒரு ஆய்வினைத் துவக்க வேண்டும் என்ற கருத்தினை இம்மாநாடு வலுவாக ஆதரிக்கிறது. போர்ப் பகுதிகளில் குழந்தைகளுக்கு உதவி கிட்டுமாறு செய்யவும், பாதுகாப்பளிக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்; மனித நேய நெறிமுறைகள் நடைமுறைப்படுத்தப் படவேண்டும். போர்க் கருவிகளை, அதுவும் ஆட்கொல்லி கண்ணிவெடிகளை, சகட்டு மேனிக்குப் பயன்படுத்துவதிலிருந்து குழந்தைகளைப் பாதுகாக்கும் நடவடிக்கைகளும் அவற்றில் இருக்கவேண்டும். போரினால் மனமுறிவு ஏற்பட்ட குழந்தைகளின் மறுவாழ்வுக்கும், கவனிப்புக்குமான தேவைகள் விரைந்து கவனிக்கப்பட வேண்டும். படைகளுக்கு ஆள்சேர்ப்பதில் குறைந்த பட்ச வயதினை உயர்த்துவது பற்றி ஆராயுமாறு குழந்தைகள் உரிமைகள் பற்றிய குழுவினை இந்த மாநாடு வேண்டுகிறது.

---

5. சித்திரவதையிலிருந்து விடுதலை

---

57. எனவே, சித்திரவதை செய்யும் பழக்கத்துக்கு உடனடியாக முடிவுகட்டும்படியும், மனித உரிமைகள் பற்றிய சர்வதேசப் பிரகடனத்தையும் இதர ஆவணங்களையும் செயல்படுத்துவதன் மூலமும், தேவைப்படுமிடங்களில், இப்போதுள்ள ஏற்பாடுகளை வலுப்படுத்துவதன்மூலமும் இந்தத் தீமையை காலகாலத்துக்குமாக ஒழித்துக்கட்டுமாறும் எல்லா அரசுகளையும் இம்மாநாடு வற்புறுத்துகிறது.

–

62. ஐ.நா. பொதுச்சபை 'காணாமற்போக்கடிக்கப்பட்ட அனைவரது பாதுகாப்புக்குமான' பிரகடனத்தை ஏற்றுக்கொண்டதை வரவேற்கும் இம்மாநாடு 'கட்டாயமாய்க் காணாமற் போகவைக்கும்' செயல்களைப் புரிவோரின் நடவடிக்கைகளை தடுக்கவும், நிறுத்தவும், தண்டிக்கவும் எல்லா அரசுகளும் பலனுள்ள நிர்வாக நடவடிக்கைகளும் சட்டமியற்றல்களும், நீதித்துறை நடவடிக்கைகளும் எடுக்கவேண்டுமெனவும் கோருகிறது. எந்தச் சூழ்நிலையிலும், அவர்களது எல்லைக்குட் பட்ட மண்ணில் அத்தகைய காணாமல்போக வைத்தல் நிகழ்ந்திருக்கலாமென்று நம்புவதற்குக் காரணமிருந்தால், அது பற்றி விசாரணை நடத்துவதும், அத்தகைய குற்றச்சாட்டு ஏதும் நிரூபணமானால் குற்றவாளிகள் மீது வழக்குத் தொடர்வதும் எல்லா அரசுகளுக்கும் உள்ள கடமை என்று இம்மாநாடு மீண்டும் உறுதியிட்டுரைக்கிறது.

6. ஊனமுற்றோர் உரிமைகள்

......

63. எல்லா மனித உரிமைகளும், அடிப்படை சுதந்திரங்களும் உலகளாவியவை. ஆகவே எந்த விலக்குமின்றி ஊனமுற் றோர்க்கும் அவை உரியவை என்று இம்மாநாடு மீண்டும் உறுதியிட்டுரைக்கிறது. பிறப்பொக்கும் எல்லா உயிருக்கும். நல்வாழ்வுக்கும், கல்விக்கும் வேலைக்கும், தற்சார்ந்த வாழ்வுக்கும், சமூகத்தின் சகல துறைகளிலும் துடிப் பாகப் பங்காற்றவும் அனைவருக்கும் சமவுரிமை உண்டு. எனவே ஊனமுற்ற ஒருவருக்கெதிரான நேரடியான பாகுபாடும் சரி, எதிர்மறையான ஊறுவிளைக்கும் வித்தியாசப் படுத்தலும் சரி அவரது உரிமையை மீறுவதாகும். இந்தப் பத்தியில் கூறும் உரிமைகளும் இன்னபிற உரிமைகளும் கிட்டுவதை உறுதிசெய்யும் வகையில், தேவைப்படுமிடங்களிலெல்லாம் சட்டங்களில் தக்க ஏற்பாடுகள் செய்தோ அனுசரணைகளை ஏற்படுத்தியோ வழிசெய்யுமாறு அரசாங்கங்களை இந்த மாநாடு வேண்டிக்கொள்கின்றது.

64. ஊனமுற்றோருக்கு எங்கும் இடமுண்டு. பொருள் ரீதியா கவோ, நிதிப்பற்றாக்குறையோ, சமூக அல்லது மனவியல் பூர்வமானதோ-சமூக நிர்ணயிப்புக்குட்பட்ட எவ்வகைத் தடைகளிருப்பினும், அவர்கள் சமூகத்தில் முழுமையாகப்

பங்கெடுப்பதைக் குறைக்கவோ குலைக்கவோ செய்யும் தடைகளைத் தகர்த்து அவர்களுக்கும் சம வாய்ப்புத்தரப்பட வேண்டும்.

7. மனித உரிமைக் கல்வி

78. சமுதாயங்களிடையே நிலையானதும் நல்லிணக்கம் கொண்டதுமான உறவுகளை எய்தவும்-பேணவும், பரஸ்பர புரிந்துகொள்ளலையும் சகிப்புணர்வையும், அமைதியையும் ஏற்படுத்தவும் மனித உரிமைக்கல்வியும் மனித உரிமை பற்றிய பயிற்சியும், அதுசார்ந்த பொதுத்தகவல் அமைப்பும் அவசியத்தேவைகளென்று இம்மாநாடு கருதுகிறது.

79. அரசுகள் எழுத்தறிவின்மையை ஒழிக்கப்பாடுபடவேண்டும். மனித ஆளுமையின் முழுமேம்பாட்டை நோக்கியும், மனித உரிமைகள் அடிப்படை சுதந்திரங்கள் ஆகியவை மீதான மரியாதையை வலுப்படுமாறும் கல்வியை வழிப்படுத்த வேண்டும். பள்ளிகள் கல்லூரிகள் முதலானவற்றிலும் முறை சாராக் கல்வியிலும் மனித உரிமைகள், மனிதநேயச் சட்டங்கள், மக்களாட்சி, சட்டத்தின் நேரிய ஆட்சி ஆகியவற்றை பாடத்திட்டத்தில் சேர்க்குமாறு எல்லாக் கல்வி நிறுவனங்களையும் அரசுகளையும் இம்மாநாடு வேண்டிக் கொள்கிறது.

80. மனித உரிமைகள் மீதான கடப்பாடு உலகம் முழுதிற்கும் இருக்கிறது. அதனை வலுப்படுத்தும் வகையில் விழிப்பையும் பொதுஅறிவையும் மக்களிடம் ஏற்படுத்த வேண்டும். அதற்காக, சர்வதேச அளவிலும் உள்நாட்டிலும் உருவாக்கப்பட்டுள்ள ஆவணங்களில் கண்டுள்ளபடியாக, மக்களாட்சி சமாதானம்-மேம்பாடும் சமூக நீதியும் போன்றவை மனித உரிமைக் கல்வியில் இடம்பெறவேண்டும்.

81. ஐ.நா. கல்வி, அறிவியல் மற்றும் பண்பாட்டுக் கழகம் (யுனெஸ்கோ) ஏற்பாடு செய்த மனித உரிமையும் மக்களாட்சியும் பற்றிய கல்விக்கான பன்னாட்டு மாநாடு 1933 மார்ச் திங்கள் ஏற்றுக் கொண்ட மனித உரிமைக்கும் மக்களாட்சிக்குமான கல்வி குறித்த உலக நடவடிக்கைத் திட்டத்தையும் பிற மனித உரிமை ஆவணங்களையும் கருத்திற் கொண்டு இம்மாநாடு அரசுகளை மகளிரின் மனித உரிமைத் தேவைகளையும் குறிப்பாக மனதில் கொண்டு உயர்ந்த பட்சம் பரவலான மனித உரிமைக்கல்விக்கும், பொதுத்தகவல் பரிமாற்றத்துக்கும் உறுதியளிக்கக்கூடிய குறிப்பான

திட்டங்களையும் நடைமுறைக் கொள்கைகளையும் தீட்டுமாறு கேட்டுக் கொள்கிறது.

82. பன்னாட்டு அமைப்புகள், தேசிய நிறுவனங்கள், அரசுசாரா அமைப்புகள் ஆகியவற்றின் உதவியுடன், அரசுகள் மனித உரிமைகள் பற்றியும் பரஸ்பர சகிப்புத் தன்மையையும் பற்றிய விழிப்புணர்வை வளர்க்க வேண்டும். ஐ.நா. நடத்திய மனித உரிமைகள் பற்றிய உலகளாவிய பொதுத்தகவல் பிரசாரத்தை வலுப்படுத்த வேண்டியதன் முக்கியத்துவத்தை இம்மாநாடு வலியுறுத்துகிறது. அரசுகள் மனித உரிமைக் கல்வியை ஆரம்பிக்க வேண்டும், ஆதரவளிக்க வேண்டும். இத்துறையில் பொதுத்தகவல் பரிமாற்றத்துக்கும் பயனுள்ள வகையில் ஏற்பாடுகள் செய்யவேண்டும். மனித உரிமை தொடர்பான கல்விக்கும் பயிற்சிக்கும் அரசுகள் எந்த உதவி கேட்பினும் ஐ.நா.வின் அறிவுரைப் பணிக்குழுக்களும், தொழில் நுட்ப உதவித் திட்டங்களும் உடனடியாக உதவ சக்தியுள்ளவை யாக இருக்க வேண்டும். சர்வதேச மனித உரிமை ஆவணங் களிலும் மனித நேயச் சட்டங்களிலும் குறிப்பிட்டுள்ள தர நிர்ணயிப்புகள், இராணுவம், சட்டத்தை நிறைவேற்றும் அதிகார அமைப்புகள், காவல்துறை, சுகாதாரத்துறை போன்ற விசேஷ அமைப்புகளில் அவற்றை செயல்படுத்தும் தனிமுறைகள் பற்றிய கல்வி, பயிற்சித் தேவைகளிலும் ஐ.நா.வின் மேற்சொன்ன அமைப்புகளின் உடனடி உதவி கிட்டவேண்டும். இத்தகைய கல்வி நடவடிக்கைகளை வளர்க்கவும், ஊக்குவிக்கவும், மையப்படுத்தவுமான நோக்கத்தில் 'ஐ.நா. மனித உரிமைக்கல்வியின் பத்தாண்டு' என்ற ஒன்றைப் பிரகடனப் படுத்துவது பற்றியும் சிந்திக்க வேண்டும்.

# 1

# இந்திய அரசமைப்பில் பொறிக்கப்பட்ட மனித உரிமைகள்

அந்நியத் தளையிலிருந்து விடுபட நடந்த போராட்டத்தின்போது இந்திய மன்னர்களுக்கு எதிரான போராட்டமும் அதில் அடங்கி யிருந்தது. அப்போது இந்திய மக்கள் விடுதலை பெற்ற இந்தியா பற்றி சில தீர்க்க தரிசனப் பார்வைகள் கொண்டிருந்தனர். போராட் டத்தை முன்னின்று, நடத்திய இந்திய தேசிய காங்கிரசின் தீர்மானங் களிலும், நடவடிக்கைகளிலும் பல்வேறு நிகழ்ச்சித் திட்டங்களிலும் அந்த தரிசனம் தன்னை பளிரென வெளிப்படுத்தியது. வயதுற்றோர் வாக்குரிமையின் அடிப்படையில் மக்காளாட்சியும் மதச்சார் பின்மையும் மிளிரும் அரசியலமைப்பைப் படைப்பது, சமத்துவம்-சமூகநீதி ஆகிய தத்துவங்களின் அடிப்படையில் இந்தியப் பொருளா தாரத்தையும் சமூகத்தையையும் புதுப்பிப்பது, இந்தியப் பண்பாட்டின் பன்முகத் தன்மையையும் பிரிவுகளையும் அங்கீகரிப்பது-அவற்றில் பெருமைகொள்வது என்ற வீறார்ந்த முனைப்புகள் அந்தக் கண்ணோட்டத்தில் காணப்பட்டன. இந்திய சமூகத்தை நோயாய்ப் பீடித்திருந்த பல பழமைசார் தீமைகளிலிருந்து இந்தியா விடுபடு வதற்காக பத்தொன்பதாம் நூற்றாண்டில் துவக்கப்பட்ட சமூக சீர்திருத்த இயக்கங்களின் வளமான மரபுகளை அது ஸ்வீகரித்தது. துவக்க முதலே குடியுரிமை (சிவில் ரைட்ஸ்)க்கான போராட்டம் இந்திய விடுதலைப் போரில் ஒன்றியதோர் அங்கமாக இருந்தது. அவ்விடுதலை இயக்கம் சர்வதேசக் கண்ணோட்டத்தையும் வளர்த்தது. மக்களாட்சி, சுதந்திரம் சமூக முன்னேற்றம் ஆகியவற் றுக்கான உலகளாவிய போராட்டத்தின் ஒரு பகுதியாகவே தனது போரையும் அவ்வியக்கம் உருவகித்தது. இந்தத் தொலைநோக்கு காரணமாகவே இந்திய விடுதலை இயக்கம் பிறநாட்டு விடுதலை இயக்கங்களுக்குத் தன் ஆதரவுக்கரத்தை நீட்டியது. அந்நாடுகளின்

*மக்களாட்சி சக்திகளோடும் சமூக முன்னேற்ற சக்திகளுடனும் தன்னை இணைத்துக் கொண்டது. இந்திய விடுதலைக்குப் பாடுபடும் போதே தனது பரிவையும் ஆதரவையும் இரண்டாம் உலகப் போருக்கு முந்தைய காலகட்டத்திலும் அப்போரின்போதும் பாசிச ஆக்கிரமிப்புக்கும் காட்டுமிராண்டித்தனத்துக்கு இரையாகிப் போனவர்களுக்கு வழங்கியது. 1946 டிசம்பரில், இந்தியா விடுதலை பெறாதபோதே, தன் பணியைத் துவக்கி 1949 நவம்பர் திங்கள் 26ம் நாள் அதனை நிறைவு செய்த இந்திய அரசமைப்பு அவையினால் படைத்தளிக்கப்பட்ட இந்திய அரசமைப்புச்சட்டத்தில் விடுதலைப்போரின் பெரிய லட்சியங்கள் பிரதிபலித்தன.*

*அரசமைப்புச்சட்ட முகப்புரை, அடிப்படை உரிமைகள் பற்றி முழங்கும் பாகம் 3, நெறிகாட்டும் கோட்பாடுகள் பற்றிய பாகம் 4 நமது அரசமைப்பின் உட்கரு என்று போற்றப்படுகின்ற பகுதிகள் மனிதஉரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனம், குடியுரிமையும் அரசியலுரிமையும் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கைகள், பொருளாதார சமூக கலாச்சார பன்னாட்டு உடன்படிக்கைகள் ஆகியவற்றின் அடிப்படைக் கோட்பாடுகளை பிரதிபலிக்கின்றன. அந்த முகப்புரை, பாகம் 3இன் சில பகுதிகள், பாகம் 4, அடிப்படைக் கடமைகள் பற்றிப் பேசும் பாகம் 4அ, பிரிவு 226, 325, 326 ஆகியவை இங்கு தரப்படுகின்றன:*

---

# 1

## *இந்திய அரசமைப்புச்சட்டம்*

### *முகப்புரை*

இந்திய மக்களாகிய நாம், இந்தியாவை இறையாண்மை சார்ந்தவோர் சமதர்ம, மதசார்பற்ற மக்களாட்சிக் குடியரசாக உருவாக்கவும், அதன் அனைத்துக் குடிமக்களுக்கும் சமூகநீதி, பொருளாதார நீதி, அரசியல் நீதி ஆகியவையும் சிந்தனை, சிந்தனை வெளிப்பாடு, நம்பிக்கை, பற்றார்வம், வழிபாடு ஆகியவற்றில் சுதந்திரமும், அந்தஸ்திலும் வாய்ப்பிலும் சமத்துவமும் கிட்டுமாறு செய்யவும்,

தனி மனித கண்ணியத்துக்கும் நாட்டின் ஒருமைப்பாடு ஒற்றுமை ஆகியவற்றுக்கும் உறுதியளிக்கும் சகோதரத்துவத்தை அவர்களிடையே வளர்க்கவும்,

மனப்பூர்வமாக உறுதியேற்று
1949 நவம்பர் 26ம் நாளான இன்று
நமது அரசமைப்பு அவையில் ஈங்கிதனால் இவ்வரசமைப்புச் சட்டத்தை ஏற்று, சட்டமாக்கி நமக்குநாமே வழங்கிக் கொள்கிறோம்.

## II

## அடிப்படை உரிமைகள்

பொது

12. வரையறை—இந்த பாகத்தில் "அரசு" (State) எனும் தொடர், பின்னணி வேறுபொருள் கற்பித்தாலன்றி, இந்திய அரசாங்கம், இந்திய நாடாளுமன்றம், ஒவ்வொரு மாநிலத்தின் அரசு, மாநில சட்டமியற்றவை, இந்திய நிலப்பரப்புக்குள் அமைந்த அல்லது இந்திய அரசு கட்டுப்பாட்டில் உள்ள உள்ளாட்சி அமைப்புகள் மற்றும் ஏனைய அமைப்புகள் ஆகியவைகளை உள்ளடக்கிய தாகும்.

**13. அடிப்படை உரிமைகளுக்கு முரணான சட்டங்களும் அடிப்படை உரிமைகளை அவமதிக்கிற சட்டங்களும்—**

(1) இவ்வரசமைப்பு துவங்குவதற்கு முந்தைய பொழுது வரை நடைமுறையிலிருந்த எல்லா சட்டங்களும் இந்தப் பாகத்தில் கூறப்பட்டுள்ளவைகளுக்கு எந்த அளவு முரணாக இருக் கின்றனவோ, அந்த முரண் அளவுக்கு செல்லத்தகாதவை ஆகிவிடும்.

(2) இந்தப் பகுதியினால் அளிக்கப்படும் உரிமைகளைச் சுருக்கவோ எடுத்துவிடவோ கூடிய சட்டமெதையும் அரசு உருவாக்காது; இந்த உட்பிரிவினை மீறுவதாக இயற்றப்படும் சட்டமெதுவும் அந்த மீறல் அளவுக்கு செல்லத்தகாத தாகிவிடும்.

(3) இந்தப் பிரிவில், பின்னணி வேறு பொருள் தந்தாலன்றி—

அ. "சட்டம்" என்பதில் அரசாணை, ஆணை, உட்சட்டம் விதி, நெறிமுறை, அறிவிக்கை, இந்திய நிலப்பரப்பில் சட்டத்தின் வலுக்கொண்டு விளங்கும் மரபு, வழக்காறு, ஆகியவை அடங்கும்.

ஆ. "நடைமுறையில் உள்ள சட்டங்கள்" என்பது இந்திய நிலப்பரப்பில் இவ்வரசமைப்பு ஆரம்பிக்குமுன் சட்ட

அவைகளாலோ அல்லது தகுதி பெற்ற அமைப்பினாலோ நிறைவேற்றப்பட்ட, இயற்றப்பட்டு நீக்கப்படாத சட்டங்களைக் குறிக்கும்.

**சமத்துவ உரிமை**

14. சட்டத்தின் பார்வையில் சமத்துவம்: இந்திய நிலப்பரப்பில் சட்டத்தின் பார்வையில் சமத்துவத்தையோ அல்லது சமமான சட்டப்பாதுகாப்பையோ அரசு எவருக்கும் மறுக்காது.

15. **மதம், இனம், ஜாதி, பால் அல்லது பிறப்பிடத்தின் அடிப்படையிலான ஓரவஞ்சனையைத் தடை செய்தல்:**

(1). மதம், இனம், ஜாதி, பால், பிறந்தஇடம் அல்லது இவற்றில் ஏதாவதொன்றின் காரணமாக மட்டுமே, அரசு குடிமக்களில் எவரையும் ஓரவஞ்சனை செய்யாது.

(2). மதம், இனம், ஜாதி, பால், பிறந்த இடம் அல்லது இவற்றில் எதாவது ஒன்றின் அடிப்படையில் மட்டுமே, கீழ்க்கண்ட விஷயங்களில், குடிமக்களில் எவரும் எந்தவிதமான குறைபாட்டுக்கும், கடப்பாட்டுக்கும் கட்டுப்பாட்டுக்கும், நிபந்தனைக்கும் ஆளாக்கப்படமாட்டார்:

அ. கடைகள், பொது உணவகங்கள், தங்கும் விடுதிகள், பொதுக் கேளிக்கை மன்றங்களில் நுழைதல்.

ஆ. பராமரிப்புச் செலவு முழுவதையுமோ, அதில் ஒரு பகுதியையோ அரசு நிதியிலிருந்து பெறும் அல்லது பொதுமக்கள் பயன்படுத்த அர்ப்பணிக்கப்பட்டிருக்கும், கிணறுகள், குளங்கள், குளிக்கும் துறைகள், சாலைகள் மற்றும் பொது இடங்களைப் பயன்படுத்துதல்.

3. பெண்களுக்காகவும் குழந்தைகளுக்காகவும் அரசு சிறப்பு ஏற்பாடுகள் செய்வதை, இந்தப் பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள எதுவும் தடை செய்யாது.

4. சமூக ரீதியாகவோ கல்வி ரீதியாகவோ பிற்படுத்தப்பட்ட குடிமக்களின் அல்லது அட்டவணை சாதியினர்/பழங்குடியினரின் முன்னேற்றத்துக்காக அரசு சிறப்பு ஏற்பாடுகள் செய்வதை, இந்தப் பிரிவின் எந்தப் பகுதியுமோ அல்லது பிரிவு 29இன் உட்பிரிவு 2இன் பகுதியோ தடைசெய்யாது.

16. பொதுப்பணி பெறுவதில் சம வாய்ப்பு

1. அரசின் எந்த அலுவலகத்துக்கும் நியமிக்கப்படுவது மற்றும்

பணிக்கு அமர்த்தப்படுவதும், ஆகிய விஷயங்களில் குடிமக்கள் அனைவருக்கும் சம வாய்ப்பு இருக்கும்.

2. மதம், இனம், ஜாதி, பால், வம்சாவழி, பிறந்த இடம், வாழுமிடம் அல்லது இவற்றில் ஏதாவது ஒன்றின் காரணமாக மட்டுமே, குடிமக்களில் எவரும் அரசுப் பதவிக்கோ பணிக்கோ தகுதியற்றவராக மாட்டார், ஓரவஞ்சனை புரியப்படமாட்டார்.

3. ஒரு மாநில அல்லது ஒன்றிய ஆட்சிப் பகுதியினுள், அரசு அல்லது உள்ளாட்சி அல்லது வேறு எந்த அதிகார அமைப்பின் ஒரு பிரிவு அல்லது பிரிவுகளின் பணிக்கு அமர்த்தப்படுவதற்கோ அல்லது அலுவலகத்துக்கு நியமிக்கப் படுவதற்கோ, அப்படி அமர்த்தப்படுவது அல்லது நியமிக்கப் படுவதற்கு முன் அந்த மாநிலத்தில் அல்லது ஒன்றிய நேரடி ஆட்சிப் பகுதியில் வாழ்ந்திருக்க வேண்டும் என்று நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் நிபந்தனை விதிப்பதை இந்தப்பிரிவில் குறிப்பிட்டுள்ள எதுவும் தடை செய்யாது.

4. அரசின் கருத்துப்படி, அரசுப் பணிகளில் போதுமான அளவு பிரதிநிதித்துவம் பெறாத பின்தங்கிய வகுப்புக் குடிமக்களுக்கு ஆதரவாக நியமனத்துக்கோ பதவிக்கோ அரசு இட ஒதுக்கீடு செய்வதை இந்தப் பிரிவில் கூறப்பட்டுள்ள எதுவும் தடை செய்யாது.

5. ஏதாவதொரு மத அல்லது அமைப்பின் விஷயங்களோடு தொடர்புடைய ஒரு பதவியை வகிப்பவரோ அல்லது அதன் நிர்வாகக் குழுவின் உறுப்பினரோ, அந்த மதத்தைப் பின்பற்று பவராகவோ அல்லது கிளை மதத்தைச் சார்ந்தவராகவோ இருக்க வேண்டும் என்று நிபந்தனை விதிக்கும் எந்தச் சட்டத்தின் செயல்பாட்டையும், இந்தப் பிரிவில் கூறப்பட்ட எதுவும் தடை செய்யாது.

**17.** **தீண்டாமை ஒழிப்பு:** "தீண்டாமை" ஒழிக்கப்படுகிறது. எந்த வடிவிலும் அதைச் செயல்படுத்துவது தடுக்கப்படுகிறது; தீண்டாமையிலிருந்து எழும் எந்தத் தகுதிகுறைவையும் செயல்படுத்துவது, சட்டப்படி தண்டனைக்குரிய குற்றமாகும்.

**18.** **பட்டங்கள் ஒழிப்பு:**

1. இராணுவம் மற்றும் கல்விச் சிறப்பு பற்றியது தவிர வேறு எந்தப் பட்டத்தையும் அரசு வழங்காது.

2. எந்த இந்தியக் குடிமகனும் எந்த வெளிநாட்டிலிருந்தும் எந்தப் பட்டத்தையும் ஏற்கக் கூடாது.
3. இந்தியக் குடிமகனாக இல்லாத எவரும், அரசின் கீழ், வரும்படியுள்ள அல்லது நம்பிக்கைக்குரிய பதவி வகுக்கும் காலத்தில், குடியரசுத்தலைவரின் இசைவின்றி, எந்த வெளிநாட்டிலிருந்தும் எந்தப் பட்டத்தையும் ஏற்கக் கூடாது.
4. அரசின்கீழ், வரும்படியுள்ள அல்லது நம்பிக்கைக்குரிய பதவி வகிக்கும் எவரும், குடியரசுத்தலைவரின் இசைவின்றி, எந்த வெளிநாட்டிலிருந்தும், அன்பளிப்போ ஊதியமோ அல்லது பதவியோ எந்த வடிவத்திலும் ஏற்கக் கூடாது.

சுதந்திரங்களுக்கான உரிமை

**19.** பேச்சுரிமை முதலிய சில உரிமைகளைப் பாதுகாத்தல்

1. குடிமக்கள் அனைவருக்கும் கீழ்க்கண்ட உரிமைகள் இருக்கும்
   அ. பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரம்
   ஆ. அமைதியாக, ஆயுதங்களின்றிக் கூடுதல்
   இ. சங்கங்களும் கழகங்களும் அமைத்தல்
   ஈ. இந்திய நிலப்பரப்பெங்கும் சுதந்திரமாகப் போய் வருதல்
   உ. இந்திய நிலப்பரப்பில் எங்கும் குடிபுகுந்து வாழுதல், மேலும்
   எ. எந்தத் தொழிலையும் செய்தல், எந்த வேலை, வர்த்தகம், வியாபாரத்தையும் நடத்துதல்.
2. உட்பிரிவு (1)இன் உள்உட்பிரிவு (அ)வில் குறிப்பிட்ட எதுவும், அந்த உள்உட்பிரிவு வழங்கும் உரிமையைச் செயல் படுத்துவதில், இந்திய இறையாண்மை மற்றும் ஒருமைப்பாடு, அரசின் பாதுகாப்பு அந்நிய நாடுகளுடன் நட்புறவு, பொது ஒழுங்கு, நாகரிகம், அறநெறி, நீதிமன்ற அவமதிப்பு, அவதூறு, குற்றத்தைத் தூண்டுவது ஆகியவற்றைக் கருதி நியாயமான கட்டுப்பாடுகளை விதிப்பதில் ஏற்கெனவே இருக்கும் சட்டங்கள் செயல்படுவதைப் பாதிக்காது; புதிய சட்டம் இயற்றுவதற்கான அரசின் அதிகாரத்தைத் தடைசெய்யாது.
3. மேற்கண்ட உட்பிரிவின் உள்உட்பிரிவு (ஆ)வில் கூறப்பட்ட எதுவும், அந்த உட்பிரிவு வழங்கும் உரிமையைச் செயல் படுத்துவதில், இந்திய இறையாண்மை மற்றும் ஒருமைப்பாடு அல்லது பொது ஒழுங்கு கருதி, நியாயமான கட்டுப்பாடுகளை விதிப்பதில், ஏற்கெனவே இருக்கும் சட்டங்கள் செயல் படுவதைப் பாதிக்காது; புதிய சட்டம் இயற்றுவதற்கான

அரசின் அதிகாரத்தைத் தடை செய்யாது.

4. மேற்கண்ட உட்பிரிவின் உள்உட்பிரிவு (இ)இல் கூறப்பட்ட எதுவும், அந்த உள்உட்பிரிவு வழங்கும் உரிமையை செயல் படுத்துவதில், இந்திய இறையாண்மை மற்றும் ஒருமைப்பாடு, பொது ஒழுங்கு, அறநெறி ஆகியவற்றுக்காக நியாயமான கட்டுப்பாடுகளை விதிப்பதில் ஏற்கெனவே இருக்கும் சட்டங்கள் செயல்படுவதையோ, புதிய சட்டம் இயற்று வதற்கான அரசின் அதிகாரத்தையோ, பாதிக்காது.

5. மேற்கண்ட உட்பிரிவின் உள்உட்பிரிவுகள் (ஈ)(உ) ஆகியவற்றில் கூறப்பட்ட எதுவும், அந்தஉள் உட்பிரிவுகள் வழங்கும் உரிமை களைச் செயல்படுத்துவதில், பொதுமக்கள் நலன் கருதியோ, ஏதாவதொரு பழங்குடியின் நலன் காக்கவோ, நியாயமான கட்டுப்பாடுகளை விதிப்பதில், ஏற்கெனவே இருக்கும் சட்டங்கள் செயல்படுவதைப் பாதிக்காது. புதிய சட்டம் இயற்றுவதற்கான அரசின் அதிகாரத்தைத் தடைசெய்யாது.

6. மேற்கண்ட உட்பிரிவின் உள் உட்பிரிவு (எ)இல் கூறப்பட்ட எதுவும், அந்த உள்உட்பிரிவு வழங்கும் உரிமைகளைச் செயல்படுத்துவதில், பொதுநலன் கருதி நியாயமான கட்டுப்பாடுகளை விதிப்பதில், ஏற்கெனவே இருக்கும் சட்டங்கள் செயல்படுவதைப் பாதிக்காது, புதிய சட்டங்கள் இயற்றுவதற்கான அரசின் அதிகாரத்தைத் தடைசெய்யாது. குறிப்பாக, மேற்கண்ட உள்உட்பிரிவில் கூறப்பட்ட எதுவும், கீழ்க்கண்ட விஷயங்கள் தொடர்பாக ஏற்கனவே இருக்கும் சட்டங்கள் செயல்படுவதைப் பாதிக்காது மற்றும் புதிய சட்டங்கள் இயற்றுவதற்கான அரசின் உரிமையைத் தடைசெய்யாது.

i. எந்தத் தொழிலையும் மேற்கொள்வதற்கும், வேலை வர்த்தகம், வியாபாரத்தையும் நடத்துவதற்குத் தேவையான தொழில் மற்றும் தொழில் நுட்பத் தகுதிகள்.

ii. அரசோ, அரசுடமையான அல்லது அரசுக்குக் கட்டுப் பட்ட நிறுவனமோ, குடிமக்களை முழுமையாகவோ ஓரள வுக்கோ விலக்கி வைத்தோ அல்லது வேறுவிதமாகவோ எந்தவிதமான வர்த்தகம், தொழில அல்லது பணியை மேற்கொள்ளுதல்.

**20. குற்றங்களுக்குத் தண்டனை அளிப்பது பற்றிய பாதுகாப்பு**

1. குற்றம் என்று கருதப்படும் செயல் செய்யப்பட்டபோது

நடைமுறையில் இருந்த சட்டத்தை மீறியதைத் தவிர வேறு எந்தக் குற்றத்துக்காகவும் எவரும் தண்டனையளிக்கப்பட மாட்டார்; குற்றம் புரியப்பட்டபோது நடைமுறையிலிருந்த சட்டத்தால் விதிக்கப்பட்டிருக்க வேண்டிய அதிகபட்ச தண்டனையைவிடக் கூடுதல் தண்டனைக்கு எவரும் ஆளாக்கப்படமாட்டார்.

2. ஒரே குற்றத்துக்காக, எவரும் ஒரு முறைக்கு மேல் வழக்குத் தொடரப்பட்டுத் தண்டிக்கப்படமாட்டார்.

3. எந்தக் குற்றத்துக்காகவும் குற்றஞ்சாட்டப்பட்ட எவரும் தமக் கெதிராகச் சாட்சியம் வழங்குமாறு வற்புறுத்தப்படமாட்டார்.

**21.** உயிர் மற்றும் தனிநபர் சுதந்திரப்பாதுகாப்பு— சட்டத்தில் ஏற்படுத்தப் பட்ட நடைமுறைப்படி அன்றி எவரது உயிரோ, தனிநபர் சுதந்திரமோ பறிக்கப்பட மாட்டாது.

**22.** சில விஷயங்களில் கைது செய்யப்படல் மற்றும் காவலில் வைக்கப்படுதல் பற்றிய பாதுகாப்பு—

1. கைது செய்யப்பட்ட எவரும், இயன்ற அளவு விரைவில் அதற்கான காரணங்களை அறிவிக்கப்படாமல் காவலில் வைக்கப்பட மாட்டார், மற்றும் தாம் விரும்பும் வழக் குரைஞரைக் கலந்தாலோசிப்பதற்கும் அவரால் பாதுகாக்கப் படுவதற்குமான உரிமைகள் மறுக்கப்படமாட்டா.

2. கைது செய்யப்பட்ட எவரும், அருகிலுள்ள குற்றவியல் நீதிபதி முன்பு, கைது செய்யப்பட்ட இடத்திலிருந்து நீதிமன்றத்துக்கான பயண நேரம் நீங்கலாக இருபத்தி நான்கு மணி நேரத்துக்குள் ஆஜர்படுத்தப்படுவார். குற்றவியல் நீதிபதியின் உத்தரவின்றி, மேற்சொல்லப்பட்ட எவரும், மேற்சொல்லப்பட்ட நேரத்தை விட அதிக காலத்துக்குத் காவலில் வைக்கப்படமாட்டார்.

3 உட்பிரிவுகள் (1) மற்றும் (2)இல் கூறப்பட்ட எதுவும் கீழ்க்கண்டவற்றுக்குப் பொருந்தாது.

அ. சம்பவ காலத்தில் வெளிநாட்டைச் சார்ந்த எதிரியாக இருப்பவர் அல்லது

ஆ. தடுப்புக்காவலுக்கு வகை செய்யும் ஏதாவதொரு சட்டத்தின்கீழ் கைது செய்யப்படுபவர் அல்லது தடுப்புக் காவலில் வைக்கப்படுபவர்.

4. தடுப்புக் காவலுக்கு வகை செய்யும் எந்தச் சட்டமும்

அ. உயர்நீதிமன்ற நீதிபதிகளாய் இருக்கும், அல்லது இருந்த

அல்லது இருக்கத் தகுதி பெற்றவர்கள் அடங்கிய ஆலோசனைக் குழு, தனது கருத்துப்படி, தடுப்புக் காவலுக்குப் போதுமான காரணங்கள் இருக்கிறதென்ற அறிக்கையை மூன்று மாதங்கள் நிறைவுறும்முன் தெரிவித்தல்

எனினும் உட்பிரிவு 7இன் உள்உட்பிரிவு (ஆ)வின் கீழ் நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தில் அதிகபட்சமாக நிர்ணயிக்கப்பட்ட காலத்துக்குமேல் ஒருவரைத் தடுப்புக் காவலில் வைப்பதற்கு, இந்த உட்பிரிவில் கூறப்பட்ட எதுவும் அதிகாரமளிக்காது, அல்லது

ஆ) உட்பிரிவு 7இன் உள் உட்பிரிவுகள் (அ) மற்றும் (ஆ)வின் கீழ் நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தின்படி அத்தகையவர் தடுப்புக்காவலில் வைக்கப்பட்டிருத்தல் ஆகியவை தவிர, மூன்று மாதங்களுக்கு மேல் எவரையும் தடுப்புக்காவலில் வைக்க அதிகாரமளிக்காது.

5. தடுப்புக்காவலுக்கு வகை செய்யும் ஏதாவதொரு சட்டத்தின் கீழ் பிறப்பிக்கப்பட்ட ஆணையின்படி ஒருவர் தடுப்புக் காவலில் வைக்கப்படும்போது, அந்த ஆணையைப் பிறப் பிக்கும் அதிகாரி, அந்த ஆணை பிறப்பிக்கப்பட்டதற்கான காரணங்களை, அந்த நபருக்கு இயன்ற அளவு விரைவில் அறிவிப்பார்; மேலும் அந்த ஆணைக்கெதிராக கூடிய விரைவில் மனுச் செய்ய வாய்ப்பு அளிப்பார்.

6. உட்பிரிவு (5)இல் சொல்லப்பட்ட ஆணையைப் பிறப்பிக்கும் அதிகாரி எதை வெளியிடுவது பொது நலனுக்கு எதிரானது என்று கருதுகிறாரோ அதை வெளியிடுமாறு அந்தப் பிரிவில் கூறப்பட்ட எதுவம் அவரைக் கட்டாயப்படுத்தாது.

7. நாடாளுமன்றம் சட்டத்தின்மூலம்

அ. தடுப்புக்காவலுக்கு வகை செய்யும் எந்தச் சட்டடத்தின்கீழும், எந்த சந்தர்ப் பங்களில் எந்த வகையான அல்லது வகைகளிலான வழக்குகளில் (வேளை களில், சூழல்களில்) உட்பிரிவு (4)இன் உள்உட்பிரிவு (அ)வின்படி ஆலோசனைக் குழுவின் கருத்தைப் பெறாமலே மூன்று மாதங்களுக்கு மேற்பட்ட காலத்துக்கு ஒருவரை தடுப்புக்காவலில் வைக்கலாம் என்பதையும்

ஆ. தடுப்புக்காவலுக்கு வகை செய்யும் எந்தச் சட்டத்தின்கீழும், ஒருவரை எந்த வகையான அல்லது வகைகளிலான வேளைகளில், அதிகபட்சம் எவ்வளவு காலம் காவலில்

வைக்கலாம் என்பதையும்

(இ) உட்பிரிவு (4)இன்படியான ஒரு விசாரணையில், ஆலோசனைக்குழு பின்பற்ற வேண்டிய நடைமுறை பற்றியும்

நிர்ணயிக்கலாம்.

*சுரண்டலுக்கெதிரான உரிமை*

23. *மனித வியாபாரத்தையும் கட்டாயப்படுத்தி வேலைவாங்குவதையும் தடை செய்தல்*—மனித வியாபாரம் 'பேகர்' மற்றும் அதே வடிவங்கொண்ட கட்டாயப்படுத்தி வேலைவாங்குதல் தடை செய்யப்படுகின்றன. இந்த ஏற்பாட்டை மீறுவது சட்டத்தின்படி தண்டனைக்குரிய குற்றமாகும்.

2. பொதுநலனுக்காகக் கட்டாயப்பணியை அரசு சுமத்துவதை, இந்தப் பிரிவில் கூறப்பட்ட எதுவும் தடை செய்யாது. இவ்வாறு பணியைச் சுமத்தும்போது, அரசு, மதம், இனம், ஜாதி அல்லது வர்க்கம் அல்லது இவற்றில் ஏதாவதொன்றின் அடிப்படையில் எந்த ஓரவஞ்சனையும் புரியாது.

**24.** *தொழிலகங்கள் முதலியவற்றில் குழந்தைகளை வேலைக்கமர்த்துவதைத் தடை செய்தல்*—பதினான்கு வயதுக்குக் குறைந்த எந்தக் குழந்தையும் தொழிலகம் அல்லது சுரங்கத்தில் வேலைக்கோ அல்லது வேறு எந்தக் கடும்பணிக்கோ அமர்த்தப்படமாட்டாது.

*மதச் சுதந்திரத்துக்கான உரிமை*

**25.** *மனச்சாட்சிக்கான சுதந்திரம் மற்றும் மதத்தை பின்பற்றி கடைபிடித்துப் பரப்புவதற்கான சுதந்திரம்*—பொது ஒழுங்கு, அறநெறி, ஆரோக்கியம் மற்றும் இந்தப் பகுதியில் கூறப்பட்டிருக்கும் ஏனையவற்றுக்குட்பட்டு, சுதந்திரமாக மதத்தை கடைபிடித்துப் பின்பற்றிப் பரப்புவதற்கான உரிமைக்கும் மனச்சாட்சிக்கான சுதந்திரத்துக்கும் அனைவரும் பாத்தியப்பட்டவர்கள்.

2. இந்தப் பகுதியில் சொல்லப்பட்ட எதுவும்—

அ. மதத்தோடு தொடர்புடைய எந்த பொருளாதார, நிதிசம்பந்தமான, அரசியல் அல்லது வேறு மதச்சார்பற்ற நடவடிக்கைகளை நெறிப்படுத்துவதற்கோ அல்லது கட்டுப்படுத்துவதற்கோ

ஆ. சமூக நலம் மற்றும் சீர்திருத்தம் அல்லது பொதுத்தன்மை கொண்ட இந்து மத நிறுவனங்களை இந்துக்களின் அனைத்துப பிரிவினருக்குமோ அல்லது வகையினருக்குமோ திறந்துவிடுவதற்கோ—வகை செய்யும், ஏற்கெனவே இருக்கும் சட்டம் செயல்படுவதைப் பாதிக்காது, அரசு புதிய சட்டங்கள் இயற்றுவதைத் தடைசெய்யாது.

விளக்கம் I— கிர்பான் அணிந்திருப்பதும் எப்போதும் உடன் வைத்திருப்பதும் சீக்கிய மதத்தை கடைப் பிடிப்பதில் அடங்கும் என்று கருதப்படும்.

விளக்கம் II – உட்பிரிவு (2)இன் உள் உட்பிரிவு 'ஆ'வில், இந்துக்களைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பது, சீக்கிய, சமண அல்லது புத்த மதத்தைக் கடைபிடிப்பவர்களைக் குறிப்ப தாகவும், உள்ளடக்கியதாகவும் பொருள் கொள்ளப்படும். இந்து மத நிறுவனங்களைப் பற்றிக் குறிபபிடப்பட் டிருப்பதுவும் அது போலவே பொருள் கொள்ளப்படும்.

**26.** மத விஷயங்களை நிர்வகிக்கும் சுதந்திரம்—பொது ஒழுங்கு, அறநெறி ஆரோக்கியத்துக்கு உட்பட்டு, ஒவ்வொரு மதமும் அல்லது அதன் பிரிவும்

அ. மத மற்றும் அறங்காப்புக் காரணங்களுக்காக அமைப்புகளை நிறுவிப் பராமரிககவும்.

ஆ. மத விஷயங்களில் தமது விவகாரங்களைத் தாமே நிர்வாகிக்கவும்

இ. அசையும் அசையாச் சொத்துக்களை வைத்திருக்கவும் ஈட்டவும்

ஈ. அந்தச் சொத்துக்களை சட்டப்படி நிர்வாகிக்கவும் பாத்தியப்பட்டிருக்கும்

**27.** குறிப்பிட்ட எந்தவொரு மதத்தையும் வளர்ப்பதற்காக வரி செலுத்துவது பற்றிய சுதந்திரம்—எந்த ஒரு வரியின் வருவாய் குறிப்பிட்ட ஒரு மதத்தை அல்லது சமயக்கிளையை வளர்ப்பதற்கான அல்லது பராமரிப்பதற்கான செலவுக்கு குறிப்பாக ஒதுக்கப்படுகிறதோ அந்த வரியைக் கட்டும்படி எவரும் வற்புறுத்தப்படமாட்டார்.

**28.** (1) சில கல்வி நிறுவனங்களில் மத போதனை மற்றும்

*மதவழி பாட்டில் பங்கேற்பது பற்றிய சுதந்திரம்—* முழுக்கவும் அரசு நிதியிலிருந்து பராமரிக்கப்படும் எந்தவொரு கல்வி நிறுவனத்திலும், மதபோதனை நிகழ்த்தப்படாது.

2. மதபோதனை நடத்தப்படவேண்டுமெனக் கோரும் ஏதாவதொரு அறக்கட்டளை அல்லது வைப்புநிதியால் உருவாக்கப்பட்டு அரசினால் நிர்வகிக்கப்படும் நிறுவனத்திற்கு உட்பிரிவு (1)இல் கூறப்பட்டது, பொருந்தாது.

3. அரசினால் அங்கீகரம் அளிக்கப்பட்ட அல்லது அரசு நிதி யிலிருந்து உதவி பெறுகின்ற எந்த வொரு கல்வி நிறுவனத் திலும் பயிலும் எவரும், அந்த நிறுவனத்தில் அளிக்கப்படும் மத போதனையில் பங்கேற்குமாறு கோரப்படமாட்டார் அல்லது அவர் அல்லது அவர் வயதுக்கு வராதவராக இருந்தால், அவரது பாதுகாவலர் ஒப்புதல் அளிக்காதவரை, அந்த நிறுவனத்திலோ அல்லது அதைச் சார்ந்த ஏதாவதொரு இடத்திலோ நடைபெறும் மத வழிபாட்டில் பங்கேற்குமாறு கோரப்படமாட்டார்.

29. பண்பாட்டு உரிமைகளும் கல்வி உரிமைகளும்

1. சிறுபான்மையினர் நலத்தைப் பாதுகாத்தல்—(1) தமக்கெனத் தனிப்பட்ட மொழி, வரிவடிவம் அல்லது பண்பாடு கொண்ட, இந்திய நிலப்பரப்பில் அல்லது அதன் ஏதாவதொரு பகுதியில் வாழும் குடிமக்களின் எந்தப் பிரிவினருக்கும் அவற்றைப் போற்றிப் பாதுகாக்கும் உரிமை உண்டு.

2. அரசினால் பராமரிக்கப்படும் அல்லது அரசு நிதியிலிருந்து உதவிபெறும் எந்தவொரு கல்வி நிறுவனத்திலும், மதம், இனம், ஜாதி, மொழி அல்லது இவற்றில் ஏதாவதொன்றின் காரணமாக எவருக்கும் அனுமதி மறுக்கப்படமாட்டாது.

30. கல்வி நிறுவனங்களை உருவாக்கி நிர்வகிக்க சிறுபான்மையினருக்கான உரிமை—

1. மதம் அல்லது மொழியின் அடிப்படையிலான அனைத்துச் சிறுபான்மை யினருக்கும், தாம் விரும்பும் கல்வி நிறுவனங்களை உருவாக்கி நிர்வகிக்கும் உரிமை இருக்கும்.

1அ. சிறுபான்மையினரால் உருவாக்கப்பட்டு நிர்வாகிக்கப்படும், உட்பிரிவு (1)இல் குறிக்கப்பட்ட கல்வி நிறுவனத்தின் எந்தச் சொத்தையும் கட்டாயமாக எடுத்துக் கொள்ள வகை செய்யும் எந்தச் சட்டத்தையும் இயற்றும்போது,

அந்தச் சட்டத்தின்படி தீர்மானிக்கப்படும் அல்லது விதிக்கப்படும் இழப்பீட்டுத் தொகை அந்த உட்பிரிவில் வழங்கப்பட்ட உரிமையை ஒடுக்காமலோ கட்டுப் படுத்தாமலோ இருக்குமாறு அரசு உறுதி செய்யும்.

2. கல்வி நிறுவனங்களுக்கு நிதியுதவி வழங்கும்போது, மதம் அல்லது மொழி அடிப்படையிலான ஒரு சிறுபான்மை யினரால் நிர்வகிக்கப்படுகிறது என்ற காரணத்துக்காக எந்தக் கல்வி நிலையத்துக்கு எதிராகவும் அரசு ஓரவஞ்சனை புரியாது.

**31C. சில நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயல்படுத்தும் அரசுச் சட்டங்களைப் பாதுகாத்தல்**

பிரிவு 13இல் எப்படிச் சொல்லப்பட்டிருப்பினும், பகுதி IVஇல் பொறிக்கப்பட்டுள்ள கோட்பாடுகள் அனைத்தையுமோ அல்லது அவற்றில் சிலவற்றையோ உறுதி செய்ய வேண்டும் என்ற அரசின் கொள்கையை செயல்படுத்தும் எந்தச் சட்டமும் பிரிவுகள் 14 அல்லது 19இல் வழங்கப்பட்ட உரிமைகளுக்கு ஒவ்வாதது, அவற்றை எடுக்கிறது, அல்லது கட்டுப்படுத்துகிறது என்ற காரணத்தால், செல்லாததாக கருதப்பட மாட்டாது. இந்தக் கொள்கை செயல்படுத்துவதற்கானது என்ற அறிவிப்பு அடங்கிய எந்த சட்டமும் அது அந்தக் கொள்கையைச் செயல் படுத்தவில்லை என்ற காரணத்துக்காக நீதிமன்றத்துக்குக் கொண்டு வரப்படாது.

## அரசமைப்புச் சட்டத்தின்வழி நிவாரணம் பெறும் உரிமை

**32. இந்தப் பகுதியில் வழங்கப்பட்ட உரிமைகளைச் செயல்படுத்துவதற்கான நிவாரணம்**

1) இந்தப் பகுதியில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளைச் செயல் படுத்துவதற்காக தக்க நடவடிக்கைகள் வழியாக உச்சநீதி மன்றத்தில் முறையிடும் உரிமை வழங்கப்படுகிறது.

2) இந்தப் பகுதியில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளைச் செயல் படுத்துவதற்காக, ஆட்கொணர்வித்தல், செயலுறுத்தல், தடையுறுத்தல், தகுதிமுறை வினவல், நெறிமுறையுறுத்தல் உட்பட்ட தகுந்த நீதிப்பேராணைகளையும், உத்தரவுகளையும் பிறப்பிக்கும் அதிகாரம் உச்சநீதிமனறத்துக்கு உண்டு.

3) உட்பிரிவுகள் (1) மற்றும் (2)இன் வாயிலாக உச்சநீதி

மன்றத்துக்கு வழங்கப் பட்டிருக்கும் அதிகாரங்களைப் பாதிக்காத வகையில், நாடாளுமன்றம், சட்டத்தின் வாயிலாக உட்பிரிவு (2)இன்கீழ் உச்சநீதிமன்றத்துக்கு வழங்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் அனைத்தையுமோ அல்லது அவற்றில் சிலவற்றையோ, வட்டார எல்லைக்குள் செயல்படுத்துவதற்கான அதிகாரத்தை வேறு எந்த நீதிமன்றத்துக்கும் வழங்கலாம்.

4) இந்த அரசமைப்புச் சட்டத்தில் வேறுவிதமாக ஏற்படுத்தப் பட்டிருந்தாலொழிய, இந்தப் பிரிவால் வழங்கப்படும் உரிமை தள்ளிவைக்கப்பட மாட்டாது.

33. **படையினரைப் பொறுத்தவரை, இந்தப் பகுதியால் வழங்கப் படும் உரிமைகளை மாற்றுவதற்கான நாடாளுமன்றத்தின் உரிமை**

இந்தப் பகுதியில் வழங்கப்பட்ட உரிமைகள்—

(a) முப்படையின் உறுப்பினர் அல்லது

(b) பொதுஒழுங்கைப் பராமரிக்கும் பொறுப்புக் கொண்ட படைகளின் உறுப்பினர்கள் அல்லது

(c) உளவுப் பணி மற்றும் எதிர்உளவுப் பணிக்காக அரசினால் ஏற்படுத்தப்பட்ட எந்தவொரு அமைப்பிலும் பணியாற்றுவோர்

(d) உட்பிரிவுகள் (a) முதல் (c) வரையில் குறிக்கப்பட்ட படை அல்லது நிறுவனங்களுக்காக ஏற்படுத்தப்பட்ட தகவல்தொடர்பு சாதனங்களில் பணியாற்றுவோர் ஆகியோரைப் பொறுத்தவரை அவர்களிடையே ஒழுங்கைப் பராமரிக்கவும் ஒழுங்காகக் கடமையாற்றுவதை உறுதி செய்யவும் அவர்கள் எவ்வாறு கட்டுப்படுத்தப் படலாம் அல்லது வரையறுக்கப்படலாம் என்பதை நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் தீர்மானிக்கலாம்.

34. **படைத்துறை ஆட்சி நடைமுறையிலிருக்கும் நிலப்பரப்பில், இந்தப் பகுதியால் வழங்கப்பட்ட உரிமைகளை கட்டுப்படுத்துதல்**

இந்தப் பகுதியின் முற்சொன்ன வகையுரைகளில் எப்படிக் குறிப்பிடப் பட்டிருப்பினும், இந்திய நிலப்பரப்பில் படைத்துறை ஆட்சி நடைமுறையில் இருந்த பகுதியில் ஒழுங்கைப் பராமரிக்கவும், திரும்பக் கொண்டு வரவும், ஒன்றியம் அல்லது மாநிலத்தின் பணியில் அமர்த்தப்பட்ட ஒருவர் எடுத்த நடவடிக்கைகளுக்காக அவரைக் காப்பாற்றவும் மற்றும் அந்தப்

பகுதியில் படைத்துறை சட்டத்தின்கீழ் பிறப்பிக்கப்பட்ட தீர்ப்புகள், விதிக்கப்பட்ட தண்டனைகள், பறிமுதல்கள் அல்லது ஏனைய செயல்களை செல்லத்தக்கதாக்கவும் நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் வகை செய்யலாம்.

# III

## அரசுக் கொள்கைகள் பற்றிய நெறிமுறைக் கோட்பாடுகள்

36 வரையறை — இப்பகுதியில் பின்னணி வேறுபொருள் கொள்ள வைத்தாலன்றி 'அரசு' என்னும் தொடர் பகுதி IIIஇல் கொள்ளப்படும் பொருளையே கொண்டிருக்கும்.

37. இப்பிரிவில் கூறப்படும் கோட்பாடுகளை நடைமுறைப் படுத்தல்—
இப்பிரிவில் கூறப்படும் கோட்பாடுகள் எந்த நீதிமன்றத்தின் மூலமும் கட்டாயமாக நடைமுறைப்படுத்துப்படக் கூடியவை அல்ல; ஆனாலும்கூட, இங்கு விதிக்கப்படும் கோட்பாடுகள் நாட்டினை ஆள்வதில் அடிப்படையானவை. சட்டங்களை இயற்றும்போது இவற்றைக் கடைப்பிடிக்க வேண்டியது அரசின் கடமையாகும்.

**38. மக்கள் நலனைப் பேணும் சமுதாய அமைப்பை அரசு உருவாக்க வேண்டும்.**

1. சமூக-பொருளாதார-அரசியல் நீதி தேசிய வாழ்வின் அனைத்து அமைப்புகளிலும் துலங்கும்படியான சமூக அமைப்பை உருவாக்கி, இயன்றமட்டும் அதைப் பாதுகாப்பதன்மூலம், அரசு மக்கள் நலனைப் பேண வேண்டும்.
2. தனிநபர்கள் மட்டுமின்றி பல்வேறு பகுதிகளில் வசிக்கும் அல்லது பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருக்கும் பிரிவினரிடையும் அந்தஸ்து, வசதிகள் மற்றும் வாய்ப்புகளில் ஏற்றத்தாழ்வை நீக்க அரசு முயற்சிக்க வேண்டும்; குறிப்பாக வருவாய் ஏற்றத்தாழ்வை நீக்கப் போராட வேண்டும்.

**39. அரசு பின்பற்ற வேண்டிய கொள்கைகளுக்கான சில கோட்பாடுகள்**

குறிப்பாகக் கீழ்க்கண்டவற்றை உருவாக்கும் வகையில் அரசு தனது கொள்கையை நெறிப்படுத்த வேண்டும்.

அ. குடிமக்கள்— ஆண்களும் பெண்களும் சம அளவில்— வாழ்க்கைக்கான போதுமான வருவாய் பெறும் உரிமை பெறுதல்

ஆ. சமுதாயத்தின் பருப்பொருள் வளங்களின் உடைமையும் கட்டுப்பாடும், பொதுநலனுக்கு உகந்தவாறு பங்கிடப் பட்டிருத்தல்.

இ. வளங்களும், உற்பத்தி வழிகளும் ஓரிடத்தில் குவிந்து பொது நலனுக்குக் குந்தகம் விளைவிக்காத வண்ணம் பொருளாதார அமைப்பு செயல்படுதல்.

ஈ. ஆண்களுக்கும் பெண்களுக்கும், சம வேலைக்கு சம ஊதியம்.

உ. ஆண்-பெண் தொழிலாளர்களின் உடல்நலமும், பலமும் மற்றும் குழந்தைகளின் இளம்பிராயமும் பாதிக்கப்படா திருத்தல்; பொருளாதாரத் தேவைகளினால், தமது வயதுக்கும், வலிமைக்கும் ஒவ்வாத பணிகளை மேற்கொள்ளுமாறு குடிமக்கள் கட்டாயப்படுத்தப் படாமலிருத்தல்.

ஊ. ஆரோக்கியமாகவும் சுதந்திரம் மற்றும் கண்ணியமான சூழ்நிலையிலும் வளர்வதற்கான வாய்ப்புகளையும் வசதிகளையும் குழந்தைகளுக்கு அளித்தல்; குழந்தைப் பருவமும் இளமையும் சுரண்டலில் இருந்து பாதுகாக்கப் படுதலும், அறநெறி மற்றும் புறப்பொருள் ரீதியாகக் கைவிடப்படாதிருத்தலும்.

**39.A.** சமநீதியும் இலவச சட்ட உதவியும்—சமவாய்ப்பு அடிப்படையில், நீதி பேணப்படுமாறு சட்ட அமைப்பு செயல்படுவதை அரசு உறுதி செய்யவேண்டும். குறிப்பாக, பொருளாதார அல்லது வேறு குறைபாட்டின் காரணமாக, நீதி பெறுவதற்கான வாய்ப்பை எந்தக் குடிமகனுக்கும் மறுக்கப்படாமலிருப்பதை உறுதி செய்யும் வகையில், தக்க சட்டங்கள் மூலமோ, திட்டங்கள் மூலமோ அல்லது வேறு விதமாகவோ, அரசு இலவச சட்ட உதவி அளிக்கும்.

**40.** கிராமப் பஞ்சாயத்துக்களை ஏற்படுத்துதல்—கிராமப் பஞ்சாயத்துக்களை உருவாக்கவும், அவை தன்னாட்சி

அமைப்புகளாகச் செயல்படத் தேவையான அதிகாரங்களையும் தகுதியையும் அவற்றுககு வழங்கவும் அரசு நடவடிக்கை எடுக்கும்.

**41.** உழைப்பு, கல்வி மற்றும் சில வேளைகளில் அரசு உதவி பெறுவதற்கான உரிமை—அரசு தனது பொருளாதார சக்தி மற்றும் வளர்ச்சிக்குட்பட்டு, தனது மக்கள் உழைக்கும் உரிமை, கல்வி, வேலையின்மை, முதுமை, நோய், ஊனம் மற்றும் ஏனைய இயலாமையின் காரணங்களுக்காக அரசு உதவி பெறுதல் ஆகியவற்றுக்கு தக்க எற்பாடுகளை செய்யும்.

**42.** நியாயமான மனிதாபிமானமுள்ள பணிச்சூழல் மற்றும் மகப்பேற்று உதவிக்கான ஏற்பாடு—நியாயமான மனிதாபிமானமுள்ள பணிசசூழல்களுக்கும் மகப்பேற்று உதவிக்கும் அரசு ஏற்பாடு செய்யும்.

**43.** உழைப்பாளருக்கு வாழ்வுக்கான ஊதியம் முதலியன—தகுந்த சட்டம் அல்லது பொருளாதார அமைப்பு அல்லது வேறு ஏதாவதொரு வழியில், வேளாண்மை, தொழிற்சாலை அல்லது வேறு விதத் தொழிலாளர்கள், வாழ்வதற்கான ஊதியம், தகுந்த வாழ்க்கைத் தரத்தை உறுதி செய்யும் பணிச்சூழல்கள், ஓய்வு நேரம் மற்றும் சமூக-பண்பாட்டு வாய்ப்புகளை முழுமையாக அனுபவித்தல் ஆகியவற்றை உறுதி செய்யுமாறு அரசு முயற்சிக்க வேண்டும்; குறிப்பாகக் கிராமப் பகுதிகளில், தனிநபர் அல்லது கூட்டுறவு அடிப்படையில் குடிசைத் தொழில்களை வளர்க்க அரசு முயல வேண்டும்.

**43. A** தொழில்களின் நிர்வாகத்தில் தொழிலாளர் பங்கேற்பு—எந்தவொரு தொழிலிலும் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்கள் அமைப்புகள் அல்லது வேறு ஏற்பாடுகளின் நிர்வாகத்தில், தொழிலாளர் பங்கேற்பதை தகுந்த சட்டம் மூலமோ அல்லது வேறு வகையிலோ, உறுதி செய்ய அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

**44.** குடிமக்களுக்கு ஒரே மாதிரியான குடிமையியல் (சிவில்) சட்டம்— இந்திய நிலப்பரப்பெங்கும், குடிமக்களுக்கு ஒரே மாதிரியான குடிமையியல் சட்டத்தை உறுதி செய்ய அரசு முயற்சி எடுக்க வேண்டும்.

45. **குழந்தைகளுக்கான கட்டாய இலவசக் கல்வி அளித்தல்**—இந்த அரசமைப்புச் சட்டம் தொடங்கியதிலிருந்து பத்தாண்டுகளுக்குள், பதினான்கு வயது நிரம்பும்வரை குழந்தைகளுக்கு இலவசக் கட்டாயக் கல்வி அளிக்க அரசு முயலவேண்டும்.

46. **தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர் மற்றும் ஏனைய நலிவுற்ற பிரிவினரின் கல்வி மற்றும் பொருளாதார நலன்களைப் பேணுதல்**—நலிவுற்ற மக்களின், குறிப்பாக தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினரின் கல்வி மற்றும் பொருளாதார நலன்களை சிறப்புக் கவனத்தோடு அரசு பேண வேண்டும்; சமூக அநீதியிலிருந்தும், அனைத்து விதமான சுரண்டல்களிலிருந்தும் அவர்களைப் பாதுகாக்க வேண்டும்.

47. **ஊட்டச்சத்துத் தரத்தையும் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்துதல் மற்றும் பொது ஆரோக்கியத்தை மேம்படுத்துதல் பற்றிய அரசின் கடமை**— ஊட்ட நிலையையும், வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்துதல் மற்றும் பொது ஆரோக்கியத்தை மேம்படுத்துதலை அரசு தனது தலையாய கடமைகளுக்கு உட்பட்டதாகக் கருதவேண்டும்; குறிப்பாக மருத்துவக் காரணங்களின்றி, மதுபானங்களையும் உடல்நலத்துக்கு ஊறுவிளைவிக்கும் மருந்துகளையும் உட்கொள்வதற்குத் தடை ஏற்படுத்த முயல வேண்டும்.

48. **வேளாண்மை மற்றும் கால்நடை வளர்ப்பை அமைப்பாக்கம் செய்தல்**—வேளாண்மை மற்றும் கால்நடை வளர்ப்பை நவீன அறிவியல் முறையில் அமைப்பாக்கம் செய்ய அரசு முயற்சிக்கும். குறிப்பாகக் கால்நடை இனங்களை மேம்படுத்திப் பாதுகாக்கவும், பசு, கன்று, மற்றும் ஏனைய பால்தரும் மற்றும் இழுவைக் கால்நடைகளைக் கொல்வதைத் தடுக்கவும் வேண்டிய நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

48(A) **சுற்றுச் சூழலைப் பாதுகாத்து மேம்படுத்துதல் மற்றும் காடுகளையும் வன விங்குகளையும் காத்தல்**—சுற்றுச் சூழலைப் பாதுகாத்துப் பேணுவதற்கும், நாட்டிலுள்ள காடுகளையும் வனவிங்குகளையும் காப்பதற்கும் அரசு முயற்சி எடுக்க வேண்டும்.

**49.** **தேசிய முக்கியத்துவம் பெற்ற நினைவுச் சின்னங்கள் மற்றும் இடங்கள்– பொருட்களைப் பாதுகாத்தல்**— தேசிய முக்கியத்துவம் பெற்றவை என்று நாடாளுமன்றத்தின் சட்டத்தின்படி அல்லது அதன்கீழ் அறிவிக்கப்பட்ட கலை மற்றும் வரலாற்று முக்கியத்துவம் கொண்ட அனைத்து நினைவுச் சின்னங்கள், இடங்கள், பொருட்களை கெட்டுப் போதல், சிதைதல், அழிதல், நீக்கப்படுதல், விற்கப்படுதல், ஏற்றுமதி செய்யப்படுதல் ஆகிய எதிலிருந்தும் பாதுகாப்பது அரசின் கடமை ஆகும்.

**50.** **நிர்வாகத் துறையிலிருந்து நீதித் துறையைத் தனிப் படுத்துதல்**— அரசுப் பணிகளில், நிர்வாகத் துறையிலிருந்து நீதித் துறையைத் தனிப்படுத்த அரசு நடவடிக்கை எடுக்கும்.

**51.** **சர்வதேச சமாதானத்தையும் பாதுகாப்பையும் வளர்த்தல்**— அரசு கீழ்க்கண்டவற்றுக்கு முயற்சி எடுக்கும்.

அ. சர்வதேச சமாதானம் மற்றும் பாதுகாப்பு

ஆ. நாடுகளுக்கிடையே நியாயமான கௌரவமான உறவுகள்

இ. கட்டமைக்கப்பட்ட ஒரு மக்கள் குழு மற்றொரு குழுவிடம் உறவு வைப்பதில் ஒப்பந்தப் பொறுப்புகளையும் சர்வதேசச் சட்டத்தையும் மதிப்பது வளர்ச்சியுறல்.

ஈ. சர்வதேசப் பிரச்சினைகளுக்கு பேச்சு வார்த்தைமூலம் தீர்வு காண்பதை ஊக்குவித்தல்.

## IV

### அடிப்படைக் கடமைகள்

**51A.** **அடிப்படைக் கடமைகள்**—கீழ்க்கண்டவை, ஒவ்வொரு இந்தியக் குடிமகனின் கடமைகள் ஆகும்.

அ. அரசியலமைப்புக்குக் கீழ்ப்படிந்து அதன் நோக்கங் களையும், அமைப்புகளையும் மதித்து தேசியக் கொடியையும் தேசிய கீதத்தை மதித்து நடத்தல்.

ஆ. நமது தேசிய விடுதலைப்போராட்டத்தைத் தூண்டுவித்த உன்னத நோக்கங்களைப் நினைந்து போற்றிப் பின்பற்றுதல்.

இ. இந்தியாவின் இறையாண்மையையும், ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்தல்.

ஈ. நாட்டைக் காப்பதுடன், அழைக்கப்பட்டபோது நாட்டுப்பணி புரிதல்.

உ. மதம், மொழி, வட்டாரம் மற்றும் பிரிவு சார்ந்த வேறுபாடுகள் அனைத்தையும் கடந்து இந்திய மக்கள் அனைவரிடையேயும் சகோதர உணர்வையும் நல்லிணக் கத்தையும் வளர்த்தல். பெண்களின் கண்ணியத்தைக் குறைக்கின்ற செயல்களை விட்டொழித்தல்.

ஊ. நமது பன்முகப் பண்பாட்டின் வளமான பாரம்பரியத்தை மதித்துப் போற்றிக் காத்தல்.

எ. காடுகள், ஏரிகள், ஆறுகள் வன விலங்குகள் உள்ளிட்ட இயற்கைச் சூழலை பாதுகாத்து வளர்த்தல், உயிரினங் களுக்குப் பரிவு காட்டுதல்.

ஏ. அறிவியல் மனப்பாங்கு மனிதாபிமானம் ஆராய்ச்சி உணர்வு மற்றும் சீர்திருத்த மனப்பான்மையை வளர்த்தல்.

ஐ. பொதுச் சொத்தைப் பாதுகாத்தல், வன்முறையைக் கைவிடுதல்

ஒ. நாடு தன்னுடைய முயற்சியிலும் சாதனைகளிலும் தொடர்ந்து முன்னேறும் வகையில் அனைத்துத் துறை களிலும் தனிமனித மற்றும் கூட்டு நடவடிக்கைகளின் மேன்மைக்குப் பாடுபடுதல்.

# V

## மற்றும் சில பகுதிகள்

**பிரிவு 226 உயர்நீதிமன்றத்தின் சில பேராணைகள் விடுக்கும் அதிகாரம்**

1. பிரிவு 32இல் எப்படி சொல்லப்பட்டிருப்பினும், ஒவ்வொரு உயர்நீதி மன்றமும் தனது அதிகார வரம்புக்குட்பட்ட நிலப்பரப்பு முழுமையிலும் உள்ள எந்தவொரு நபருக்கோ அல்லது அரசு உள்ளிட்ட அதிகார அமைப்புக்கோ பிரிவு IIIஇல் வழங்கப்பட்டுள்ள உரிமைகளை செயல்படுத்து வதற்காகவோ அல்லது வேறு காரணங்களுக்காகவோ ஆட்கொணர்வித்தல். தடையுறுத்தல், தகுதிமுறை வினவல், நெறிமுறையுறுத்தல், செயலுறுத்தல் ஆகியவை உள்ளிட்ட நீதிப் பேராணைகள், உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம்.

2. எந்தவொரு அரசுக்கோ அதிகார அமைப்புக்கோ, நபருக்கோ, நீதிப்பேராணைகளும் ஆணைகளும் உத்தரவுகளும் பிறப்பிக்க முன்பத்தியில் தரப்பட்டுள்ள அதிகாரத்தை அந்த அரசாங்கமோ, அதிகார அமைப்போ, நபரோ தன் அதிகார நில எல்லைக்குள் வராவிட்டாலும்கூட சம்பந்தப்பட்ட ஆணைக்குக் காரணமான செயல்பாடு முழுவதுமோ, ஒரு பகுதியோ தனது நில எல்லைக்குள் நடந்திருந்தால் ஒரு நீதிமன்றம் பயன்படுத்த முடியும்.

3. பத்தி 1இல் குறிப்பிடப்படும் மனு தொடர்பாகவோ, அதன்மீதோ தடையுத்தரவு வாயிலாகவோ தடையாணை மூலமோ ஒரு இடைக்கால உத்தரவு யாருக்கேனும் எதிராக பிறப்பிக்கப்பட்டால் (அ) அந்த நபருக்கு அல்லது அமைப் புக்கு அந்த மனுவின் நகல்களும் அத்தகைய இடைக்கால உத்தரவுக்கு ஆதாரவாக சமர்ப்பிக்கபபட்டிருந்த அனைத்து ஆவணங்களின் நகல்களும் தரப்பட்டிருக்கா விட்டாலோ (ஆ) அந்த நபருக்கு தன்தரப்பு நியாயங்களைக் கூற வாய்ப்பு அளிக்கப்பட்டிராவிட்டாலோ

அந்த நபர் அந்தத் தடையை நீக்குமாறு அந்த உயர் நீதிமன்றத்தில் மனுச் செய்யலாம். தடைகேட்டுப் பெற்ற எதிர்த் தரப்புக்கோ, அவர்களது வழக்குரைஞருக்கோ அந்த மனுவின் நகல் தரப்பட வேண்டும். மனு கிடைத்த இரண்டு வாரங் களுக்குள் அல்லது நகல் தரப்பட்ட இரண்டு வாரங் களுக்குள்— இவ்விரண்டில் எது பிந்தையதோ அதற்குள்— அந்தத் தடைநீக்க மனுமீது உயர்நீதிமன்றம் தீர்ப்பு வழங்கிவிட வேண்டும். அந்த இருவார எல்லை முடியும் நாளில் நீதிமன்ற விடுமுறை துவங்கி விட்டால், நீதிமன்றம் மீண்டும் திறந்த மறுநாள் அந்தத் தீர்ப்பு வழங்கப்பட்டு விட வேண்டும். அப்படித் தீர்ப்பு வழங்கப் படாதபட்சத்தில், காலக்கெடு முடியும்போது இடைக்காலத் தடையுத்தரவு தானாகவே அகற்றப்பட்டு விடும்.

4. இந்த (226-ம்) விதியின்கீழ் உயர்நீதிமன்றம் பெறும அதிகாரம் விதி 32(2)-இன் கீழ் உச்சநீதிமன்றத்துக்குள்ள அதிகாரத்தைப் பாதிக்காது.

*பிரிவு* **300 A** *சட்டபூர்வமாக அன்றி யாருடைய சொத்தும் பறிமுதல் செய்யப்பட முடியாமை— சட்டபூர்வமாக அல்லாமல்*

யாருடைய சொத்தும் அவரிடமிருந்து பறிமுதல் செய்யப்பட முடியாது.

பிரிவு 325 மதம், இனம், ஜாதி மற்றும் பால் காரணங்களுக்காக மட்டும் எவரும் வாக்காளர் பட்டியலில் இடம் பெறத் தகுதியற்றவராக மாட்டார்; அல்லது சிறப்புப் பட்டியலில் இடம் பெறக் கோர முடியாது—நாடாளுமன்றம் அல்லது மாநில சட்ட அவைகள் அல்லது அவற்றுக்கான தேர்தலுக்கு ஒவ்வொரு நிலப்பரப்புத் தொகுதிக்கும் ஒரு பொது வாக்காளர் பட்டியல் இருக்கும். மதம், இனம், பால், ஜாதி அல்லது இவற்றில் ஏதாவதொன்றின் காரணமாக மட்டுமே எவரும் இந்த வாக்காளர் பட்டியலில் இடம் பெறத் தகுதியற்றவராக மாட்டார்; இந்தத் தொகுதிகளுக்கான சிறப்புப் பட்டியலில் இடம்பெறக் கோரவும் மாட்டார்.

பிரிவு 326 மக்களவைக்கும் மாநில சட்டப்பேரவைக்குமான தேர்தல்கள் வயதுற்றோர் வாக்குரிமையின் அடிப்படையில் நடைபெறும்—மக்களவைக்கும், மாநில சட்டப்பேரவைக்குமான தேர்தல்கள் வயதுற்றோர் வாக்குரிமையின் அடிப்படையில் நடைபெறும். அதாவது, பொருத்தமான சட்ட அவையில் இயற்றப் பட்ட சட்டத்தில் அல்லது சட்டத்தின் கீழ் நிர்ணயிக்கப்பட்ட தேதியில், பதினெட்டு வயதுக்குக் குறையாத இந்தியக் குடிமகனாகிய ஒவ்வொரு நபரும்; இந்த அரசமைப்புச்சட்டம் அல்லது பொருத்தமான சட்ட அவையினால் இயற்றப்பட்ட சட்டத்தின்கீழ், குடியிருக்காமை, மனநலமின்மை, குற்றம், முறைகேடான, சட்ட விரோதமான நடவடிக்கை ஆகிய காரணங்களுக்காக தகுதி இழக்காதவரும், இத்தகைய எந்தத் தேர்தலிலும் வாக்காளராகப் பதிவு செய்யப்படப் பாத்தியப்பட்டவராவார்.

# 2

# மனித உரிமைகள் பற்றிய சர்வதேசப் பிரகடனமும், இந்திய அரசமைப்பு மற்றும் பிற இந்திய சட்டங்களில் இடம்பெறும் வாசகங்கள்

*மனித உரிமை பிரகடனம் ஏற்கப்படுவதற்கு இரண்டாண்டுகள் முன்னர் இந்திய அரசமைப்புச்சட்டத்தை உருவாக்கும் பணி ஆரம்பித்துவிட்டது. ஆனாலும் 1949 நவம்பர் 26அன்று இந்திய அரசமைப்புப் பேரவையால் ஏற்றுக்கொள்ளப்பட்ட இந்திய அரசமைப்புச்சட்டத்திலும் பிற சட்டங்களிலும் அந்தப் பிரகடனத்தின் ஒவ்வொரு பிரிவும் பிரதிபலிக்கப்பட்டுள்ளது. வரும் பக்கங்களில் தரப்படும் ஒப்பீட்டு அட்டவணை, பிரகடனத்தின் பிரிவுகள் இந்திய அரசமைப்புச்சட்டத்தின் பிரிவுகளுடனும் பிற சட்டங்களின் பிரிவுகளுடனும் ஒத்துப்போவதைக் காட்டுகிறது. (பிரகடனத்தின் வாசகங்களும், அரசமைப்புச்சட்டத்தின் சம்பந்தப் பட்ட அனைத்து பிரிவுகளும் முந்தைய அத்தியாயங்களில் வெளியிடப்பட்டுள்ளன.*

---

## மனித உரிமைகள் பற்றிய சர்வதேசப் பிரகடனத்தின் பல்வேறு வாசகங்களையும், இந்திய சட்டங்கள் அரசமைப்புச்சட்டம் ஆகியவற்றின் வாசகங்களையும் ஒப்பிட்டுக் காட்டும் அட்டவணை

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்தியஅரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| 1. | அனைத்து மாந்தரும் பிறப்பில் சுதந்திரர். மதிப்பிலும் உரிமைகளாலும் சமமானவர். | 4. | இந்திய நிலப்பரப்பில் சட்டத்தின் பார்வையில் சமத்துவத்தையோ, சமமான சட்டப்பாதுகாப்பையோ அரசு எவருக்கும் மறுக்காது. |
| 2. | இன, நிற, பால், மொழி, மத, அரசியல் அல்லது வேறு எந்தக் கருத்து காரணமாகவும் தேசியம், சமூகம், சொத்து, பிறப்பு கவுரவம் என்ற எவ்வித பேதமும் இன்றி உலக மாந்தர் அனைவரும் இந்தப் பிரகடனத்தில் கூறப்பட்டுள்ள உரிமைகளுக்கும் சுதந்திரங்களுக்கும் உரியோர் ஆவர். | 15. | மதம், இனம், சாதி, பால் பிறப்பிடம் அல்லது இவற்றில் எந்த ஒன்றின் காரணமாக மட்டும் அரசு குடிகளிடையே ஓரவஞ்சனை செய்யாது. |
| 3. | ஒவ்வொருவருக்கும் வாழும் உரிமை, சுதந்திரம், தனக்கான பாதுகாப்பு ஆகிய உரிமைகள் உண்டு. | 21. | சட்டத்தில் ஏற்படுத்தப்பட்ட நடைமுறைப்படி அன்றி எவரது உயிரோ, தனிநபர் சுதந்திரமோ பறிக்கப்பட மாட்டாது. |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்தியஅரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| 4. | அடிமையென்றோ பணிமகனென்றோ எவருமில்லை | 23. | மனித வியாபாரம் 'பேகர்' மற்றும் அதே வடிவங்கொண்ட கட்டாயப்படுத்தி வேலைவாங்குதல் தடை செய்யப்படுகின்றன. இந்த ஏற்பாட்டை மீறுவது சட்டத்தின்படி தண்டனைக்குரிய குற்றமாகும். |
| 5. | யாரும் சித்திரவதைக்கு ஆட்படுத்தப் படக்கூடாது. | 21. | மகாராஷ்டிர மாநிலம் எதிர் ரவிசாந்த் எஸ். பாட்டின் உச்ச நீதிமன்றத் தீர்ப்பிலிருந்து (1991) 2 எஸ்சிசி 373: விசாரணைக்கைதிக்கு விலங்கிடலும வீதியில் நடத்திச் செல்வதும் விதி 21இன் கீழ் உரிமை மீறலாகும்.<br>பந்துவா முக்தி மோர்ச்சா எதிர் இந்திய ஒன்றியம் (1984) 3 எட்ஸ.சிசி 161 மற்றும் (1991) 4 எஸ்.சிசி 177 உச்ச நீதிமன்றத் தீர்ப்பிலிருந்து: மனித கௌரவத்துடன் வாழும் உரிமை விதி 21இல் பொறிக்கப்பட்டிருப்பதாக தீர்ப்பளிக்கப்பட்டது.<br>மேனகா காந்தி எதிர் இந்திய ஒன்றியம் (1978) 1 எஸ்சிசி 248 உச்சமன்றத் தீர்ப்பிலிருந்து: விதி 21இல் 'தனிநபர் சுதந்திரம்' என்ற தொடர் விரிந்த பொருளுடையது. தனது உடலின் பாதுகாப்புக்கான உரிமை உட்பட, தனிமனித சுதந்திரத்தை உருவாக்கும் பல்வகை விதிகளை உள்ளடக்கியது. |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| 6. | சட்டத்தின் முன் மனிதனாக நடத்தப்படும் உரிமை எங்கும் எவருக்கும் உண்டு. | 14,21 | இந்திய நிலப்பரப்பில் சட்டத்தின் பார்வையில் சமத்துவத்தையோ அல்லது சமமான சட்டப் பாது காப்பையோ அரசு எவருக்கும் மறுக்காது.<br>சட்டத்தில் ஏற்படுத்தப்பட்ட நடைமுறைப்படி அன்றி எவரது உயிரோ, தனிநபர் சுதந்திரமோ பறிக்கப் படமாட்டாது. |
| 7. | சட்டத்தின் முன் அனைவரும் சமம். எந்தப் பாகுபாடுமின்றி சட்டத்தின் பாதுகாப்பும் எல்லாருக்கும் சமமாக உரியது. | 14. | இந்திய நிலப்பரப்பில் சட்டத்தின் பார்வையில் சமத்துவத் தையோ அல்லது சமமான சட்டப் பாதுகாப்பையோ அரசு எவருக்கும் மறுக்காது. |
| 8. | அடிப்படை உரிமைகளின் மீறலாக அமையும் எச்செயலுக்கும் எதிராக சரியான பரிகாரம் பெற அனைவருக்கும் உரிமையுண்டு. | 32(1) | இந்தப் பகுதியில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளைச் செயல்படுத்துவதற்காக தக்க நடவடிக்கைகள் வழியாக உச்சநீதிமன்றத்தில் முறையிடும் உரிமை வழங்கப் படுகிறது. |
| | | (2) | இந்தப் பகுதியில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளைச் செயல்படுத்துவதற்காக, ஆட்கொணர்வித்தல், செயலுறுத்தல், தடையுறுத்தல், தகுதிமுறை வினவல், நெறிமுறையுறுத்தல் உட்பட்ட தகுந்த நீதிப் பேராணைகளையும், உத்தரவுகளையும் பிறப்பிக்கும் அதிகாரம் உச்சநீதிமன்றத்துக்கு உண்டு. |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | 4. | இந்த அரசமைப்புச்சட்டத்தில் வேறுவிதமாக ஏற்படுத்தப்பட்டிருந்தாலொழிய இந்தப் பிரிவால் வழங்கப்படும் உரிமை தள்ளிவைக்கப்பட மாட்டாது. |
| | | 226(1) | பிரிவு 32இல் எப்படி சொல்லப்பட்டிருப்பினும் ஒவ்வொரு உயர்நீதிமன்றமும் தனது அதிகார வரம்புக்குட்பட்ட நிலப்பரப்பு முழுமையிலும் உள்ள எந்தவொரு நபருக்கோ அல்லது அரசு உள்ளிட்ட அதிகார அமைப்புக்கோ, பிரிவு 3இல் வழங்கப்பட்டுள்ள உரிமைகளை செயல்படுத்துவதற்காகவோ அல்லது வேறு காரணங்களுக்காகவோ ஆட்கொணர்வித்தல் தடையுறுத்தல், தகுதிமுறை வினவல், நெறிமுறையுறுத்தல் செயலுறுத்தல் உள்ளிட்ட நீதிப் பேராணைகளையும் உத்தரவுகளையும் பிறப்பிக்கலாம். |
| 9. | யாரும் சட்டவிரோதமாக அடைத்து வைக்கப்படவோ கைது செய்யப் படவோ நாடு கடத்தப்படவோ முடியாது. | 22 (1) | கைது செய்யப்பட்ட எவரும், இயன்ற அளவு விரைவில் அதற்கான காரணங்களை அறிவிக்கப்படாமல் காவலில் வைக்கப்பட மாட்டார், மற்றும் தாம் விரும்பும் வழக்குரைஞரைக் கலந்தாலோசிப்பதற்கும் அவரால் பாதுகாக்கப் படுவதற்குமான உரிமைகள் மறுக்கப்பட மாட்டார். |
| | | (2) | கைது செய்யப்பட்ட எவரும், அருகிலுள்ள குற்றவியல் |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | | நீதிபதி முன்பு, கைது செய்யப்பட்ட இடத்திலிருந்து நீதிமன்றத்துக்கான பயண நேரம் நீங்கலாக இருபத்தி நான்கு மணி நேரத்துக்குள் ஆஜர்படுத்தப்படுவார். குற்றவியல் நீதிபதியின் உத்தரவின்றி, மேற்சொல்லப்பட்ட எவரும், மேற்சொல்லப்பட்ட நேரத்தை விட அதிகாலத்துக்குக் காவலில் வைக்கப்படமாட்டார். |
| 10. | தம் கடமைகள் உரிமைகள் குறித்தோ, சாட்டப்பட்ட குற்றச்சாட்டு பற்றியோ, நடுநிலையான சுயேச்சையான நீதி மன்றங்களில் நேரிய, வெளிப்படையான விசாரணை பெற ஒவ்வொருவருக்கும் முழுமையான சம உரிமை உண்டு. | 39ஏ. | சம வாய்ப்பு அடிப்படையில், நீதி பேணப்படுமாறு சட்ட அமைப்பு செயல்படுவதை அரசு உறுதி செய்யவேண்டும். குறிப்பாக, பொருளாதார அல்லது வேறு குறைபாட்டின் காரணமாக, நீதி பெறுவதற்கான வாய்ப்பை எந்தக் குடிமகனுக்கும் மறுக்கப்படாமலிருப்பதை உறுதி செய்யும் வகையில், தக்க சட்டங்கள்மூலமோ, திட்டங்கள் மூலமோ அல்லது வேறு விதமாகவோ, இலவச சட்ட உதவி அளிக்கும். |
| | | 304 | (குற்றவியல் நடைமுறைச்சட்டம் விதி 304) ஒரு நீதிமன்ற விசாரணையில் குற்றம் சாட்டப்பட்டவருக்காக வழக்குரைஞர் இல்லாதபோது, அவருக்கு வழக்குரைஞர் வைத்துக் கொள்ளும் அளவுக்கு வசதியில்லை என்று நீதிமன்றத்துக்குப் பட்டால், அரசு செலவில் அவருக்காக ஒரு வழக்குரைஞரை நீதிமன்றம் அமர்த்தித்தரும். |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்தியஅரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | 303. | குற்றவியல் நடைமுறைச்சட்டம் விதி 303 குற்றவியல் நீதிமன்றத்தில் குற்றம்சாட்டப்பட்டு நிற்கும் எவரும் அல்லது இந்தச் சட்டத்தின்கீழ் யாருக்கு எதிராகவும் நடவடிக்கை எடுக்கப்படும் போது அவரும், அவர் விரும்பும் வழக்குரைஞர்மூலம் தன்னைக் காத்துக்கொள்ள அவருக்கு உரிமை உண்டு. |
| | | 327 | குற்றவியல் நடைமுறைச்சட்டம் விதி 327 எந்தக் குற்றவியல் குறித்தாவது விசாரிக்கவோ அல்லது விசாரணை நடத்தவோ கூடும் எந்த இடமும் ஒரு திறந்த நீதிமன்றமெனக் கருதப்படும். பொதுவாக அங்கு வசதியாக எவ்வளவுபேர் கொள்ளுமோ அந்த அளவுக்கு பொதுமக்கள் வரலாம். |
| 11. | விசாரித்து குற்ற நிரூபணம் ஆகும்வரை நிரபராதி என்று தான் கொள்ளப்பட வேண்டும் என்ற உரிமை எல்லாருக்கும் உண்டு. | | பொதுச்சட்டம் என்ற கோட்பாடு நீதியின் ஆட்சி என்ற தத்துவம் குற்றம் உறுதியாகும்வரை நிரபராதி என்று கொள்ளுதல். |
| | | 20(1) | குற்றம் என்று கருதப்படும் செயல் செய்யப்பட்டபோது நடைமுறையில் இருந்த சட்டத்தை மீறியதைத் தவிர வேறு எந்தக் காரணத்துக்காகவும் எவரும் தண்டனை யளிக்கப்படமாட்டார்; குற்றம் புரியப்பட்ட போது நடைமுறையிலிருந்த சட்டத்தால் விதிக்கப்பட்டிருக்க |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | | வேண்டிய அதிகபட்ச தண்டனையை விடக் கூடுதல் தண்டனைக்கு எவரும் ஆளாக்கப்பட மாட்டார். நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தின்படி அனைவரும் பாதுகாப்புக்குரியவர். |
| 12. | ஒருவரது குடும்பம், தனிவாழ்வு, வீடு, கடிதம் எதிலும் சட்டம் அனுமதிக்காத அத்துமீறல் கூடாது. அவரது மதிப்பும் கௌரவமும் தாக்கப்படக்கூடாது. | | |
| 13(1). | தமது நாட்டில் எங்கு வேண்டுமாயினும் சுதந்திரமாக நடமாடும் உரிமையும், வசிக்கும் உரிமையும் எவருக்கும் உண்டு. | 19 | குடிகள் அனைவருக்கும் கீழ்க்கண்ட உரிமைகள் உண்டு. இந்திய நிலப்பரப்பெங்கும் சுதந்திரமாகப் போய்வருதல். இந்திய நிலப்பரப்பில் எங்கும் குடியிருந்து வாழ்தல் |
| (2) | எவரும் எந்த நாட்டையும் விட்டு தாயகம்விட்டுக்கூட போகலாம், தாயகம் திரும்பலாம். | | அத்துடன் பாஸ்போர்ட் சட்ட வாசகங்கள். |
| 14. | வாட்டி வதைக்கப்படுவதிலிருந்து தப்ப எந்த வெளிநாட்டிலும் புகல்தேடி சரணடையும் உரிமையும் அனைவருக்கும் உண்டு. | | அரசமைப்பு சட்டத்தில் தனிப்பட்ட எதுவும் குறிப்பிடப்படாவிடினும் வாட்டி வதைக்கப் படுவதிலிருந்து தப்பிக்க இந்தியா வந்தோர்க்கு, சிலசமயம் லட்சக்கணக்கானவர்களுக்குக்கூட இந்தியா அகதி என்ற நிலை தந்து வந்துள்ளது. |
| 15 (1) | அனைவருக்கும் ஒரு தேசியம் கோரும் உரிமையுண்டு. | 5. | இவ்வரசமைப்புச்சட்டம் நடைமுறையில் வந்த வேளையில் இந்தியப்பரப்பில் வாசம் செய்தவரும் (அ) இந்தியாவில் பிறந்தவரும்; அல்லது (ஆ) பெற்றோரில் ஒருவர் இந்தியாவில் பிறந்தவர் என்ற நிலையினரும் |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | | அல்லது (இ) அந்த வேலைக்கு முந்தைய 5 ஆண்டுகள் பொதுவாக இந்தியப் பரப்பில் வசித்துவந்தவரும் இந்தியக் குடிமகனாவார். |
| (2) | சட்டவிரோதமாக எவரது தேசியமும் பறிமுதல் செய்ய முடியாது. ஒருவர் தம் தேசியத்தை மாற்றிக் கொள்ளும் உரிமையும் தடைசெய்யப்பட முடியாதது. | 9. | தானாக எந்த ஒரு வெளிநாட்டுக்குடியுரிமை பெற்ற எவரும் 5ம் விதியின்கீழ் குடிமகனாவதோ 6ம் விதி அல்லது 8ம் விதிப்படி இந்தியன் என்று கருதப்படுவதோ முடியாது. |
| | | 10. | தொடரும் குடிமை— இந்தப் பகுதியின் மேற்சொன்ன பிரிவுகளின்படி (இது பிரிவு 5 முதல் பிரிவு 9 வரையான பிரிவுகளைக் குறிக்கும்.) இந்தியக் குடிமகனானவரும், அப்படிக் கருதப்பட்டவரும் நாடாளுமன்றம் இயற்றும் ஏதாவதொரு சட்டத்தின் ஏற்பாடுகளுக்குட்பட்டு தொடர்ந்து அத்தகைய குடிமகனாக இருப்பார். வெவ்வேறு சமயம் சார்ந்தவர்களுக்கும் பொருந்தக் கூடியதாக தகுந்த சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. |
| 16. | திருமணம், குடும்பம் ஆகியவற்றைப் பொறுத்தவரை ஆணுக்கும் பெண்ணுக்கும சமவுரிமை. | | |
| 17.(1) | எல்லாருக்கும் சொத்துரிமை உண்டு. | 300ஏ. | சட்டபூர்வமாக அல்லாமல் யாருடைய சொத்தும் அவரிடமிருந்து பறிக்கப்படமுடியாது. |
| (2) | யார்சொத்தும் தன்னிச்சையாக அவரிட மிருந்து பறிக்கப்படக்கூடாது. | | |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்தியஅரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| 18. | ஒவ்வொருவருக்கும் எண்ண சுதந்திரமும், மனசாட்சி சுதந்திரமும் மத சுதந்திரமும் இருக்கிறது. | 25(1) | சுதந்திரமாக தத்தம் மதத்தைக் கடைப்பிடிக்கவும், பின்பற்றவும் பரப்பவும் அனைவருக்கும் சமமான உரிமை உண்டு; மனசாட்சி சுதந்திரமும் உண்டு. |
| 19. | அனைவருக்கும் கருத்து சுதந்திரமும் அதை வெளியிடும் சுதந்திரமும் உண்டு. | 19 | குடிமக்கள் அனைவருக்கும் பேச்சு சுதந்திரமும் கருத்து வெளியிடும் சுதந்திரமும் உண்டு. |
| 20. | அனைவருக்கும் அமைதியாகக் கூடும் உரிமையும் சங்கங்கள் அமைக்கும் உரிமையும் உண்டு. | 19(1) | (ஆ, இ) குடிமக்கள் அனைவருக்கும் அமைதியாக ஆயுதமின்றிக்கூடவும் சங்கங்களும் கழகங்களும் அமைக்கவும் உரிமையுண்டு. |
| 21. | (1) தனது நாட்டு அரசாங்கத்தில் பங்கெடுக்க அனைவர்க்கும் உரிமை உண்டு. | 325. | மதம், இனம், ஜாதி மற்றும் பால் காரணங்களுக்காக மட்டும் எவரும் வாக்காளர்பட்டியலில் இடம் பெறத் தகுதியற்றவராக மாட்டார் அல்லது சிறப்புப் பட்டியலில் இடம் பெறக் கோரமுடியாது. நாடாளுமன்றம் அல்லது மாநில சட்ட அவைகள் அல்லது அவற்றுக்கான தேர் தலுக்கு ஒவ்வொரு நிலப்பரப்புத் தொகுதிக்கும் ஒரு பொது வாக்காளர் பட்டியல் இருக்கும். மதம், இனம், பால், ஜாதி அல்லது இவற்றில் ஏதாவதொன்றின் காரணமாக மட்டுமே எவரும் இந்த வாக்காளர் பட்டியலில் இடம் பெறத் தகுதியற்றவராக மாட்டார்; இந்தத் தொகுதிகளுக்கான சிறப்புப் பட்டியலில் இடம்பெறக் கோரவும் மாட்டார். |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | 326. | மக்களவைக்கும் மாநில சட்டப்பேரவைக்குமான தேர்தல்கள் வயதுற்றோர் வாக்குரிமையின் அடிப் படையில் நடைபெறும் அதாவது, பொருத்தமான சட்ட அவையில் இயற்றப்பட்ட சட்டத்தில் அல்லது சட்டத்தின் கீழ் நிர்ணயிக்கப்பட்ட தேதியில் பதினெட்டு வயதுக்குக் குறையாத இந்தியக் குடிமகனாகிய ஒவ்வொரு நபரும் மற்றும் இந்த அரசமைப்புச்சட்டம் அல்லது பொருத்தமான சட்ட அவையினால் இயற்றப்பட்ட சட்டத்தின்கீழ், குடிஇராமை, மனநலமின்மை, குற்றம், முறைகேடான, சட்டவிரோதமான நடவடிக்கை ஆகிய காரணங்களுக்காக தகுதி இழக்காதவரும், இத்தகைய எந்தத் தேர்தலிலும் வாக்காளராகப் பதிவு செய்யப்படப் பாத்தியப்பட்டவராவார். |
| (2) | தனது நாட்டு அரசாங்க வேலைகளில் சமவாய்ப்பு எனும் உரிமை அனைவருக்கும் உண்டு. | 16(1) | அரசின் எந்த அலுவலகத்துக்கும் நியமிக்கப்படுவது மற்றும் பணிக்கு அமர்த்தப்படுவதும், ஆகிய விஷயங்களில் குடிமக்கள் அனைவருக்கும் சம வாய்ப்பு இருக்கும். |
| | | 16(2) | மதம், இனம், ஜாதி, பால், வம்சாவழி, பிறந்த இடம், வாழுமிடம் அல்லது இவற்றில் ஏதாவது ஒன்றின் காரணமாக மட்டுமே, குடிமக்களில் எவரும் அரசுப் |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | | பதவிக்கோ பணிக்கோ தகுதியற்றவராக மாட்டார், ஓரவஞ்சனை புரியப்படமாட்டார். |
| | (3) மக்களின் விருப்பமே அரசு அதிகாரத்தின் அடிப்படை ஆகும். அந்த விருப்பம் குறித்த காலத்திற்கு ஒரு முறை நடைபெறும் மெய்யான தேர்தல் மூலம் தெரிவிக்கப்படும். தேர்தல்களில் அனைவருக்கும் வாக்குரிமை உண்டு. ஆளுக்கு ஒரு வாக்குதான். | 326 | (மேலே குறிக்கப்பட்டுள்ளது) |
| 22. | சமூகத்தின் உறுப்பு என்ற முறையில் ஒவ்வொருவருக்கும் சமூகப் பாதுகாப்புரிமை உண்டு. தேசிய முயற்சியும் பன்னாட்டுக் கூட்டுறவும் கொண்டு அந்தந்த அரசின் வசதிக்கும் அமைப்புக்கும் ஏற்ப ஒவ்வொருவரும் தனது மரியாதைக்கு அத்தியாவசியமானதும், தன் ஆளுமையை சுதந்திரமாக வளர்த்துக்கொள்ள இன்றியமையாததுமான பொருளாதார, சமூக, கலாசார உரிமைகளை அனுபவிக்கவும் உரிமை உண்டு. | 38(1) | சமூக, பொருளாதார, அரசியல், நீதி, தேசிய வாழ்வின் அனைத்து அமைப்புகளிலும் துலங்கும்படியாக சமூக அமைப்பை உருவாக்கி இயன்றமட்டும் அதைப் பாதுகாப்பதன்மூலம், அரசு மக்கள் நலனைப் பேண வேண்டும். |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| 23 (1) | எல்லாருக்கும் வேலை வாய்ப்பு உரிமை உண்டு. | 41 | தனது பொருளாதார சக்தி மற்றும் வளர்ச்சிக்குட்பட்டு, தனது மக்கள் வேலையின்மை, முதுமை, நோய், ஆற்றலிழப்பு குறைபாடு மற்றும் ஏனைய இயலாமையின் காரணங்களுக்காக அரசு உதவி பெறுதல் உழைக்கும் உரிமை, கல்வி, ஆகியவற்றுக்கு தக்க ஏற்பாடுகளை அரசு செய்யும். |
| (2) | சம வேலைக்கு சம கூலி என்ற உரிமை எல்லாருக்கும் உண்டு. | 39 | குறிப்பாகக் கீழ்க்கண்டவற்றை உருவாக்கும் வகையில் அரசு தனது கொள்கையை நெறிப்படுத்த வேண்டும். அ. குடிமக்கள், ஆண்களும் பெண்களும் சம அளவில், வாழ்க்கைக்கான போதுமான வருவாய் பெறும் உரிமை பெறுதல் |
| (3) | வேலை செய்யும் ஒவ்வொருவருக்கும் நியாயமான நல்லூதிய உரிமை உண்டு. அது அவர் தனக்கும் குடும்பத்துக்கும் மனித மரியாதைக்கு ஏற்ற நல வாழ்வுக்கு வழிவகுப்பதாய் இருக்க வேண்டும். | 43 | தகுந்த சட்டம்/பொருளாதார அமைப்பு/வேறு ஏதாவதொரு வழியில், வேளாண்மை, தொழிற்சாலை அல்லது வேறு விதத் தொழிலாளர்கள், வாழ்வதற்கான ஊதியம், தகுந்த வாழ்க்கைத் தரத்தை உறுதி செய்யும் பணிச் சூழல்கள், ஓய்வு நேரம் மற்றும் சமூக-பண்பாட்டு வாய்ப்புகளை முழுமையாக அனுபவித்தல் ஆகியவற்றை உறுதி செய்யவும்; குறிப்பாக, கிராமப் பகுதிகளில், தனிநபர் அல்லது கூட்டுறவு அடிப்படையில் குடிசைத் தொழில்களை வளர்க்கவும் அரசு முயல வேண்டும். |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| (4) | தம் நலன்களைப் பாதுகாத்துக்கொள்ள தொழிற்சங்கம் அமைக்கவோ இருக்கும் அமைப்பில் சேரவோ ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. | 19(1) | குடிமக்கள் அனைவருக்கும் சங்கங்கள் அமைக்கும் உரிமை உண்டு. |
| 24. | வேலை செய்யும் ஒவ்வொருவருக்கும் ஓய்வுக்கும் பொழுதுபோக்குக்கும் உரிமை உண்டு. இதில் வேலை நேரம் பற்றிய நியாயமான வரம்புகளும், சம்பளத்துடன் கூடிய விடுப்பு பற்றிய உரிமையும் சேரும். | 43 | (முன்னர் குறிப்பிட்டுள்ளது) |
| 25(1) | நலமும் நல்வாழ்வும் தனக்கும் குடும்பத்தினருக்கும் கிட்டும் வகையிலான வாழ்க்கைத்தரம் என்பது அனைவருக்கும் உரிய உரிமை. | 47 | ஊட்டநிலையையும், வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்துதல் மற்றும் பொது ஆரோக்கியத்தை மேம்படுத்தலை அரசு தனது தலையாய கடமைகளுக்கு உட்பட்டதாகக் கருதவேண்டும்; குறிப்பாக மருத்துவக் காரணங்களின்றி, மதுபானங்களையும் உடல்நலத்துக்கு ஊறுவிளைவிக்கும் மருந்துகளையும் உட்கொள்வதற்குத் தடை ஏற்படுத்த முயல வேண்டும். |
| (2) | தாய்மையும் குழந்தைமையும் சிறப்பு கவனிப்புக்கும் உதவிக்கும் உரியவை. | 39 | ஆரோக்கியமாகவும் சுதந்திரம் மற்றும் கண்ணியமான சூழ்நிலையிலும் வளர்வதற்கான வாய்ப்புகளையும் வசதிகளையும் குழந்தைகளுக்கு அளித்தல்; மற்றும் |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | | குழந்தைப் பருவமும் இளமையும் சுரண்டலில் இருந்து பாதுகாக்கப்படுவதும் அறநெறி மற்றும் புறப்பொருள் ரீதியாகக் கைவிடப்படாதிருத்தலும். |
| | | 42. | நியாயமான மனிதாபிமானமுள்ள பணிச்சூழல்களுக்கும் மகப்பேற்று உதவிக்கும் அரசு ஏற்பாடு செய்யும். |
| 26. | எல்லாருக்கும் கல்வி கற்க உரிமை உண்டு. | 45. | இந்த அரசமைப்புச்சட்டம் தொடங்கிய 10 ஆண்டுகளுக்குள் பதினான்கு வயது நிறையும் வரை குழந்தைகளுக்கு கட்டாயமாக இலவசக் கல்விக்கு அரசு முயற்சிக்க வேண்டும். |
| 27. | சமூகத்தின் கலாசார வாழ்வில் சுமுகமாக பங்கேற்கவும், கலைகளை சுகிக்கவும், அறிவியல் மேன்மைகளில் பங்கு பெற்றுப் பயனடையவும் அனைவருக்கும் உரிமை உண்டு. | 51ஏ. | ஒவ்வொரு இந்தியக் குடிமகனுக்கும் நமது பன்முகப் பண்பாட்டின் வளமிகு மரபினை மதித்துப் போற்றிக் காக்க வேண்டிய கடமை இருக்கிறது. |
| 28. | மனித உரிமைப்பிரகடனத்தில் இடம் பெறும் உரிமைகளையும் சுதந்திரங்களையும் அனுபவிக்க வகை செய்யும் வண்ணம் சமூகத்திலும் சர்வதேச அளவிலும் ஒரு அமைப்பு ரீதியான உரிமை அனைவருக்கும் உண்டு. | 38. | சமூக, பொருளாதார, அரசியல் நீதி தேசிய வாழ்வின் அனைத்து அமைப்புகளிலும் துலங்கும்படியாக சமூக அமைப்பை உருவாக்கி இயன்றமட்டும் அதைப் பாதுகாப்பதன்மூலம், அரசு மக்கள் நலனைப் பேண வேண்டும். |
| | | 51 | அரசு கீழ்க்கண்டவற்றுக்கு முயற்சி எடுக்கும். |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | அ. | சர்வதேச சமாதானம் மற்றும் பாதுகாப்பு |
| | | ஆ. | நாடுகளுக்கிடையே நியாயமான கௌரவமான உறவுகள் |
| | | இ. | கட்டமைக்கப்பட்ட ஒரு மக்கள் குழு மற்றொரு குழுவிடம் உறவு வைப்பதில் ஒப்பந்தப் பொறுப்புகளையும் சர்வதேசச் சட்டத்தையும் மதிப்பது வளர்ச்சியுறல். |
| | | ஈ. | சர்வதேசப் பிரச்சினைகளுக்கு பேச்சு வார்த்தைமூலம் தீர்வு காண்பதை ஊக்குவித்தல். |
| 29. | ஒவ்வொருவருக்கும் சமுதாயக் கடமைகள் உண்டு. அவற்றின் மூலம் மட்டுமே அவரது ஆளுமை தடையின்றி முழு வளர்ச்சி பெற இயலும். | 51(A) | அடிப்படைக் கடமைகள்—கீழ்க்கண்டவை, ஒவ்வொரு இந்தியக் குடிமகனின் கடமைகள் ஆகும். |
| | | அ. | அரசியலமைப்புக்குக் கீழ்ப்படிந்து அதன் நோக்கங்களையும், அமைப்புகளையும் மதித்து தேசியக் கொடியையும் தேசிய கீதத்தை மதித்து நடத்தல். |
| | | ஆ. | நமது தேசிய விடுதலைப் போராட்டத்தைத் தூண்டுவித்த உன்னத நோக்கங்களை நினைத்து போற்றிப் பின்பற்றுதல். |
| | | இ. | இந்தியாவின் இறையாண்மையையும், ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்தல். |
| | | ஈ. | நாட்டைக் காப்பதுடன், அழைக்கப்பட்டபோது நாட்டுப்பணி புரிதல். |
| | | உ. | மதம், மொழி, வட்டாரம் மற்றும் பிரிவு சார்ந்த |

| வரிசை எண் | மனித உரிமை பிரகடனம் | விதி எண் | இந்திய அரசமைப்புச் சட்ட வாசகம் |
|---|---|---|---|
| | | | வேறுபாடுகள் அனைத்தையும் கடந்து இந்திய மக்கள் அனைவரிடையேயும் சகோதர உணர்வையும் நல்லிணக்கத்தையும் வளர்த்தல். பெண்களின் கண்ணியத்தைக் குறைக்கின்ற செயல்களை விட்டொழித்தல். |
| | | ஊ. | நமது பன்முகப் பண்பாட்டின் வளமான பாரம்பரியத்தை மதித்துப் போற்றிக் காத்தல். |
| | | எ. | காடுகள், ஏரிகள், ஆறுகள் வன விலங்குகள் உள்ளிட்ட இயற்கைச் சூழலை பாதுகாத்து வளர்த்தல், உயிரினங்களுக்குப் பரிவு காட்டுதல். |
| | | ஏ. | அறிவியல் மனப்பாங்கு, மனிதாபிமானம், ஆராய்ச்சி உணர்வு, சீர்திருத்த மனப்பான்மையை வளர்த்தல். |
| | | ஐ. | பொதுச் சொத்தைப் பாதுகாத்தல், வன்முறையைக் கைவிடுதல். |
| | | ஒ. | நாடு தன்னுடைய முயற்சியிலும் சாதனைகளிலும் தொடர்ந்து முன்னேறும் வகையில் அனைத்துத் துறைகளிலும் தனிமனித மற்றும் கூட்டு நடவடிக்கைகளில் மேன்மைக்குப் பாடுபடுதல். |
| | | | (குறிப்பு: குறிப்பிட்ட விதிகளை முழுமையாகப் படிக்க மனித உரிமைப்பிரகடன விதிகள் 27 முதல் 35 வரையும், இந்திய அரசமைபு விதிகள் 31 முதல் 52வரையும் காண்க.) |

# 3

# மனித உரிமைகள் தொடர்பான இந்தியச் சட்டங்கள்

*மனித உரிமைகளைப் பேணுவதிலும் பாதுகாப்பதிலும் அழுத்தம் தரும் முக்கியமான தேசிய சட்டங்கள் சிலவற்றின் பட்டியல்*

1. இந்திய அரசமைப்புச்சட்டம் (முகப்புரை, பாகம் III, IV IVA அத்துடன் பிரிவு 226, 300, 325-326)
2. மனித உரிமைகள் பாதுகாப்பு சட்டம், 1993

   மனித உரிமைகள் இன்னும் திறமாகப் பாதுகாக்கப் படுவதற்காக இச்சட்டம் தேசிய மனித உரிமைகள் ஆணையம், மாநில மனித உரிமை ஆணையங்கள், மனித உரிமை நீதிமன்றங்கள் ஆகியவற்றை ஏற்படுத்த வகை செய்கிறது.
3. ஷெட்யூல்டு பிரிவினர், பழங்குடிமக்கள் (SC ST) ஆகியோருக்கான தேசிய ஆணையம்

   ஷெட்யூல்டு பிரிவினர்,, பழங்குடியினர் ஆகியோரின் உரிமைகள் இன்னும் திறமாகப் பாதுகாக்கப்படுவதற்காக இந்த தேசிய ஆணையம் அமைக்கப்படவேண்டுமென்று அரசமைப்புச் சட்டத்தின் 338ம் பிரிவுகோருகிறது.
4. சிறுபான்மையினருக்கான தேசிய ஆணையச் சட்டம் 1992

   சிறுபான்மையினர் உரிமைகளை திறமாகப் பாது காப்பதற்காக ஒரு சிறுபான்மையினர் தேசிய ஆணையம் நிறுவுவதற்காக இயற்றப்பட்ட சட்டம்.
5. பிற்படுத்தப்பட்டோருக்கான தேசிய ஆணைய சட்டம், 1993

   ஷெட்யூல்டு பிரிவினரையும், பழங்குடியினரையும், இதர பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்காக ஒரு தேசிய ஆணையம் நிறுவவும், இது தொடர்பான, இதனால் எழுகிற விஷயங்கள் பற்றி வழிவகை செய்யவும் இயற்றப்பட்ட சட்டம்.

6. மகளிர்க்கான தேசிய ஆணையச் சட்டம், 1990

மகளிர் உரிமைகளை இன்னும் திறமாகப் பாதுகாப்ப தற்காக ஒரு தேசிய மகளிர் ஆணையம் நிறுவுவதற்கான சட்டம்.

7. குடிமை உரிமைகள் பாதுகாப்பு சட்டம், 1955

அரசமைப்புச்சட்ட பதினேழாம் பிரிவின்படி தீண்டாமை ஒழிக்கப்படுகிறது. அதை எந்த வழியில் கடைப் பிடிப்பதும் தடை செய்யப்படுகிறது. இந்த சட்டத்தின் மூலம் தீண்டாமையிலிருந்து எழும் எவ்வித இயலாமையையும் நடைமுறைப் படுத்துவது இதன் பிரிவுகளின்கீழ் தண்டிக்கப் படக்கூடிய குற்றமாக ஆக்கப்பட்டுள்ளது.

8. ஷெட்யூல்டு பிரிவினர்,, பழங்குடியினர் (அநியாயங்களைத் தடைசெய்தல்) சட்டம், 1989

ஷெட்யூல்டு பிரிவினர், பழங்குடியினருக்கும் எதிராக அக்கிரமங்கள் இழைக்கப்படுவதைத் தடுக்கவும், அத்தகைய குற்றங்களை விசாரிக்க சிறப்பு நீதிமன்றங்களை அமைக்கவும், அவற்றுக்கு இரையானோருக்கு உதவியும் மறுவாழ்வும் தருவதற்கும் வகை செய்யும் சட்டம்.

9. மனிதர்களைத் துப்புரவாளராக நியமித்தல், உலர் கழிப்பகம் கட்டுதல் (தடைசெயல்) சட்டம், 1993

அரசமைப்புச்சட்ட முகப்புரையில் முழக்கப்படும் நோக்கங்களில் தனிமனிதனின் கவுரவத்துக்கு உறுதியளிக்கும் சகோதரத்துவமும் ஒன்று. 47ம் பிரிவு மக்களின் வாழ்க்கைத் தரத்தை அரசு உயர்த்தவேண்டும், என்றும் அவர்கள் சுகாதாரத்தை வளர்க்கவேண்டும் என்றும் கோருகிறது. அந்த நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக இந்தச் சட்டம் இயற்றப் பட்டுள்ளது. மனிதத் தோட்டியர் நியமனம் உலர் கழிப்பகங் களைக் கட்டுவது, தொடர்ந்து பயன்படுத்துவது ஆகியவற்றைத் தடை செய்யவும், நீர்வசதிக் கழிப்பகங்களை கட்டுவதையும் நிர்வகிப்பதையும் நெறிப்படுத்தவும் இது வகை செய்கிறது.

10. நெறிகெட்ட வியாபார(தடை)சட்டம், 1956

மனிதர்களை வைத்து நெறிகெட்ட வணிகம் நடத்துவதை அரசமைப்புசட்ட 23ம் பிரிவு தடைசெய்கிறது. 1950 மே 9 அன்று இந்தியா மாதர்களையும் பெண்களையும் கொண்டு நெறிகெட்ட வணிகம் செய்வதை ஒழிப்பதற்கான பன்னாட்டு உடன்படிக்கையில் கையெழுத்திட்டது. அதனை நடைமுறைப் படுத்துவதே இந்தச் சட்டம்.

11. மகளிரை அநாகரிகமாக பிரதிநிதிப்படுத்துதல் (தடை செயல்) சட்டம், 1986

விளம்பரங்கள் மூலமும், வெளியீடுகளிலும், எழுத்திலும், படத்திலும் உருவங்களிலும் இன்னும் வேறு எவ்வழியிலும் மகளிரை அநாகரிகமாக பிரதிநிதிப்படுத்துவதைத் தடை செய்வதற்கான சட்டம்.

12. வரதட்சணைத் தடைசட்டம், 1961

வரதட்சணை தருவதும் பெறுவதுமான தீய பழக்கத்தை தடை செய்யும் சட்டம்

13. உடன்கட்டை ஏறுதல் (தடைச்) சட்டம் 1987 கைம்பெண் களையோ மாதர்களையா உயிருடன் எரித்தல், புதைத்தல், சதி என்பது மனித இயற்கையிலான உணர்ச்சிகளுக்கு எதிரானதாகும். அது உள்ளார்ந்த கடமை என்று இந்திய மதம் எதிலும் எங்கும் கூறப்படவில்லை. உடன்கட்டை ஏறுதலையும் அதனைப் போற்றி வணங்குவதையும் வலுவான முறையில் தடுக்கும் சட்டம்.

14. பேறுகால நற்பலன்கள் சட்டம், 1961

தாய்மைக்கால நற்பலன்கள் முதலியவற்றுக்கு வழிவகை செய்யும் சில நிறுவனங்களில் குழந்தை பிறப்புக்கு முன்பும் பின்பும் குறிப்பிட்ட காலத்துக்கு மகளிர் பணிமுறைகளை நெறிப்படுத்தும் சட்டம்.

15. குழந்தைத் திருமண தடை சட்டம், 1929

குழந்தைத் திருமணத்தை அதாவது மணம்புரியும் இருவரில் ஒருவராவது குறிப்பிட்ட வயதுக்குக் கீழே இருக்கும் திருமணத்தை தடுக்கும் நோக்கில் இச்சட்டம் இயற்றப்பட்டது.

16. குழந்தைகள் (உழைப்பு அடமானமாக்கும்) சட்டம், 1933

குழந்தைகளின் உழைப்பை அடமானமாக்குவதையும், உழைப்பு அடகு வைக்கப்பட்ட குழந்தைகளை வேலைக் கமர்த்துவதையும் தடைசெய்யும் சட்டம்.

17. அநாதை இல்லங்களும் தர்ம இல்லங்களும் (மேற்பார்வை-கட்டுப்பாடு) சட்டம், 1960

அநாதை இல்லங்கள், புறக்கணிக்கப்பட்ட மாதர்க்கும் மழலையர்க்குமான காப்பகங்கள், மற்றும் அதுபோன்ற மனை களின் மேற்பார்வைக்கும் கட்டுப்பாட்டுக்கும் அத்தகைய நிறுவனங்களில் நிகழ்த்தப்படும் குற்ற நடவடிக்கைகளை தண்டிக்கவும் வகைசெய்யும் சட்டம்.

18. குழந்தைகள் சட்டம் 1960

நேரடி மத்திய ஆட்சிப் பகுதிகளில் இளங்குற்ற வாளிகளை விசாரித்தல் குழந்தைகளின்மீதான அக்கறை, பாதுகாப்பு, பராமரிப்பு, நல்வாழ்வு பயிற்சி, கல்வி, மறுவாழ்வு ஆகியவற்றுக்கும் வழிசெய்யும் சட்டம்.

19. குழந்தைத் தொழிலாளர் (தடைசெயலும் நெறிசெயலும்) சட்டம் 1986

குறிப்பிட்ட வேலைகளிலும், தொழில்முறைப் பணி களிலும் குழந்தைகளைப் பணியமர்த்துவதை இச்சட்டம் தடை செய்கிறது. அத்தகைய வேலைகள்-பணிகள் என்ற பட்டியலில் ஒரு தொழிலை எப்படி சேர்ப்பது என்ற நடைமுறையை வரைகிறது. தடுக்கப்படாத வேலைகளில் பணியமர்த்தப்படும் குழந்தைகளின் பணிச்சூழல்களை நெறிப்படுத்துகிறது.

20. இளங்குற்றவாளிகள் நீதி சட்டம், 1986

புறக்கணிக்கப்பட்ட குழந்தைகள், இளங்குற்றவாளிகள் ஆகியோரின்மீது அக்கறை, பாதுகாப்பு, அவர்களை நடத்தும் விதம், அவர்கள் மேம்பாடு, புனர்வாழ்வு இளங்குற்றவாளிகள் நீதிமன்றங்கள் பற்றிய தனி அணுகுமுறை ஆகியவை பற்றிப் பேசும் சட்டம்.

21. இளைஞர்(களுக்கு ஊறுவிளைவிக்கும் வெளியீடுகள்) சட்டம் 1956

படங்களுடனோ படங்களின்றியோ-குற்றம், வன்முறை, கொடுமைகள், பயங்கரமான அல்லது மனதைப்புரட்டும் நிகழ்ச்சிகள் கொண்ட கதைகளடங்கிய வெளியீடுகள் இளம்வயதினரைக்கெடுக்கும். அத்தகைய செயல்களை செய்யுமாறு உற்சாகப்படுத்தத் தூண்டவும் கூடும். இளம்வயதினருக்கு தீங்கிழைக்கக்கூடிய வெளியீடுகளைப் பரப்புவதைத் தடை செய்ய இச்சட்டம் முனைகிறது.

22. சாதி தழுவிய இயலாமையை அகற்றும் சட்டம், 1950

இச்சட்டம் வெவ்வேறு இனங்களைச் சார்ந்தவர்களுக் கிடையேயான வழக்குகளில், அவர்களது மதச்சட்டங்கள் புகுந்து மற்றபடி அவர்களுக்கு கிடைத்திருக்க வேண்டிய சொத்தை அடைய முடியாமல் செய்வதை தடுக்கிறது.

23. மனநல சட்டம், 1987

இச்சட்டம் பைத்தியமென்று தீர்மானிப்பது எப்படி என்பதை நெறிப்படுத்துகிறது. மனநோயாளிகளை ஏற்பது, அவர்கள் மீதான அக்கறை, சிகிச்சை ஆகியவை பற்றியதாகும்.

24. கொத்தடிமை முறை (ஒழிப்பு) சட்டம், 1976

அரசமைப்புச்சட்ட 23ஆம் விதி 'பெகர்' மற்றும் அது போன்ற மற்றவகை கட்டாய வேலைவாங்குதலை தடை செய்கிறது. அந்த வகையுரையின் எந்த மீறலும் சட்டப்படி தண்டிக்கப்படக்கூடிய குற்றமாகும் எனவும் கூறுகிறது. சமூகத்தின் நலிந்த பிரிவினரை உடல்ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் சுரண்டுவதைத் தடுப்பதற்காக கொத்தடிமை முறையை ஒழிக்கவும் வகை செய்கிறது.

மற்றும் சில முக்கியச் சட்டங்கள்

1. குழந்தை பிறப்பதற்கு முந்தைய மருத்துவ சோதனை தொழில் நுட்பங்கள் (நெறிப்படுத்தல், தவறாகப் பயன்படுத்துவதைத் தடுத்தல்) சட்டம், 1994
2. மருத்துவபூர்வமான கருச்சிதைவுச்சட்டம், 1971
3. மனித உறுப்புகள் மாற்றுச் சிகிச்சை சட்டம்,
4. தெற்காசிய வட்டாரக் கூட்டுறவு சங்க (சார்க்) உடன்படிக்கை (பயங்கரவாதத்தை அடக்கும்) சட்டம், 1993
5. சுற்றுச்சூழல் பாதுகாப்பு சட்டம், 1986
6. பீடி, சுருட்டு தொழிலாளர் (வேலை..) சட்டம், 1966
7. பீடித்தொழிலாளர் நல நிதி சட்டம், 1976
8. தொழிற்சங்க சட்டம், 1926
9. தொழில் தகராறுகள் சட்டம், 1947
10. தொழிலாளர்களுக்கான இழப்பீடு சட்டம், 1923
11. தொழிலாளர் வேலைகள் நிலையாணைகள் சட்டம், 1946
12. தொழிற்சாலைகள் சட்டம், 1948
13. ஊழியர் அரசு காப்பீடு சட்டம், 1948
14. குறைந்தபட்ச சம்பள சட்டம், 1948
15. ஊழியர் சேகநல நிதிகள், பல்வகை வகையுரைகள் சட்டம், 1952
16. பயிற்சி பெறுவோர் சட்டம், 1961
17. சம ஊதிய சட்டம், 1976
18. சம்பளப்பட்டுவாடா சட்டம், 1936
19. வார விடுமுறைகள் சட்டம், 1942

4

# தேசிய மனிதஉரிமை ஆணையமும் மாநில மனிதஉரிமை ஆணையங்களும்

*1993 செப்டம்பர் 28 பிரகடனப்படுத்தப்பட்ட மனித உரிமைகள் அரசாணையின்படி அவ்வாண்டு அக்டோபர் மாதம் தேசிய மனித உரிமை ஆணையம் உருவாக்கப்பட்டது. இந்த அரசாணை விரைவிலேயே மனித உரிமைகள் பாதுகாப்பு சட்டம் (1993 எண் 10-1994) என்ற பெயரில் சட்டமாக இயற்றப்பட்டது. (இனி இங்கிதை 'சட்டம்' என்று குறிப்போம்) இந்த ஆணையம் முற்றிலும் சுயாட்சி கொண்டதோர் அமைப்பாகும். உறுப்பினர் நியமன முறை, அவர்களின் பதவிக்காலம் பற்றிய உறுதி, அதுபற்றி சட்டமூல உறுதிமொழி, உறுப்பினர்களுக்கு அளிக்கப்படும் பெருமை, ஆணை யத்துக்குப் பொறுப்பான அலுவலர்கள் நியமன முறை அந்த அலுவலர்கள் நடந்துகொள்ளவேண்டிய முறை ஆகியவற்றிலிருந்தும் அதன் நிதி அதிகாரங்களைப் பொறுத்தவரையில் அதற்குள்ள சுயாட்சியிலிருந்தும் அதன் சுயாட்சி பெறப்படுகிறது.*

---

**ஆணையத்தின் அமைப்பாக்கம்**

ஆணையம் கீழ்க்கண்டவர்களைக் கொண்டிருக்க வேண்டு மென சட்டம் உருவகிக்கிறது.

அ. உச்சநீதிமன்ற தலைமை நடுவராயிருந்த ஒருவர் தலைவராக இருப்பார்.

ஆ. உச்சநீதிமன்ற நடுவராயிருக்கும் அல்லது நடுவராயிருந்த ஒருவரும்,

இ. ஏதேனும் ஒரு உயர்நீதிமன்ற நடுவராயிருக்கும் அல்லது இருந்த ஒருவரும்,

ஈ. மனித உரிமைகள் தொடர்பான விஷயங்களில் அறிவோ, நடைமுறை அனுபவமோ கொண்டவர்களிலிருந்து இருவரும் உறுப்பினராயிருப்பர்.

குறிப்பிட்ட சில பணிகளை நிறைவேற்றுவதைப் பொறுத்த அளவுக்கு தேசிய சிறுபான்மையினர் ஆணையத் தலைவர்,

தேசிய ஷெட்யூல்டு பிரிவினர், பழங்குடியினர் ஆணையத் தலைவர்

தேசிய மகளிர் ஆணையத் தலைவர் ஆகியோர் உறுப்பினராகக் கருதப்படுவர்.

இந்திய அரசின் செயலாளருக்கு இணையான மதிப்பில் ஒரு தலைமைச் செயலாளர் இருப்பார். அவர் ஆணையத்தின் தலைமை நிர்வாக அலுவலராகப் பணியாற்றுவார்.

ஆணையத் தலைமையகம் டெல்லியில் இயங்கும். மத்திய அரசின் முன்னனுமதியோடு நாட்டின் பிற இடங்களில் அலுவல கங்கள் ஏற்படுத்திக்கொள்ள வகைசெய்யும் வகையுரை ஒன்றும் சட்டத்தில் உள்ளது.

சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நியமன உரிமை தனித்தன்மை வாய்ந்தது. எவ்வாறெனில், உயரதிகாரக் குழு ஒன்றின் பரிந்துரை களின் பேரில் குடியரசுத்தலைவர் இந்த நியமனங்களைப் புரிவார். அக்குழு கீழ்க்கண்டவர்களைக் கொண்டது.

அ. பிரதமர் — தலைவர்
ஆ. மக்களவையின் அவைத்தலைவர் — உறுப்பினர்
இ. இந்திய அரசின் உள்துறை அமைச்சர் — உறுப்பினர்
ஈ. மக்களவை எதிர்க்கட்சித்தலைவர் — உறுப்பினர்
உ. மாநிலங்களவை எதிர்க்கட்சித்தலைவர் — உறுப்பினர்
ஊ. மாநிலங்களவையின் துணைத்தலைவர் — உறுப்பினர்

உச்சநீதிமன்ற நடுவராக இருப்பவரோ, ஏதேனும் ஒரு உயர்நீதி மன்ற நடுவராக இருப்பவரோ, இந்தியாவின் தலைமை நடுவரைக் கலந்தாலோசிக்காமல் உறுப்பினராக நியமிக்கப்பட மாட்டார்.

உச்சநீதிமன்றம் இது தொடர்பாக நடத்திய விசாரணையின் படி தவறான நடத்தையோ, தகுதியின்மையோ நிரூபிக்கப்பட்டு இவரை இப்பொறுப்பிலிருந்து விலக்குவதற்குப் பரிந்துரை செய்தால் மட்டுமே ஆணையரையோ பிற உறுப்பினரையோ குடியரசுத்தலைவரின் ஆணைமூலம் பதவி நீக்கம் செய்யமுடியும்.

பொறுப்பேற்றதிலிருந்து ஐந்தாண்டு காலமோ, 70 வயது வரையிலோ எது முதலில் வருகிறதோ அதுவரை தலைவர் மற்றும் உறுப்பினர்ளின் பதவிக்காலம் நீடிக்கும். பணிக்காலம்

நிறைவடைந்த பிறகு இவர்கள் இந்திய அரசின்கீழோ, மாநில அரசுகளின் கீழோ மறுபடி எந்தப் பதவியும் வகிக்க முடியாது.

### ஆணையத்தின் அதிகாரிகளும் பிற ஊழியர்களும்

காவல்துறை, புலனாய்வுத்துறை அலுவலர்களையும், காவல்துறை தலைமை இயக்குநர் நிலைக்குக் குறையாத ஒரு அலுவலர் ஆகியோருடன் தலைமைச் செயலர் தவிர, ஆணையத்தின் பணிகளை திறம்பட ஆற்றுவதற்குத் தேவையான பிற அலுவலர்களையும் ஊழியர்களையும் மத்திய அரசு ஆணையத்துக்கு அளிக்கும். மற்ற நிர்வாக, தொழில்நுட்ப, அறிவியல் ஊழியர்களை, ஆணையம் இதற்கென மத்திய அரசு உருவாக்கிய விதிகளுக்கிசைய நியமித்துக் கொள்ளலாம்.

### மனித உரிமை பற்றிய வரையறை

சட்டத்தின் இரண்டாம் பிரிவின்படி "மனித உரிமைகள்" என்பது அரசமைப்புச் சட்டத்தில் உறுதி செய்யப்பட்டோ, பன்னாட்டு உடன்படிக்கையில் பொறிக்கப்பட்டோ உள்ளபடி தனிமனிதர்களின் உயிர், உரிமை, சமத்துவம், கண்ணியம் ஆகியவை குறித்த உரிமைகள் என்று பொருள்படும். அவை இந்திய நீதிமன்றங்கள் மூலம் வசப் படுத்திக் கொள்ளப்படக் கூடியவையாயும் இருக்கும். "பன்னாட்டு உடன்படிக்கைகள்" என்பது ஐ.நா. பொதுச்சபை 1966டிசம்பர் 16 அன்று நிறைவேற்றி ஏற்றுக்கொண்ட இரு உடன்படிக்கைகளான பொருளாதார சமூக கலாச்சார உரிமைகள் பற்றிய பன்னாட்டு பிரகடனம் குடியுரிமையும் அரசியல் உரிமையும் பற்றிய பன்னாட்டு உடன்படிக்கை ஆகியவற்றைக் குறிக்கும்.

### ஆணையத்தின் பணிகள்

சட்டம் ஆணையத்துக்குக் கீழ்க்கண்ட பணிகளை விதித்துள்ளது:—

அ. (i) மனித உரிமை மீறல் அல்லது அத்தகைய மீறலைத் தூண்டுதல் அல்லது

(ii) ஒரு பொது ஊழியர் அத்தகைய மீறலைத் தடுப்பதைப் புறக்கணித்தமை

ஆகிய புகார்கள் குறித்த பாதிக்கப்பட்டவரோ, அவர் சார்பாக பிறரோ செய்யும் முறையீட்டின் பேரிலோ தானாகவோ விசாரணை செய்தல்.

ஆ. மனித உரிமை மீறப்பட்டதான குற்றச்சாட்டு சம்பந்தப் பட்டதாக ஒரு நீதிமன்றத்தின் முன்புள்ள வழக்கு

விசாரணையில், அந்த நீதிமன்றத்தின் அனுமதியுடன் தானும் கலந்துகொள்ளுதல்;

இ. சிகிச்சை, சீர்திருத்தம் அல்லது பாதுகாப்பு ஆகிய காரணங் களுக்காக மனிதர்கள் தங்க வைக்கப்பட்டோ அடைத்து வைக்கப்பட்டோ உள்ள, மாநில அரசின் கட்டுப்பாட்டிலுள்ள சிறைகள் அல்லது வேறுவித நிறுவனங்களுக்கு, அங்கு வசிப் போரின் வாழ்க்கைத் தரம்பற்றிக் கண்டறிய சம்பந்தப்பட்ட மாநில அரசுக்குத் தெரிவித்துவிட்டு சென்று காணுதல், பரிந்துரைகள் செய்தல்;

ஈ. அரசமைப்புச் சட்டத்தில் அல்லது குறிப்பிட்ட காலகட்டத்தில் நடைமுறையில் உள்ளதோர் சட்டத்தில் வகை செய்யப் பட்டோ அல்லது அத்தகைய சட்டத்தின்கீழோ வழங்கப்பட்ட மனித உரிமைகள் பாதுகாப்புக்கான ஏற்பாடுகளை மறுபரிசீலனை செய்தலும் அவற்றைப் பயனுள்ள வகையில் நடைமுறைப்படுத்துவதற்கான நடவடிக்கைகளைப் பரிந்துரை செய்தலும்

உ. மனித உரிமைகளை அனுபவிப்பதற்கு ஊறுசெய்யும் பயங்கரவாதச் செயல்கள் உள்ளிட்ட காரணிகளை பரிசீலித்து தக்க நிவர்த்தி நடவடிக்கைகளையும் பரிந்துரைத்தல். ,

ஊ. மனித உரிமைகள் குறித்த உடன்படிக்கைகள் முதலிய பன்னாட்டு ஆவணங்களை ஆய்தலும் அவற்றை பலனுள்ள வகையில் நடைமுறைப் படுத்துவதற்கான பரிந்துரைகள் வழங்குதலும்;

எ. மனித உரிமைகள் ஆராய்தல், ஆய்வுகளுக்கு உதவுதல்.

ஏ. சமூகத்தின் பல்வேறு பிரிவினரிடையிலும் மனித உரிமைக் கல்வியைப் பரப்புதல்; வெளியீடுகள், செய்தி ஊடகங்கள், கருத்தரங்குகள் ஏனையபிற வழிகள் மூலம் இவ்வுரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்காக உள் காப்பு ஏற்பாடுகள் பற்றிய அறிதலை வளர்த்தல்.

ஐ. மனித உரிமைத்துறையில் பணியாற்றும் அரசுசாரா அமைப்புகள் மற்ற நிறுவனங்கள் ஆகியோரின் முயற்சிகளை ஊக்குவித்தல்.

ஒ. மனித உரிமைகளைப் பேணுவதற்குத் தேவை என்று ஆணையம் கருதும் ஏனைய பணிகள்.

**முறையீடுகளைக் கையாளுவதற்கான நடைமுறைகள்**

முறையீடுகள், முழுமையானவைகளாக இருக்கவேண்டும். அவை

இந்தியிலோ, ஆங்கிலத்திலோ அரசமைப்புச்சட்டத்தின் எட்டாவது அட்டவணையில் இடம் பெற்றுள்ள வேறு எந்த மொழியிலுமோ இருக்கலாம். அவற்றுக்கு கட்டணம் ஏதும் கட்டவேண்டியதில்லை. ஆணையம் தேவை என்று நினைத்தால் அதிகத் தகவல்கள் கோரலாம், புகார்களுக்கு ஆதரவாக வாக்குமூலம் பதியுமாறு கோரலாம். ஆணையம் தனது முடிவுப்படி தந்தி மூலமும் புகைப்பட அஞ்சல் (FAX) மூலமும் வரும் புகார்களையும் ஏற்றுக் கொள்ளலாம்.

### ஏற்கப்பட முடியாத முறையீடுகள்

பொதுவாக கீழ்க்கண்ட வகை முறையீடுகளை ஆணையம் ஏற்பதில்லை

அ. முறையீட்டுக்கு ஓராண்டுகாலம் முன்பு நிகழ்ந்த சம்பவங்கள் குறித்தவை.

ஆ. நீதிமன்றத்தின் முன் விசாரணையிலுள்ள விஷயங்கள்.

இ. மேலோட்டமானவை, மொட்டைக்கடிதங்கள், பொய்ப்பெயர் கொண்டெழுதப்படுபவை;

ஈ. சில்லறை விஷயங்கள்;

உ. ஆணையத்தின் எல்லைக்குப்புறம்பான செய்திகள்

ஊ. ஊழியம் தொடர்பானவை

### விசாரணை குறித்த அதிகாரங்கள்

சட்டத்தின்கீழ் புலனாய்வுகள்-விசாரணைகள் ஆகியவற்றில் ஆணையத்துக்கு பரந்துவிரிந்த அதிகாரங்கள் தரப்பட்டுள்ளன. ஆணையம் சட்டத்தின்கீழாக முறையீடுகளை விசாரிக்கும்போது, உரிமையியல் நடைமுறை விதிகள் 1908ன்கீழ் ஒரு உரிமையியல் நீதிமன்றத்துக்கு உரிமையியல் வழக்குகளை விசாரிக்கும்போது என்னென்ன அதிகாரங்கள் உண்டோ அவையனைத்தும் உண்டு— குறிப்பாக, கீழ்க்கண்ட விஷயங்களில்.

அ. சாட்சி கூறவருமாறு ஆணைபிறப்பித்தல்; சாட்சிகள் வந்தே தீரும்படி செய்தல்; சாட்சிகளை பிரமாணமெடுக்கச் செய்து விசாரித்தல்

ஆ. ஆவணங்களைக் கண்டுபிடித்தல், தன்முன் படைக்கச் செய்தல்

இ. எழுத்துபூர்வமான வாக்குமூலங்களைப் பெறுதல்

ஈ. எந்த நீதிமன்றத்திலிருந்தும், எந்த அலுவலகத்திலிருந்தும் எந்தப் பொது ஆவணத்தையும் அல்லது நகலையும் கேட்டுப்பெறல்

உ. சாட்சிகளை விசாரிக்கவோ, ஆவணங்களைப் பரிசீலிக்கவோ நியமனங்கள் செய்தல்.

ஊ. அவ்வப்போது நிர்ணயிக்கப்படும் மற்ற விஷயங்கள்.

### புலனாய்வுப் பணியாளர்கள்

மனித உரிமை மீறல்கள் குறித்த முறையீடுகளைப் புலனாய்வு செய்ய ஆணையத்துக்கென்றே புலனாய்வுப் பணியாளர்கள் உண்டு.

மத்திய அரசிடமிருந்தோ எந்தவொரு மாநில அரசிடமிருந்தோ எந்த அலுவலின் எந்த நிறுவனத்தின் பணிகளைக் கேட்டுப்பெறவும் ஆணையத்துக்கு உரிமையுள்ளது. இவையன்றியும்கூட, பொருத்தமான இடங்களில் வெளியாளர்களை புலனாய்வாளராகவோ, தனது பார்வையாளராகவோ ஆணையம் அமர்த்திக் கொள்ளும்.

### மனுக்களை விசாரித்தல்

மனிதஉரிமை மீறல் முறையீடுகளை விசாரிக்கும்போது ஆணையம் மத்திய அரசு, மாநில அரசுகள், அவற்றுக்குக் கீழ்ப்பட்ட அமைப்புகள், நிறுவனங்கள் யாரிடமிருந்தும் தான் குறிக்கும் காலவரையறைக்குள் வேண்டுமெனத் தகவல்களைக் கோரிப்பெறலாம், அறிக்கைகள் வேண்டிப் பெறலாம். குறித்தகாலத்தில் தகவலோ அறிக்கையோ கிடைக்காவிட்டால் ஆணையம் தன் விசாரணையைத் தன்போக்கில் நடத்தலாம். மாறாக தகவலோ அறிக்கையோ கிடைத்து, ஆணையம் மேற்கொண்டு விசாரணை தேவையில்லை என்று கருதினாலோ, அல்லது சம்பந்தப்பட்ட அரசு அல்லது அமைப்பு உரிய நடவடிக்கை எடுத்துள்ளது அல்லது எடுக்கத் துவங்கிவிட்டது என்று கருதினாலோ, விசாரணையைத் தொடராமல் முறையிட்டவருக்கு அதற்கேற்ப தெரிவிக்கலாம்.

### விசாரணையின் பின் நடவடிக்கைகள்

விசாரணை முடிந்தபின் ஆணையம் கீழ்வரும் எந்த நடவடிக்கையும் மேற்கொள்ளலாம்.

1. விசாரணைமூலம் ஏதேனும் மனித உரிமைமீறல் நடந்திருப்பதாகவோ, பொதுஊழியர் யாரோ அத்தகையதொரு மீறலைத் தடுப்பதில் கவனக்குறைவாக நடந்திருப்பதாகவோ ஆணையத்துக்குத் தெரிய வந்தால், சம்பந்தப்பட்ட மனிதர்(கள்) மீது குற்றவழக்குத் தொடருமாறு அல்லது வேறு தக்க நடவடிக்கை எடுக்குமாறு சம்பந்தப்பட்ட அரசு/அமைப்புக்கு பரிந்துரைக்கலாம்.
2. உச்சநீதிமன்றத்தையோ, சம்பந்தப்பட்ட உயர்நீதிமன்றத்தையோ அந்நீதிமன்றம் தேவையென்று கருதும், ஆணைகளோ,

நடவடிக்கை நெறிகளோ, நீதிப்பேராணைகளோ வழங்குமாறு கோரி அணுகலாம்.

3. பாதிக்கப்பட்டவருக்கோ அவரது குடும்பத்தினருக்கோ தான் உரியதெனக் கருதும் உடனடியான இடைக்கால நிவாரணம் வழங்குமாறு சம்பந்தப்பட்ட அரசாங்கத்துக்கோ/சம்பந்தப்பட்ட நிறுவனத்துக்கோ பரிந்துரை செய்யலாம்.
4. அடுத்து வரும் 5ம் பிரிவின் உரைகளுக்குக் கட்டுப்பட்டு அறிக்கையின் நகலொன்றை முறையீட்டாளர் அல்லது அவரது பிரதிநிதிக்குத் தரலாம்.
5. சம்பந்தப்பட்ட அரசு அல்லது நிறுவனத்துக்கு விசாரணை அறிக்கையையும் அதன்மீது தனது பரிந்துரைகளையும் ஆணையம் அனுப்பும். அந்த அரசாங்கம் அல்லது நிறுவனமும் ஒரு மாதத்துக்குள், அல்லது ஆணையம் அனுமதிக்கும் காலத்துக்குள், தான் எடுத்த எடுக்கவிருக்கும் நடவடிக்கைகள் உட்பட அவ்வறிக்கை தொடர்பான தனது விளக்கங்களை ஆணையத்துக்குத் தெரிவிக்க வேண்டும்.
6. விசாரணை அறிக்கையையும் அத்துடன் சம்பந்தப்பட்ட அரசோ நிறுவனமோ ஏதேனும் விளக்கம் தந்திருந்தால் அதனையும், அந்த அரசு அல்லது நிறுவனம் ஆணையப் பரிந்துரைகளின் மீது எடுத்த/எடுக்கவுள்ள நடவடிக்கைகளையும் ஆணையம் வெளியிடும்.

**ஆயுதப் படையில் பணிபுரிவோரைக் குறித்த நடைமுறைகள்**

இந்த சட்டத்தைப் பொறுத்தவரையில், ஆயுதப் படையாளர் என்ற தொடர் தரைப்படை, கடற்படை, வான்படை ஆகியவற்றுடன் இந்திய ஒன்றியத்தின் மற்றெந்த ஆயுதப் படையையும் குறிக்கும். மனித உரிமை மீறல் முறையீடுகளில் மற்றபொது ஊழியர்கள் மீதானவைகளைப் பொறுத்த நடைமுறையிலிருந்து மாறுபட்ட நடைமுறையை ஆயுதப்படையினர் தொடர்பான மீறல்களுக்காக சட்டம் உருவகம் செய்துள்ளது.

1. சட்டத்தில் பிற இடங்களில் என்ன சொல்லப்பட்டிருந்தாலும் ஆயுதப்படையினர் மீதான மனித உரிமை மீறல்களைப் பொறுத்தமட்டிலும் ஆணையம் கீழ்க்கண்ட நடைமுறையைப் பின்பற்றும்

   அ. ஆணையம் தானாகவோ, தனக்கு வந்த ஒரு விண்ணப் பத்தின் பேரிலோ மத்திய அரசிடமிருந்து ஒரு அறிக்கை கோரலாம்.

ஆ. அறிக்கை கிடைத்தபிறகு, அறிக்கையில் உள்ளதைப் பொறுத்து, முறையீட்டின்மீதான நடவடிக்கையை அத்துடன் நிறுத்திக் கொள்ளலாம் அல்லது அரசுக்கு பரிந்துரைகள் செய்யலாம்.

2. பரிந்துரைகள்மீது தான் எடுக்கும் நடவடிக்கைகள் பற்றி மத்திய அரசு மூன்று மாதத்துக்குள்ளோ ஆணையம் அதற்குமேல் கொடுக்கும் காலவரம்புக்குள்ளோ ஆணையத்துக்குத் தெரிவிக்க வேண்டும்.
3. தனது அறிக்கை, அறிக்கைமீதான தனது பரிந்துரைகள், தன் பரிந்துரைகள் மீது அரசு எடுத்த நடவடிக்கை ஆகியவற்றை ஆணையம் வெளியிடும்.
4. ஆணையம் மேற்சொன்ன அறிக்கையின் நகலொன்றை முறை யீட்டாளருக்கோ, அவரது பிரதிநிதிக்கோ அளிக்கும்.

### அறிக்கை/பரிந்துரை அளிக்கப்படும் மத்திய அரசு/மாநில அரசுகள்/பிற அமைப்புகள் ஆகியவற்றின் பொறுப்பு

மத்திய அரசு/மாநில அரசு/அமைப்பு ஆகியவை ஆணையத்தின் அறிக்கை/ பரிந்துரைகள்மீது தான் எடுத்த நடவடிக்கைகள் பற்றி பொதுவான முறையீடுகளைப் பொறுத்தவரை ஒரு மாதத்துக்குள்ளும், ஆயுதப் படையினர் பற்றிய முறையீடென்றால் மூன்று மாதத்துக் குள்ளும் தனது விளக்கத்தை அல்லது தான் எடுத்த நடவடிக்கைகள் பற்றிய தகவலை அளிக்கவேண்டும்.

### ஆணையத்தின் ஆண்டறிக்கையும் சிறப்பறிக்கைகளும்

மத்திய அரசுக்கும் சம்பந்தப்பட்ட மாநில அரசுகளுக்கும் ஆணையம் ஆண்டறிக்கை சமர்ப்பிக்க வேண்டும். ஆண்டறிக்கை வரை காலந்தாழ்த்தக்கூடாத அளவு அவசரமும் முக்கியத்துவமும் உள்ளதென தான் நினைக்கும் எந்த விஷயம் குறித்தும் ஆணையம் எப்போது வேண்டுமானாலும் சிறப்பறிக்கைகள் சமர்ப்பிக்கலாம்.

மத்திய அரசும், சம்பந்தப்பட்ட மாநில அரசுகளும் ஆணை யத்தின் ஆண்டறிக்கை, சிறப்பறிக்கை(கள்) ஆகியவற்றை ஆணையத்தின் பரிந்துரைகளின் மீது தாம் எடுத்த, எடுக்கவுள்ள நடவடிக்கைகள் பற்றிய அறிக்கையுடன், அரசு பரிந்துரைகளை ஏற்காத இடங்களில் அப்படி ஏற்காமைக்கான காரணங்கள் பற்றிய அறிக்கையுடன் நாடாளுமன்றத்தின் இரு அவைகள்/மாநில சட்டமன்றத்தின் இரு அவைகள் முன்பு சமர்ப்பிக்கவேண்டும்.

### மாநில மனித உரிமை ஆணையங்கள்

மாநில அரசுகள் அந்தந்த மாநிலத்தில் மாநில மனித உரிமை ஆணையங்கள் அமைக்க வழிசெய்யும் வகையுரை ஒன்றும் சட்டத்தில் உள்ளது. மாநில ஆணையத்தில்,

அ. ஒரு உயர்நீதிமன்றத்தில் தலைமை நடுவராக இருந்த ஒருவர் தலைவராகவும்,

ஆ. ஒரு உயர்நீதிமன்றத்தில் நடுவராக இருந்த/இருக்கின்ற ஒருவரும்,

இ. அந்த மாநிலத்தில் மாவட்ட நீதிபதியாக இருந்த/இருக்கிற ஒருவரும்,

ஈ. மனித உரிமைகள் தொடர்பான விஷயங்களில் அறிவோ, நடைமுறை அனுபவமோ கொண்டவர்களிலிருந்து இருவரும் உறுப்பினராக இருப்பர்.

மாநில ஆணையத்திற்கு தலைமை நிர்வாகியாக ஒரு செயலர் இருப்பார். மாநில ஆணையம் அவருக்கு அளிக்கும் அதிகாரங் களைப் பயன்படுத்துவார், கடமைகளை நிறைவேற்றுவார். மாநில அரசு அறிவிக்கை வழியே குறிப்பிட்டுரைக்கும் ஊரில் மாநில ஆணையத் தலைமையகம் இயங்கும்.

### மாநில ஆணைய அமைப்பாக்கம்

மாநில ஆணையத் தலைவரும் பிற உறுப்பினர்களும், அரசினால் கீழ்க்கண்டோர் அடங்கிய ஒரு குழுவின் பரிந்துரைகளைப் பெற்று நியமிக்கப்படுவர்:

அ. முதலமைச்சர் குழுத்தலைவராகவும்

ஆ. சட்டப்பேரவைத் தலைவர்

இ. மாநில உள்துறை அமைச்சர்

ஈ. சட்டப்பேரவை எதிர்க்கட்சித் தலைவர் ஆகியோர் உறுப்பின ராகவும் இருப்பர்

சட்டமேலவை உள்ள மாநிலங்களில் அதன் அவைத்தலைவர், எதிர்க்கட்சித் தலைவர் ஆகியோரும் உறுப்பினராக இருப்பர். அந்த மாநிலத்து உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியைக் கலந்தோலோசி யாமல் உயர்நிதிமன்ற நீதிபதியாக இருப்பவரோ மாவட்ட நீதிபதியாக இருப்பவரோ ஆணையை உறுப்பினராக நியமிக்கப் படமாட்டார்கள்.

தேசிய ஆணையம் உருவாக்கும் செயல்முறைகளின்படியும் குடியரசுத் தலைவரின் ஆணையின் வழியாகவும் மட்டுமே மாநில ஆணையத்தலைவரோ உறுப்பினர்களோ பதவிநீக்கம் செய்யப்படமுடியும்.

பொறுப்பேற்றதிலிருந்து ஐந்தாண்டு காலமோ, எழுபது வயது வரையிலோ எது முதலில் வருகிறதோ அதுவரை மாநில ஆணையத் தலைவரின் பணிக்காலம் நீடிக்கும். எழுபது வயது என்ற மேல் வரம்புக்குட்பட்டு உறுப்பினர்கள் மீண்டும் நியமிக்கப்படலாம். பணியிலிருந்து விலகிய பிறகு தலைவரும் சரி உறுப்பினர்களும் சரி இந்திய அரசின் கீழோ, மாநில அரசின்கீழோ மறுபடி எந்தப் பதவியும் வகிக்க முடியாது.

### மாநில ஆணையத்தின் அதிகாரிகளும் பிற ஊழியர்களும்

மாநில அரசின் செயலர் நிலைக்குக் குறையாத ஒரு அதிகாரியை ஆணையச் செயலர் பொறுப்புக்காக மாநில ஆணையத்துக்கு அளிக்கும் மாநில அரசு, காவல்துறை தலைமைக் கண்காணிப்பாளர் (ஐ.ஜி) நிலைக்குக் குறையாத ஒரு அதிகாரியின் தலைமையிலான காவல்துறை, புலனாய்வுத் துறையதிகாரிகள் ஆகியோரையும், ஆணையத்தின் கடமைகளைத் திறம்பட நடத்துவதற்குத் தேவைப் படும் பிற அலுவலர்களையும் ஊழியர்களையும் அளிக்கும். மற்ற நிர்வாக, தொழில்நுட்ப, அறிவியல் ஊழியர்களை ஆணையம் நியமித்துக்கொள்ளலாம்.

### மாநில ஆணையத்தின் பணிகள்

இந்திய அரசமைப்புச்சட்டத்தின் ஏழாவது அட்டவணையின் இரண்டாவது பட்டியல் (மாநிலப்பட்டியல்) மூன்றாம் பட்டியல் (மாநில-மைய பொதுப்பட்டியல்) ஆகியவற்றில் வரும் விஷயங்கள் தொடர்பான மனித உரிமை மீறல்களை மட்டுமே மாநில ஆணையம் விசாரிக்க முடியும். அதுபோன்ற மீறல்களிலும் ஏற்கெனவே தேசிய ஆணையமோ, சட்டப்படியான வேறு ஆணையம் எதுவுமோ ஏற்கெனவே விசாரித்துக் கொண்டிருக்கும் எதையும் மாநில ஆணையம் விசாரிக்க முடியாது. இந்த இரண்டுக்கும் உட்பட்டு அதன் அதிகாரங்கள், புலனாய்வு நடைமுறைகள், விசாரணை, விசாரணைக்குப் பிந்தைய நடவடிக்கைகள் ஆகியவை எல்லாம் தேசிய ஆணையத்திற்கு உள்ளவை போன்றனவேயாகும்.

### மாநில ஆணைய ஆண்டறிக்கைகளும், சிறப்பறிக்கைகளும்

சம்பந்தப்பட்ட மாநில அரசுக்கு மாநில ஆணையம் ஆண்டறிக்கை சமர்ப்பிக்க வேண்டும். அத்துடன் அதன் கருத்தில் அவசரமும் அவசியமுமாகப்படும் எது குறித்தும் எப்போது வேண்டுமாயினும் சிறப்பறிக்கைகள் சமர்ப்பிக்கலாம். ஆண்டறிக்கையையும்

சிறப்பறிக்கைகளையும் மாநில சட்டமன்றத்தின் முன் வைக்க வேண்டியது மாநில அரசுக்கு விதிக்கப்பட்டுள்ள கடமையாகும்.

### மனிதஉரிமை நீதிமன்றங்கள்

மனித உரிமை மீறல்களால் எழும் குற்றங்களின் விரைவான விசாரணைக்கு ஏற்பாடு செய்யும் நோக்கில், மாநில உயர்நீதிமன்றத் தலைமை நடுவரின் ஒப்புதலுடன், அத்தகைய குற்றங்களை விசாரிப்பதற்காக ஒவ்வொரு மாவட்டத்திலும் மனித உரிமைகள் நீதிமன்றமாக மாவட்டக் குற்றவியல் நீதிமன்றங்களை மாநில அரசு குறிப்பிட்டுரைக்கலாம். ஒரு குற்றவியல் அரசு வழக்கறிஞரையும் ஒவ்வொரு குற்றவியல் நீதிமன்றத்துக்கென்றும் அரசு குறிப்பிட்டுரைக்கலாம். அல்லது மனித உரிமைகள் நீதிமன்றத்தில் அத்தகைய வழக்குகளை நடத்துவதற்காக குறைந்தது ஏழாண்டுகாலம் வழக்குரைஞராக தொழில்நடத்தி வரும் ஒருவரை சிறப்பு-குற்றவியல் அரசு வழக்கறிஞராக நியமிக்கலாம்.

### நிதி, கணக்குகள், தணிக்கை

மத்திய அரசும்/அந்தந்த மாநில அரசும் இதற்கென்று உரிய ஒதுக்கீடு ஏற்படுத்திக்கொண்டு தேசிய ஆணையம்/மாநில ஆணையத்துக்கு இச்சட்டத்தின் நோக்கங்களுக்கான செலவுகளுக்காக மானியமாக நிதியுதவி அளிக்கும். இந்திய தலைமைக் கணக்குத் தணிக்கையாளர் உதவியுடன் நிர்ணயிக்கப்படும் தகுந்த அமைப்பில் ஆணையக் கணக்குகள் பராமரிக்கப்படவேண்டும். அவராலோ அவரால் நியமிக்கப்படுபவராலோ அவை தணிக்கை செய்யப்படவேண்டும். இந்தத் தலைமை கணக்குத் தணிக்கையாளர் சான்றுரையுடன் கூடிய கணக்குகளும் தணிக்கை அறிக்கையும், தேசிய ஆணையத்தைப் பொறுத்தவரை மத்திய அரசால் நாடாளுமன்றத்தின் அவைகள் முன்பும் மாநில ஆணையங்களைப் பொறுத்தவரை மாநில அரசால் மாநிலச் சட்டமன்றமுன்பும் வைக்கப்படவேண்டும்.

### பொது

மாநிலக் குழுவின் முன்பு விசாரணை நடந்துகொண்டிருக்கும் எது பற்றியும் தேசிய ஆணையமும், தேசிய ஆணையத்தின் முன்பு விசாரணை நடந்துகொண்டிருக்கும் எது பற்றியும் மாநில ஆணையமும் விசாரணை நடத்த முடியாது. சட்டத்தின்கீழ் உருவாக்கப்பட்ட வேறு எந்த ஆணையத்தின் முன்பாவது விசாரணை நடந்துகொண்டிருக்கின்ற எந்த விஷயத்தையும் தேசிய

ஆணையமோ, மாநில ஆணையங்களோ விசாரிப்பதும் முடியாது.

தேவையென்று அரசாங்கம் நினைத்தால், வேறு எந்த சட்டத்தில் என்ன கூறப்பட்டிருந்தாலும், மனித உரிமை மீறல்களி லிருந்து எழும் குற்றங்களை விசாரிக்கவும் வழக்கு நடத்தவும், தேவையான காவல்துறை அதிகாரிகளைக் கொண்ட சிறப்புக் குழுவையோ குழுக்களையோ நியமிக்கலாம்.

மத்திய அரசோ, மாநில அரசோ (இந்த) சட்டத்தின் வகை யுரைகளை நடைமுறைப்படுத்துவதற்காக விதிகளை இயற்றிக் கொள்ளலாம். அப்படி உருவாக்கப்பட்ட விதிகள் தேசிய மனித உரிமை ஆணையம் பொறுத்ததாயின் நாடாளுமன்ற இரண்டவைகள் முன்பும், மாநில ஆணையம் பற்றியதாயின் அந்த மாநிலச் சட்ட மன்றத்தின் முன்பும் மொத்தம் 30 நாட்களுக்கு வைக்கப்பட வேண்டும்.

# மனித உரிமைக் கல்வி

கல்வி உரிமைக்கு எல்லா மனித உரிமை ஆவணங்களும் மரியாதைக் குரியதோர் இடத்தை அளிக்கின்றன. மனித உரிமைகளைப் பேணுவதில் கல்விக்குள்ள முக்கியத்துவத்தையும் அவை வலியுறுத்து கின்றன. ஐ.நா. பொதுச்சபை "இந்த மனித உரிமைகள் பற்றிய சர்வதேசப் பிரகடனம் ஒவ்வொரு மனிதனையும், சமூகத்தின் ஒவ்வொரு உறுப்பையும் நோக்கமாகக் கொண்டது. இந்த உரிமை களுக்கும் சுதந்திரங்களுக்கும் மரியாதையை வளர்க்கக் கற்பித்தல் மூலமும் கல்வி மூலமும் முயற்சிக்கும்" என முழங்கியது. குழந்தைகள் உரிமை பற்றிய உடன்படிக்கையின் பல பிரிவுகள் கல்விக்கான உரிமையின் பல்வேறு அம்சங்களைப் பற்றிப் பேசுகின்றன. அவற்றில் ஒன்று 'மனித உரிமைகள் மீதும் சுதந்திரங்களின் மீதும் மரியாதை ஏற்படுத்தும் வகையில் குழந்தைகளின் கல்வி அமைய வேண்டும்' என்கிறது.

பகுதி 2இல் வெளியிடப்பட்டுள்ள வியன்னா பிரகடனத்தின் ஒரு பகுதி மனித உரிமைக்கல்வி பற்றி அமைந்துள்ளது.

மனித உரிமைக் கல்வியைப் பரப்புவதில் யுனெஸ்கோ தலைமைப்பணி செய்துள்ளது. அது 1960இல் நிறைவேற்றிய 'கல்வியில் பாகுபாட்டுக்கு எதிரான யுனெஸ்கோ உடன்படிக்கை'யும் 1955இல் ஏற்றுக்கொண்ட "அமைதிக்கும் மனித உரிமைக்கும் மக்களாட்சிக்குமான கல்வி பற்றிய ஒருங்கிணைந்த நடவடிக்கை அமைப்புத்திட்டமும் பிரகடனமும்" என்ற ஆவணமும் அடுத்து வரும் பக்கங்களில் தரப்படுகின்றன. கல்வி பற்றிய பல்வேறு ஆணை யங்களின் அறிக்கைகளும் கல்விக்கொள்கை பற்றிய அறிக்கைகளும் கல்விக்கான உரிமையின் முக்கியத் துவத்தையும் மனித உரிமைக் கல்வியையும் இந்தியாவில் கல்விச் சீர்திருத்தத்துக்கும், கல்வி மேம்பாட்டுக்குமான முயற்சிகளின் ஒரு பகுதியென முழங்குகின்றன. இந்தியாவின் தேசிய கல்விக் கொள்கையில் மனித உரிமைகளுடன் தொடர்புடைய சில பத்திகளையும் இந்தப் பகுதியில் காணலாம்.

# 1

# கல்வியில் பாகுபாட்டுக்கெதிரான யுனெஸ்கோ உடன்படிக்கை

**இவ்வுடன்படிக்கை யுனெஸ்கோ பொதுமாநாட்டில் 1960 டிசம்பர் 14 அன்று நிறைவேற்றப்பட்டதாகும்.**

பாரிஸ் நகரில் 1960 நவம்பர் 14 முதல் டிசம்பர் 15 வரை நடந்த தனது பதினோராவது அமர்வில் ஐ.நா. கல்வி-அறிவியல்-கலாச்சாரக் கழகத்தின் (யுனெஸ்கோவின்) பொது மாநாடு,

மனித உரிமைகள் பற்றிய சர்வதேசியப் பிரகடனம் பாகுபடுத்தாமைக் கோட்பாட்டை உறுதி செய்வதையும் ஒவ்வொருவருக்கும் கற்கும் உரிமை உண்டென முழங்குவதையும் நினைவு கூர்ந்தும்

கல்வியில் பாகுபாடு காட்டுவது என்பது அப்பிரகடனத்தில் விளக்கப்படும் மனித உரிமைகளை மீறுவதாகும் என்பதைக் கருதியும்,

யுனெஸ்கோ தனது அமைப்புச்சட்ட விதிகளின்படி, மனித உரிமைகள்மீது உலகோர் அனைவரும் மரியாதை காட்டவைக்கவும், கல்வி வாய்ப்பில் சமத்துவம் வளர்க்கவும் உலக நாடுகளிடையே ஒத்துழைப்பு ஏற்படுத்துவது தனது நோக்கம் என்பதை எண்ணிப் பார்த்தும்,

அதன் விளைவாக, யுனெஸ்கோ, நாட்டுக்குநாடு தேசியக்கல்வியமைப்பில் இருக்கும் வேறுபாடுகளை மதிக்கிறது. அதே நேரத்தில், கல்வியில் எந்தவிதப் பாகுபாட்டினையும் தடைசெய்வது மட்டுமின்றி எல்லாருக்கும் கல்வித்துறையில் சம வாய்ப்புகளும் சமமாக நடத்தப்படுதலும் உருவாவதை வளர்ப்பதும் தனது கடமை என்பதை ஏற்றுக் கொண்டும்,

இந்த அமர்வுக்கான நிகழ்ச்சி நிரலில் எண் 17.1.4இன் கீழ் விவாதப் பொருளாக கலவித்துறை பாகுபாடுகளின் பல்வேறு அம்சங்கள் பற்றிய முன்மொழிவுகள் என்பது இடம் பெறுவதாலும்,

கடந்த (அதாவது 10வது) அமர்வில் இந்தப் பொருள் பற்றி ஒரு பன்னாட்டுடன்படிக்கை உருவாக்கப்படவேண்டும் என்றும், உறுப்பு நாடுகளுக்கு பரிந்துரை செய்யப்படவேண்டும் என்றும் தீர்மானித்திருந்ததாலும்,

1960 டிசம்பர் 14ம் நாள் இவ்வுடன்படிக்கையை உருவாக்கி ஏற்கிறது.

விதி 1

1. இவ்வுடன்படிக்கையைப் பொறுத்தமட்டும், "பாகுபாடு" என்பது இனம், நிறம், பால், மொழி, மதம் அரசியல் அல்லது வேறு வகை சுயகருத்து, தேசிய வம்சாவழி, சமூகவழி, பொருளாதார நிலை, பிறப்பு ஆகிய எதை அடிப்படையாகக் கொண்டும் ஏற்படுத்தப்பட்டு, கல்வித்துறையில் சமமாக நடத்தப்படுவதை அழிக்கும் அல்லது பாதிக்கும் நோக்கத்திலோ, அவ்விளைவுகளை ஏற்படுத்தக்கூடியனவாகவோ உள்ள எல்லாவித பாகுபாடுகள், ஒதுக்கிவைப்புகள், குறுக்குதல்கள், முன்னுரிமைகள் ஆகியவற்றை உட்கொண்டதாகும். அதிலும் குறிப்பாக

   அ. எந்த நிலையிலாயினும், எவ்வகைக் கல்வியிலும் எந்த ஒருவருக்கும் அல்லது ஒரு குழுவுக்கும் கல்வி கிடைக்காமல் செய்தல்;

   ஆ. எந்தவொரு தனிமனிதருக்கோ/குழுவுக்கோ, கல்வியைப் பொறுத்த வரையில் இந்தக் கல்வித்தரம்போதும் என்று வரையறை செய்தல்,

   இ. விதி 2ன் வாசங்கள் அனுமதிக்கிற வகையில் அல்லாது சிலருக்காகவோ, ஒரு குழுவுக்காகவோ, குழுக்களுக் காகவோ, தனியாக கல்வியமைப்புகளோ, கல்வி நிறுவனங்களோ உருவாக்குதல், பராமரித்தல்.

   ஈ. மானிட மாண்புகளுக்கு ஒவ்வாத நிபந்தனைகளை எவர் மீதும் எக்குழுவின் மீதும் திணித்தல். ஆகியவைகளை உள்ளடக்கியதாகும்.

2. இவ்வுடன்படிக்கையைப் பொறுத்தமட்டில் "கல்வி" எனுஞ் சொல் கல்வியின் அனைத்து வகைகளையும், அனைத்து நிலை களையும் குறிக்கிறது. கல்வி வாய்ப்பு, கல்வியின்தரம், எத்தகைய சூழ்நிலையில் அது தரப்படுகிறது என்பதையெல்லாமும் உள்ளடக்கியதாகும்.

**விதி 2**

கீழ்க்கண்ட நிலைமைகள், ஒரு அரசு அனுமதிக்கும் பட்சத்தில், இவ்வுடன் படிக்கையின் விதி 1இல் குறிப்பிடப்படும் பொருளில் "பாகுபாட்டை" உருவாக்குவதாகக் கொள்ளப்படமாட்டாது.

அ. ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித்தனிக்கல்வி முறையையோ, தனித்தனிப் பள்ளிகளையோ உருவாக்குதல், பராமரித்துவருதல் 'பாகுபாடு' அல்ல; ஆனால் இவை ஆணுக்கும் பெண்ணுக்கும் கல்வியை அணுக சம வாய்ப்பு அளிக்க வேண்டும்; ஒரே தரமும் தகுதியுமுள்ள ஆசிரியர்களே இரு பாலாருக்கும் அமைய வேண்டும்; பள்ளித்தலங்களும், உபகரணங்களும் ஒரே தரத்தனவாயிருக்க வேண்டும், எடுத்துக்கொள்ளப்படும் பாடங் களும் ஒன்றாக அல்லது இணையானவையாக இருக்க வேண்டும்.

ஆ. மதம் அல்லது மொழி காரணமாகத் தனியான கல்வி முறையோ, கல்விக்கூடங்களோ, நிறுவுதல்-நடத்துதல் "பாகுபாடு" அல்ல; ஆனால் அவை மாணவர்களுடைய பெற்றோர் அல்லது காப்பாளரின் விருப்பத்துக்கேற்ற ஒரு கல்வியை அளிப்பனவாயும், அத்தகைய முறையோ-கல்விக் கூடமோ கட்டாயமானதாக இருக்கக்கூடாது. அதில் சேரவோ சேராதிருக்கவோ உரிமை இருக்கவேண்டும் அங்கு அளிக்கப் படும் கல்வியும், குறிப்பாக அந்தந்த மட்டத்தில், உரிய அதிகார அமைப்புகளால் நிறுவப்பட்ட அல்லது அனுமதிக்கப்பட்ட தராதரங்களை நிறைவேற்றுவதாக இருக்கவேண்டும்.

இ. தனியார் கல்விக்கூடங்கள் நிறுவுதலும் நடத்துதலும் "பாகுபாடு" அல்ல; ஆனால் அநதக் கூடங்களின் நோக்கம் எந்தக் குழுவையும் புறக்கணிப்பதாக இல்லாமல் பொதுத்துறை வழங்கும் கல்வி வசதிகளை அதிகப்படுத்துவதாக அமைய வேண்டும்; அந்தந்த மட்டத்தில் உரிய அதிகார அமைப்பு களால் நிறுவப்பட்டுள்ள அல்லது அனுமதிக்கப்பட்டுள்ள தராதரங்களுக்கு இணங்கிய கல்வியை அமைப்பதாயும் அப்படி நிறுவப்பட்டுள்ள/அனுமதிக்கப்பட்டுள்ள நோக்கங் களுக்கு இசைவாக இயங்குவனவாயும் இருக்க வேண்டும்;

**விதி 3**

இவ்வுடன்படிக்கையில் சேரும் அரசுகள் இந்த உடன்படிக்கையில் கூறப்படுகிற பாகுபாடுகளைத் தடுக்கவும், ஒழிக்கவுமான நோக்கத்தில்,

அ. கல்வியில் பாகுபாடு காட்டும் சட்டப்பகுதிகளை நிர்வாக

அறிக்கைகளையும் விலக்கவும், நிர்வாக வழக்கங்களை நிறுத்தவும்,

ஆ. கல்விக்கூடங்களில் மாணவர்களைச் சேர்ப்பதில் பாகுபாடு இல்லை என்பதை, தேவைப்பட்டால் சட்டங்களும் இயற்றி, உறுதி செய்யவும்

இ. பள்ளிச் சம்பளம், கல்வித்தொகை, பிறவகை உதவிகள், வெளிநாடுகளில் பயிலத் தேவையான அனுமதிகளும் வசதிகளும் வழங்குதல் ஆகியவற்றில் தகுதி, தேவை இவற்றின் அடிப்படையில்லாமல் சார்ந்த தேசிய இனம் காரணமாக பொது அதிகாரிகளால் மாணவர்கள் நடத்தப்படுவதில் எந்த வித்தியாசத்தையும் அனுமதியாதிருக்கவும்,

ஈ. மாணவர்கள் ஒரு குறிப்பிட்டக் குழுவினர் என்பதால் மட்டுமே பொது அதிகாரிகள் கல்விக்கூடங்களுக்கு வழங்கும் எவ்வித உதவியிலும், கட்டுப்பாடுகளோ, முன்னுரிமைகளோ காட்டப்படுவதை அனுமதியாதிருக்கவும்,

உ. தமது சொந்தநாட்டினருக்குத் தரப்படும் அதே கல்வி வாய்ப்பு களை தமது மண்ணில் வாழும் அந்நிய நாட்டினருக்கும் அளிக்கவும்; உறுதியெடுத்துக் கொள்கின்றன.

## விதி 4

மேலும், இவ்வுடன்படிக்கையில் இணையும் நாடுகள் தமக்கென்று கீழ்க்கண்டவாறு ஒரே தேசியக் கொள்கையை உருவாக்கவும் வளர்க்கவும், நடைமுறைப்படுத்தவும் உறுதியெடுத்துக் கொள்கின்றன. அந்தக் கொள்கை சூழ்நிலைகளுக்கும் தேசிய மரபுக்கும் இசைந்த வழிகளில் கல்வித்துறையில் சமவாய்ப்புகள் தரப்படுவதையும், மாணவர்கள் சமமாக நடத்தப்படுவதையும் வளர்ப்பதாயிருக்கும். குறிப்பாக—

அ. ஆரம்பக் கல்வியைக் கட்டாயமாக்கி, கட்டணமின்றி அளித்தல், எல்லாவிதமான இடைநிலைக்கல்வியும் பொதுவாக அனைவருக்கும் கிடைக்கவும் கிட்டவும் செய்தல், அவரவர் தகுதிக்கேற்ப உயர்கல்வியும் அதேபோல் அனைவருக்கும் கிட்டச்செய்தல் சட்டம் விதிகளின்படி பள்ளிசெல்வதை ஒரு கடமையாக அனைவரும் செய்வதை உறுதிப்படுத்தல்.

ஆ. அரசு பள்ளிகள் அனைத்திலும், அந்தந்த நிலையில், கல்வித் தரங்கள் ஒரே மாதிரி இருத்தலையும், அளிக்கப்படும் கல்வியின்தரம் தொடர்பான நிலைமைகள் சமமாக இருத்தலையும் உறுதிசெய்தல்.

இ. ஆரம்பக்கல்வி பெற்றிராதவர்களின் கல்வியையும் ஆரம்பக் கல்வியை முழுதாக முடிக்காதவர்களின் கல்வியையும் ஊக்கு வித்தல், தக்க முறைகளில் தீவிரப்படுத்தல், அவரவர் சக்திக் கேற்ப அவர்களின் கல்வி தொடர்வதற்கு வழிசெய்தல்;

ஈ. 'ஆசிரியர் பயிற்சி'யில் பாகுபாடின்றி பார்த்துக் கொள்ளல்.

## விதி 5

1. பங்குபெறும் நாடுகள் கீழ்க்கண்டவைகளை ஒப்புக் கொள்கின்றன.

அ. மானிட ஆளுமையின் முழுமையான வளர்ச்சிக்கும், மனித உரிமைகள் அடிப்படை சுதந்திரங்கள் ஆகியவற்றுக்கான மரியாதையை வலுப்படுத்தவுமான திசையில் கல்வி அமைய வேண்டும். எல்லா நாடுகள், மதங்கள், இனங்கள் சார் மக்களிடையிலும் புரிதல், சகிப்புணர்வு, நட்புறவை கல்வி பேணவேண்டும். அமைதி நிலவுவதற்கான ஐ.நா. நடவடிக்கைகளை அது வளர்க்க வேண்டும்.

ஆ. உரிய அதிகாரிகளால் நிறுவப்பட்ட/அனுமதிக்கப்பட்டுள்ள குறைந்த பட்சக் கல்வித்தர நிர்ணயிப்பை உடையனவாக இருக்கும்பட்சத்தில் பொது அதிகாரிகள் நடத்தும் பள்ளிகள் அல்லது பிற பள்ளிகளையும் தமது குழந்தைகளுக்காக தேர்ந்தெடுக்கவும், அடுத்து தனது சட்டங்களை நடைமுறை செய்ய அரசு நடைமுறைகளுக்கு இணக்கமானதோர் வழியில் தத்தம் ஈடுபாடு சார்ந்த மத-தார்மிக கல்வி பெறுவதை உறுதி செய்துகொள்ளவும், பெற்றோருக்கோ உரிய இடங்களில் சட்டபூர்வமான காப்பாளருக்கோ உள்ள உரிமையை மதிப்பது அவசியம். எந்த ஒரு குழந்தையோ, குழுவோ தமது நம்பிக்கை களுக்கு இசைவற்ற மதக்கல்வி பெறுமாறு கட்டாயப் படுத்தப்படக்கூடாது.

இ. தங்களுக்கென்று பள்ளிகள் நடத்துவதற்கும், ஒவ்வொரு அரசும் கொண்டுள்ள கல்விக் கொள்கைக்குத்தக்கபடி தமது மொழியைப் பயன்படுத்துவதும் கற்பதும் உள்பட தத்தம் கல்விப் பணிகளை மேற்கொள்ள தேசிய சிறுபான்மையினர்க்கு உள்ள உரிமை ஏற்கப்படவேண்டியது அவசியம்; ஆனால்

i. தேசிய இறையாண்மையை பாதிக்கக்கூடிய வகையிலோ, இத்தகைய இனத்தோர், முழுச்சமுதாயத்தின் நடவடிக்கை களில் பங்குகொள்வதையோ, தேசிய சமுதாய முழுவதற்கு மான மொழியையோ பண்பாட்டையோ புரிந்துகொள்ள

முடியாமல் அவர்களைத் தடுக்கும் வகையிலோ இவ்வுரிமை நடைமுறைப் படுத்தப்படக் கூடாது.

ii. உரிய அதிகாரிகள் விதித்திருக்கிற அல்லது அனுமதித் துள்ள பொதுத் தராதரத்திலிருந்து இங்கு அளிக்கப்படும் கல்வி தாழ்ந்ததாயிருக்கக் கூடாது.

iii. அத்தகைய பள்ளிகளில் படிப்பது அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது.

2. முந்தைய பத்தியில் கூறப்படும் கோட்பாடுகள் கடைப்பிடிக்கப் படுவதை உறுதி செய்ய தமக்குள்ள கடமையை செயல்படுத்த ஆவண செய்வதாக இவ்வுடன்படிக்கையில் சேர்ந்துள்ள நாடுகள் உறுதி கூறுகின்றன.

**விதி 6**

இவ்வுடன்படிக்கையை நடைமுறைப்படுத்துவதில், கல்வியில் காட்டப்படும் பல்வேறு பாகுபாடுகளுக்கு எதிராகவும், கல்வியில் யுனெஸ்கோ பொதுமாநாடு எதிர்காலத்தில், சமவாய்ப்பையும் சமமாக நடத்தப்படுவதையும் உறுதிசெய்யும் பொருட்டும் செய்யும் பரிந்துரைகளுக்கு உயர்ந்த பட்ச கவனம் கொடுக்கும் என்றும் இதில் பங்கேற்கும் நாடுகள் உறுதியளிக்கின்றன.

**விதி 7**

யுனெஸ்கோ பொதுமாநாடு, இவ்வுடன்படிக்கையில் பங்குபெறும் அரசுகள் எந்த வடிவில் எந்தத் தேதியில் பருவாந்திர அறிக்கைகள் தரவேண்டும் என்று நிர்ணயிக்கிறதோ, அதன்படி அந்த அரசுகள் அதற்கு பருவாந்திர அறிக்கைகள் தரவேண்டும். அதில் இவ்வுடன் படிக்கையை நடைமுறைப்படுத்தும் வகையிலே அந்த அரசு சட்டமியற்றுவது, நிர்வாக நடவடிக்கை உட்பட எடுத்த பல்வேறு வகை நடவடிக்கைகள் பற்றியும் விபரங்கள் தரப்படவேண்டும். நான்காம் விதியில் கூறப்படும் தேசியக் கொள்கையை நிர்ணயித்தது. வளர்ப்பது அக்கொள்கையைச் செயல்படுத்துவதில் கண்டவெற்றிகள் எதிர்கொண்ட தடைகள் ஆகியனபற்றியும் கூறிடவேண்டும்.

**விதி 8**

இவ்வுடன்படிக்கையில் சேருகிற நாடுகளில் இரண்டுக்குள்ளோ, இரண்டுக்கு மேலான நாடுகளுக்கிடையிலோ இந்த உடன் படிக்கையை செயலாற்றுவதிலோ, அல்லது பொருள் கொள் வதிலோ தகராறு ஏற்பட்டால், பேசித்தீர்த்துக் கொள்ளாதபோது,

வேறு வகைகளில் தீர்த்துக் கொள்வதும் இயலாவிடில் அவர்களே வேண்டிக் கொண்டால் சர்வதேச நீதிமன்றத்தின் தீர்ப்புக்கு அனுப்பப்பட வேண்டும்.

**விதி 9**

இவ்வுடன்படிக்கையை ஏற்பதற்கு நிபந்தனைகள் தயக்கங்கள் அனுமதிக்கப்படமாட்டா.

**விதி 10**

இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட நாடுகளிடையே உருவாகும் ஒப்பந்தங்களின் அடிப்படையில் தனிமனிதர்களோ குழுக்களோ அனுபவித்துவரும் உரிமைகள் இவ்வுடன்படிக்கைக்கு எழுத்திலும், உட்பொருளிலும் முரண்படாத வரையில் அவ்வுரிமைகளை இவ்வுடன்படிக்கை குறைக்காது.

# 2

# சமாதானம், மனித உரிமை, மக்களாட்சி ஆகியவற்றின் கல்வி பற்றிய பிரகடனம்

*கீழே தரப்பட்டுள்ள பிரகடனம் 1994 அக்டோபரில் ஜெனிவாவில் நடைபெற்ற சர்வதேசக் கல்வி மாநாட்டின் 44வது அமர்வில் கல்வியமைச்சர்கள் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டு 1995 நவம்பரில் பாரிஸில் நடைபெற்ற யுனெஸ்கோ பொது மாநாட்டின் 28வது அமர்வில் அங்கீகரிக்கப்பட்டதாகும்.*

---

1. சர்வதேசக் கல்வி மாநாட்டின் 4வது அமர்வில் கூடிய கல்வியமைச்சர்களான நாங்கள்.

   வன்முறை, இனவெறி, இனவெறுப்பு, தீவிர தேசியவாதம், மனித உரிமை மீறல்கள், மத சகிப்பின்மை, பல்வேறு வடிவங்களிலும் வகைகளிலும் பெருகிவரும் பயங்கரவாதம், பணக்கார நாடுகளையும் ஏழை நாடுகளையும் பிரிக்கும் வளர்ந்துவரும் இடைவெளி, நாட்டளவிலும் உலக அளவிலும் சமாதானமும் ஜனநாயகமும் வலுப்பெறுவதைத் தடுக்கும் சக்திகள் இதுபோன்ற மேம்பாட்டுக்குத் தடையான அனைத்தினாலும் ஏற்படுகிற தீவிரக் கவலையாலும்,

   அமைதி, மனித உரிமைகள், மக்களாட்சி இவற்றின் மேம்பாட்டை நாடி, ஐ.நா அமைப்புச் சாசனம், யுனெஸ்கோ அமைப்புச்சட்டம், பன்னாட்டு மனித உரிமைப் பிரகடனம், மற்றும் குழந்தைகளின் உரிமை பற்றிய உடன்படிக்கை, மகளிர் உரிமை பற்றிய உடன்படிக்கை போன்ற ஏனைய தொடர்புடைய உடன்படிக்கைகளுக்கேற்ப, பன்னாட்டு ஒத்திசைவு,

ஒப்புறவு, அமைதி மற்றும் மனித உரிமைகள் அடிப்படை சுதந்திரங்கள் பற்றிய கல்வியை மக்களுக்கு வழங்க வேண்டிய நமது கடமையைக் கருத்திற்கொண்டும்;

ஒத்திசைவு, ஒற்றுமை, சகிப்புத்தன்மை ஆகியவற்றை தனி மனிதர்களுக்குள்ளும், நாட்டின், சமூக, பண்பாட்டு, சமய அடிப்படையில் வெவ்வேறாயுள்ள குழுக்களுக்குள்ளும் இறை யாண்மை கொண்ட நாடுகளுக்கிடையிலும் வளர்க்க கல்விக் கொள்கைகள் உதவ வேண்டும் என்பதில் உறுதியான தெளிவோடும்

மனித உரிமைகளின் மரியாதைக்கும், அவ்வுரிமைகளைப் பாதுகாப்பதற்கான உயிரோட்டமுள்ள கடப்பாட்டுக்கும், அமைதி, மக்களாட்சி ஆகியவையடங்கிய பண்பாட்டினை உருவாக்குவதற்கும் இசைவான அறிவு, மதிப்பீடுகள், போக்குகள், திறமைகள் ஆகியவற்றைக் கல்வி வளர்க்க வேண்டும் என்பதிலும் உறுதியான தெளிவோடும்,

- சமாதானம், மனித உரிமை, மக்களாட்சி ஆகியவற்றுக்கான கல்வியின் நோக்கங்களை நடைமுறைப்படுத்தவும், அதன்மூலம் ஒரு நிலையாக நிற்கக்கூடிய வளர்ச்சிக்கும், சமாதான கலாசார வளர்ச்சிக்கும் கல்வித் துறையில் தொடர்புடைய எல்லாருடனும், அரசு சாரா அமைப்புகளுடனும் இணைந்து பணியாற்ற வேண்டியது பெற்றோருக்கு மட்டுமின்றி ஒட்டுமொத்த சமுதாயத்தின்மீதுமே சாத்தப்படுகின்ற பெரிய கடப்பாடு ஆகும்.
- "அனைவருக்கும் கல்வி" என்ற உலகப் பிரகடனத்தின் நோக்கங்களுக்கு இசைவான கல்வியை நனவாக்க உதவும் பல்வகை முறைசாராக்கல்வி அமைப்புகளையும், முறையான கல்வியமைப்புகளையும் ஒருங்கிசைத்துச் செல்லவேண்டியதன் தேவை.
- இளைய மானிடத்தின் ஆளுமையை உருவாக்கும் முயற்சிகளில் முறைசாராக் கல்விக்கான நிறுவனங்களின்மீது விழுகிற அதிமுக்கியப் பங்களிப்பு ஆகியவை பற்றியும் அதே போன்ற உறுதியான தெளிவோடு

2 கீழ்க்கண்ட பணிகளுக்கு உறுதியோடு முயன்று உழைப்போம்:

2.1 சகமனிதர்களுக்கு மரியாதை காட்டுகிறவர்களும் சமாதானம், மக்களாட்சி, மனித உரிமை ஆகியவற்றை வளர்க்க உறுதி பூண்டவர்களையும் பள்ளிச்சிறுவர், இளைஞர், முதியவர்கள்

அனைவரின் ஆளுமையையும் வளர்க்க உதவும் கோட்பாடு களின்மீதும் முறைகள் மீதும் கல்வியின் அடித்தளத்தை அமைத்தல்.

2.2 அனைத்துலக நல்லிணக்கக் கல்வியின் வெற்றிக்கு உதவும் சூழலை கல்வி நிறுவனங்களில் ஏற்படுத்த உரிய நடவடிக்கை எடுத்து அதன்மூலம் அவற்றை சகிப்புத்தன்மை, மனித உரிமைகளை மதித்தல், மக்களாட்சியைக் கடைப்பிடித்தல், பண்பாட்டு அடையாளங்களின் வகைகளையும் வளத்தையும் கற்றல் ஆகியவற்றுக்கான இலட்சியக் களங்களாக மாற்றுதல்.

2.3 கல்வி அமைப்புகளில் சிறுமியர் மற்றும் மாதர்களுக்கு எதிரான எல்லாவித நேரடியான அல்லது மறைமுகமான பாகுபாடுகளையும் ஒழிக்க நடவடிக்கை எடுப்பதுடன் அவர்கள் தம் முழு வலிமையையும் பெறுவதை உறுதி செய்வதற்காக தனியாக நடவடிக்கைகள் எடுத்தல்.

2.4 மற்ற பண்பாடுகளைத் திறந்த மனதோடு பார்க்கிறவர்களாயும் சுதந்திரத்தின் மதிப்பை உணர்பவர்களாகவும் மனித மாண்பையும் மாந்தருள் வித்தியாசங்களையும் மதிப்பவர் களாகவும் முரண்பாடுகளைத் தவிர்க்க வலிமை கொண்டவர் களாகவும், அப்படியும் பேதமுண்டானால் வன்முறையற்ற வழிகளில் அவற்றைத் தீர்த்துக் கொள்ளத் தெரிந்தவர் களாகவும் உள்ளவர்களுக்குக் கற்பிக்கத் தக்கனவாக பாடத் திட்டம், பாடநூல்களின் உள்ளடக்கம், தொழில்நுட்பம் உள்ளிட்ட கல்வித் துணைக்கருவிகள் ஆகியவற்றை உருவாக்குவதில் சிறப்பாக கவனம் தருதல்.

2.5 முறைசார்கல்வியிலும் முறைசாராக் கல்வியிலும் ஆசிரியர் களின் பங்கையும், இடத்தையும் உயர்த்தும் நடவடிக்கைகளை எடுத்தல், கல்வி நிர்வாகிகள், திட்டமிடுவோர் ஆசிரியர் ஆகியோருக்கு பணிக்குமுன் பயிற்சி, பணியோடு இணைந்த பயிற்சி, மறு பயிற்சி, ஆகியவற்றுக்கு முன்னுரிமை; அப்பயிற்சிகள், குறிப்பாக தொழில்அறம், குடிமைக்கல்வி, தார்மிகக் கல்வி, பண்பாட்டுப் பலவண்ணத்தன்மை, மனித உரிமையும் அடிப்படை சுதந்திரங்களும் பற்றிய தேசிய சட்டங்கள், உலகளாவிய தர நிர்ணயிப்புகள் ஆகியவற்றைத் தழுவியனவாக அமையுமாறு பார்த்துக் கொள்ளுதல்;

2.6 உலக அமைதி, மனித உரிமைகள், மக்களாட்சி, நிலைத்து நிற்கக் கூடிய மேம்பாடு ஆகியவற்றைக் காக்கும் பொறுப்புள்ள குடிமக்களுக்கு கல்வியளிப்பதில் வரும் சவால்களை சந்திக்கும்

வண்ணம் புதுமையான நடைமுறைகளை உருவாக்குவதையும், அத்தகைய நடைமுறைகளை எடை போடவும், மதிப்பீடு செய்யவும் உரிய ஏற்பாடுகளை உண்டாக்குவதையும் ஊக்கப்படுத்துதல்.

2.7 ஒவ்வொரு அரசின் அரசமைப்பையும் கணக்கில் எடுத்துக் கொண்டு, எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக இப்பிரகடனத்தை நடைமுறைப்படுத்த செயல் பாட்டு நிரல் தயாரித்தல்.

3. மேலும் கீழ்க்கண்ட அம்சங்களில் எங்கள் முயற்சிகளை அதிகரிக்க உறுதிபூண்டிருக்கிறோம்.

3.1 சகிப்பின்மை, இனவெறி, இனவெறுப்பு ஆகிய தூண்டுதல் களுக்கு எளிதில் வசப்படக்கூடிய சிறுவர்களுக்கும் இளைஞர்களுககும் கல்வியில் பெரும் முன்னுரிமை தருதல்.

3.2 கல்வி நடவடிக்கைகளை இன்னும் நெருக்கமாக நடைமுறை சமூக வாழ்வோடு இணைக்கவும். அதன்மூலம் சகிப்பும், ஒற்றுமையையும் பழகிய சமூகமாகவும், மனித உரிமைக்கு மரியாதை, மக்களாட்சி, உலக அமைதி ஆகியவற்றைக் கற்கும் சமூகமாக அதை உருமாற்றவும் ஆசிரியர்களுக்கு உதவக் கூடிய அனைவரது ஒத்துழைப்பையும் கோரிப்பெறுதல்.

3.3 கல்வித்துறை அனுபவங்களின் பரிமாற்றம், ஆராய்ச்சி அனுபவப் பரிமாற்றம், மாணவர்-ஆசிரியர்—ஆராய்ச்சியாளர் மட்டத்தில் நேரடி உறவுகள், பள்ளிகள் இணைப்புத் திட்டங்கள், வருகைகள், ஆகியவற்றை தேசிய அளவிலும் பன்னாட்டளவிலும் மேலும் வளர்த்தல்; அம்முயற்சிகளில் யுனெஸ்கோ தொடர்புடைய பள்ளிகள் போன்ற பரிசோதனைப் பள்ளிகள், யுனெஸ்கோ இருக்கைகள் (அதாவது ஆய்வுக்கான 'Chairs' நிறுவுதல், கல்வியில் புதுமை காணல், இணையங்கள், யுனெஸ்கோ சங்கங்கள், மன்றங்கள் போன்ற விசேஷ அமைப்புகளுக்கு தனிகவனம் தருதல்;

3.4 (வியன்னாவில் 1993 ஜூனில் நடந்த) 'மனித உரிமைகள் பற்றிய உலக மாநாட்டு பிரகடனமும் நடவடிக்கை நிரலும்' (மான்ட்ரீலில் 1993 மார்ச்சில் நடந்த) 'மனித உரிமைகட்கும் மக்களாட்சிக்குமான கல்வி பற்றிய சர்வதேச மகாசபையின் செயல்பாடுகளுக்கான உலகத்திட்டம்' இரண்டையும் நடைமுறைப்படுத்தலும் மனித உரிமைகள் துறையில் சர்வதேச அடிப்படையில் அங்கீகாரம் பெற்றுள்ள ஆவணங்கள் எல்லாக் கல்விநிலையங்களுக்கும் கிடைக்குமாறு செய்தல்.

# 3

# உலக அமைதி, மனித உரிமைகள், மக்களாட்சி ஆகியவற்றுக்கான கல்வி பற்றிய ஒருங்கிணைக்கப்பட்ட நடவடிக்கைத் திட்ட வரையறை

*கீழே தரப்பட்டிருப்பது பாரிசில் 1995இல் நடைபெற்ற யுனெஸ்கோ பொது மாநாட்டின் 28வது அமர்வில் ஏற்றுக்கொள்ளப்பட்ட 'உலக அமைதி, மனித உரிமைகள், மக்களாட்சி ஆகியவற்றுக்கான கல்வி பற்றிய ஒருங்கிணைக்கப்பட்ட நடவடிக்கைத் திட்ட வரையறை' ஆகும்.*

---

## முன்னுரை

1. சர்வதேச கல்வி மாநாட்டின் 44வது அமர்வில் ஏற்றுக் கொள்ளப்பட்ட பிரகடனத்தை நடைமுறைப்படுத்துவதே இந்த வரையறையின் நோக்கமாகும். பல்வேறு சமூகங்களின் நிலைமைகளுக்கேற்ப தேசிய அளவிலும் சர்வதேச அளவிலும் நடைமுறைக்கான உத்திகளாகவும் கொள்கை களாகவும் திட்டங்களாகவும் மாற்றிக் கொள்ளப்படக்கூடிய வழிகாட்டு நெறிகளை இது முன் வைக்கிறது.
2. இது விரைவான மாறுதல்களும் மாற்றங்களும் நிகழும் காலம். சகிப்பின்மை வெளிப்பாடுகள், இன பண்பாட்டின் வெறுப்பின் தோற்றங்கள், தன் அனைத்து வடிவங்களிலும் உருவங்களிலும் பயங்கரவாதத்தின் எழுச்சி, பாகுபாடுகள், போர், 'அந்நியர்'க்கு எதிரான வன்முறை, செல்வர்க்கும் இல்லார்க்கும் இடையிலான பிளவுகளின் வளர்ச்சி ஆகியவை நாட்டளவிலும் சர்வதேச அளவிலும் தோன்றும் காலம்.

இக்காலத்துக்கேற்ப, அடிப்படை சுதந்திரம், அமைதி, மனித உரிமைகள், மக்களாட்சி ஆகியவற்றை உறுதிசெய்தல் நிலைத்து நிற்கக் கூடியதும் சமத்துவ அடிப்படையிலானதுமான சமூக-பொருளாதார மேம்பாட்டை வளர்த்தல் என்ற இரண்டையும் குறிவைத்து செயல்முறை உத்திகள் உருவாக்கப் படவேண்டும். ஏனென்றால் இவையாவுமே ஒரு சமாதானக் கலாசாரத்தை உருவாக்குவதற்குத் தேவையான பங்களிப்பைத் தருவன. அதற்கு மரபுசார்ந்த கல்விப் பணிமுறைகளில் ஒரு மாற்றம் தேவைப்படுகிறது.

3. உலகில் இன்று காணும் சவால்களை எதிர்காணுவதற்குரிய ஒன்றுபட்ட பயனுள்ள வழியில் செயல்பட உதவக்கூடிய ஆவணங்களைத் தனக்காக ஏற்படுத்திக்கொள்ள வேண்டு மென்று உலக நாடுகள் அண்மையில் உறுதிபூண்டன. இந்தத் திசையில் மனித உரிமைகள் பற்றிய உலக மாநாட்டில் (வியன்னா, ஜூன் 1993) ஏற்றுக்கொள்ளப்பட்ட 'மனித உரிமைகளுக்கான வியன்னா பிரகடனமும் நடவடிக்கைத் திட்டமும்' மனித உரிமைகளும் மக்களாட்சியும் பற்றிய கல்விக்கான சர்வதேசப் பேரவைக் கூட்டத்தில் (மாண்ட்ரியல் நகர் மார்ச் 1993) ஏற்கப்பட்ட 'மனித உரிமைகளும் மக்களாட்சியும் பற்றிய கல்விக்கான உலக நடவடிக்கைத் திட்டம்', 'இணைக்கப்பட்ட பள்ளிகள் திட்ட உத்தி மற்றும் நடவடிக்கைத் திட்டம் (1994-2000) ஆகியன உலக அமைதி மக்களாட்சி, மனித உரிமைகள், மேம்பாடு இவற்றைப் பேணுவதில் எதிர்கொள்ள நேரும் சவால்களை சந்திக்க உதவும் முயற்சிகளாகும்.

4. இந்த நடவடிக்கைத் திட்ட வரையறையானது 'நாடுகளுக் கிடையிலான ஒத்திசைவு, ஒப்புறவு, உலக அமைதி இவற்றுக் கான கல்வி பற்றிய பரிந்துரை', 'மனித உரிமைகள் அடிப்படை சுதந்திரங்கள் தொடர்பான கல்வி' ஆகியவற்றால் உந்தப்பட்டு தனது உறுப்பு நாடுகள், பன்னாட்டு அரசாங்கங்கள், அரசுசாரா அமைப்புகள் ஆகியோர் முன்பு 'உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமைகள் ஆகியன பற்றிய கல்வி தொடர்பான சிக்கல் களையும் அவற்றை எதிர்கொள்வதற்கான உத்திகள் பற்றியும் ஒருங்கிணைவான, நிகழ்நாளுக்குரிய ஒரு பார்வையை முன் வைக்கிறது. பொது மாநாடு தன் 27ம் அமர்வில் வேண்டிய படி இதனைச் செய்கையில் நடப்பில் உள்ள நடவடிக்கைத் திட்டங்கள் கவனத்தில் கொள்ளப்பட்டுள்ளன. அவற்றின்

நடைமுறை முக்கியத்துவம், பயன்தரு வலிமை ஆகியவற்றை வலுப்படுத்துவதே நோக்கமாயிருக்கிறது. எல்லாநாட்டு மக்களுக்கும் கல்வியறிக்கை, புதிய வழிகள் காண்பதற்காக கடந்தகால அனுபவம் அடிப்படையாக பயன்படுத்தப்பட வேண்டும் என்பதுதான் விழைவு. அதற்குத் தக்க வண்ணம் இந்தத் திட்டவரையறை செயல்பாடுகளுக்கான கோட்பாடு களையும் இலக்குகளையும் அடையாளம் காட்டுகிறது; ஒவ்வொரு அரசுக்கும் ஏற்ப அது வகுத்துக் கொள்ளவேண்டிய கொள்கைகளை உருவாக்குவோர் கவனத்துக்கு கருத்துரைகளை முன்வைக்கிறது. பிரகடனத்தில் கண்டுள்ள கடப்பாடு களுக்கேற்ப அத்துடன் தம்மைப் பிணைத்துக்கொண்ட நாடுகள் தம்முள் ஒப்புறவுடன் செயல்பட வகை செய்கிறது. ஆய்வுக்குரிய தலைப்புகளை நிர்ணயிக்க முயற்சிக்கும் பல்வேறு நடவடிக்கைகளை ஒரு இசைவான முழுமைக்குள் இணைத்துக் கொண்டுவர முயற்சிக்கிறது. அனைத்து மட்டங்களிலும் கல்வியை மறு ஒழுங்கு செய்ய முயல்கிறது. முறைகளை மறுசிந்தனைக்குட்படுத்துகிறது; கற்பிக்கும் கருவிகளை மறுபரிசீலனை செய்கிறது. ஆராய்ச்சியை ஊக்குவிக்கிறது. ஆசிரியப் பயிற்சியை மேம்படுத்துகிறது. ஆக, கல்விமுறை மேலும் வெளிப்படையானதாக அனைவரும் பங்கெடுப்பதன் மூலம் உருப்பெற உதவுகிறது.

5. மனித உரிமைகள் யாவும் உலகளாவியன, பிரிக்க முடியாதன, ஒன்றையொன்று சார்ந்தன, ஒன்றுக்கொன்று தொடர் பானவையுமாம். அவைகளை நடைமுறைப் படுத்துவதற்கான உத்திகள் குறிப்பிட்ட வரலாற்றுபூர்வமான, சமயபூர்வமான பண்பாட்டியல் பூர்வமான அம்சங்களையும் கணக்கில் கொள்ளவேண்டியது கட்டாயமாகும்.

உலக அமைதி, மனித உரிமைகள், மக்களாட்சி ஆகியவற்றுக் கான கல்வியின் இலக்குகள்

6. உலக அமைதி, மனித உரிமைகள், மக்களாட்சி ஆகிய வற்றுக்கான கல்வியின் இறுதி இலக்கு, ஒவ்வொரு மனிதரின் மனதிலும், அமைதிப்பண்பாட்டுக்கு அடித்தளமாயமைந்துள்ள உலகளாவிய மதிப்பீடுகள், நடத்தைகளையும் விதைப்பதாகும். வெவ்வேறு சமூக-பண்பாட்டு சூழ்நிலைகளிலும்கூட உலக முழுவதிலுமே ஒப்புக்கொள்ளப்படக்கூடிய பொதுவான மதிப்பீடுகளை இனங்காண இயலும்.

7. சுதந்திரத்தை மதிக்கவும், அதன் சவால்களை சந்திக்கும்

திறமைகளை வளர்த்துக் கொள்ளவுமான வலிமையை கல்வி தரவேண்டும். சிரமங்களையும் நிச்சயமற்ற சூழ்நிலைகளையும் எதிர்கொள்ள குடிமக்களைப் பழக்குவதும், பொறுப்புகளுக்கும் சுயசார்புக்கும் அவர்களைத் தயார் செய்வதுமே இதன் பொருளாகும். குடிமக்களின் கடப்பாட்டிற்கு உரிய மதிப்பினை ஒப்புக்கொள்வது, சிக்கல்களைத் தீர்ப்பதற்கு மற்றவர்களுடன் இணைந்து உழைப்பது, நியாயமும் சமாதானமும் ஜனநாயகமும் நிலவும் ஒரு சமூகத்தைப் படைக்க முயல்வது ஆகியவற்றுடன் சுய பொறுப்பு பற்றிய விழிப்புணர்வு இணைந்திருக்கிறது.

8. பால்வேறுபாட்டிலும், சமூகங்களுக்கிடையிலான வித்தியாசங்களிலும் மனிதருக்கு மனிதர் உள்ள வேறுபாட்டிலும், பண்பாடுகளுக்கிடையேயான வேறுபாடுகளிலும் காணக் கிடைக்கும் மதிப்பீட்டு முறைகளை இனங்காணவும் ஏற்கவும் தேவைப்படும் சக்தியையும், ஒருவருடன் ஒருவர் தொடர்பு கொள்ளல், அறிவைப்பகிர்ந்துகொள்ளல், ஒத்துழைத்தல் ஆகியவற்றுக்கான வலிமையையும், கல்வியானது தரவேண்டும். மக்கள் தாம் நேர்காணும் நிலைமைகளைப் புரிந்துகொள்ளுவது அவர்களது சொந்த வாழ்வு சமூக வரலாறு பண்பாட்டு மரபுகள் ஆகியவற்றின் அடிப்படையில் நிகழ்வதையும், எனவே சிக்கல்களுக்கான ஒரே தீர்வு என்றெதுவும் எந்த ஒரு தனி மனிதர் கையிலோ, தனி ஒரு குழுமத்தின் கையிலோ இல்லை யென்பதையும், ஒவ்வொரு சிக்கலுக்கும் ஒன்றுக்கு மேற்பட்ட தீர்வு இருக்கமுடியும் என்பதையும் வித்தியாசங்கள் நிறைந்த உலகில் கலாசாரப் பன்முக சமுதாயத்தின் உறுப்பினராக வாழ நேர்ந்துள்ள மனிதர்கள் புரிந்துகொள்ள வேண்டும். ஆகையினாலே, மக்கள் ஒருவரையொருவர் புரிந்துகொள்ள வேண்டும், சமமானவர்களாக பேச்சுவார்த்தை நடத்திக் கொள்ளவேண்டும். பொது அணுகுமுறைகளைக் காண்பது நோக்கமாயிருக்க வேண்டும். இப்படியாக கல்வி, சமூகங்களுக் கிடையேயும், மனிதர்களுக்குள்ளும் சமாதானம், நட்பு, ஒற்றுமை ஆகியவற்றை வலுப்படுத்தும் கருத்துகளையும் தீர்வுகளையும் ஒன்றுகூட்டுவதை ஊக்குவிப்பதாக, சுய அடையாளங்களை வலுப்படுத்துவதாக அமைய வேண்டும்.

9. வன்முறையில்லாமல் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் வலிமையை அது மேம்படுத்த வேண்டும். மாணவர்கள் சகிப்புணர்வு, பாசம், பகிர்ந்து கொள்ளுதல், (அடுத்தவர்

பற்றிய) அக்கறை போன்ற மாண்புகளை இன்னும் வலுவாக உருவாக்கிக் கொள்ளத் தேவைப்படுகிற உள்மன அமைதி மேம்படுவதை வளர்க்க வேண்டும்.

10. அறிவார்ந்த தீர்மானங்களை எடுக்கவும், சமகால நிலைமைகளை ஆராய்ந்து அதன் அடிப்படையில் என்று மட்டுமின்றி எதிர்காலம் பற்றிய தெளிந்த கண்ணோட்டத்தின் அடிப்படையிலும் தமது முடிவுகளையும் செயல்களையும் தீர்மானிக்கவும் தேவையான திறமையை, கல்வி மக்கள் மனதில் விதைக்க வேண்டும்.

11. கல்வியானது குடிகளுக்கு பண்பாட்டு மரபுகளை மதிக்கவும், சுற்றுச்சூழல் பாதுகாப்பையும், நிலைத்து நிற்கக்கூடிய (பொருளாதார) மேம்பாட்டுக்கு இட்டுச் செல்லக்கூடிய உற்பத்தி முறைகள், நுகர்வு இயல்புகள் ஆகியவற்றைக் கைக்கொள்ளவும் கற்றுத்தர வேண்டும்.

தனியார் மதிப்பீடுகள்-கூட்டு மதிப்பீடுகள் ஆகியவற்றிடையேயும், உடனடியான அடிப்படை தேவைகளுக்கும் நீண்டகால அக்கறைகளுக்கிடையேயும் ஒத்திசைவு காணுவதும் தேவையாகும்.

12. சமச்சீரான நெடுங்கால வளர்ச்சிக்கான நோக்கிலமைந்த, சமத்துவத்தையும் ஒற்றுமையையும் தேசிய அளவிலும் சர்வதேசிய அளவிலும் ஏற்படுத்தத் தேவையான உணர்வுகளை விதைப்பதாயும் கல்வி அமைய வேண்டும்.

**உத்திகள்**

13. இந்த இலக்குகளை நிறைவேற்ற, கல்வியமைப்புகளின் உத்திகளும் நடவடிக்கை விதங்களும் சீரமைக்கப்படுவதன் தேவை தெளிவானது. கற்பித்தல் முறை, நிறுவன நிர்வாகம், இரண்டிலுமே இந்த சீரமைப்பு அவசியத் தேவை. மேலும் அனைவருக்கும் அடிப்படைக்கல்வி அளிப்பது, உலகளாவிய மனித உரிமை என்பதின் பிரிக்க முடியாத, பிரிக்கக்கூடாத பகுதியான மகளிர் உரிமை பேணுதல் ஆகிய இரண்டும் உலக அமைதி, மனித உரிமைகள், மக்களாட்சி ஆகியவற்றுக் கான கல்வியில் அடிப்படையான அம்சங்களாகும்.

14. உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமைகள் பற்றிய கல்விக்கான உத்திகள்

அ. விரிவான பார்வை கொண்டமைய வேண்டும்; முழுமை கொண்டு விளங்க வேண்டும். அதாவது பலவகை

அம்சங்களையும் தழுவி இருக்கவேண்டும். அவற்றில் சில அம்சங்களை பின்வரும் துணைப் பத்திகளில் விவரமாகக் காண்போம்.

ஆ. அவை எல்லா வகையான, எல்லா நிலைகளுக்குமான, எல்லாவிதமான கல்விகளுக்கும் பொருந்தவேண்டும்.

இ. கல்வித்துறையில் பங்காளிகளாக உள்ள எல்லாரையும், சமூகமயமாக்கும் பணியிலும் உள்ள எல்லா அமைப்புகளையும் சமூக நிறுவனங்களையும் அரசு சாரா அமைப்புகளையும் அவற்றில் ஈடுபடுத்த வேண்டும்.

ஈ. நகரளவில், நாட்டளவில், வட்டார அளவில் உலகளவில் நடைமுறைப்படுத்த வேண்டும்.

உ. கல்வி நிறுவனங்களுக்கு அதிக சுயாட்சி தரக்கூடிய வகைக்கு மேலாண்மை முறைகளையும், நிர்வாகத்தையும், ஒருங்கிணைப்பையும், பணி மதிப்பீட்டையும் ஒழுங்கமைத்தலின்மூலம் அவை குறிப்பிட்ட வகையில் நடவடிக்கைத் திட்டங்களை ஏற்படுத்தவும், உள்ளூர் மக்களுடன் இணைப்பை ஏற்படுத்திக் கொள்ளவும், மேம்பாட்டு புது உத்திகளை ஊக்குவிக்கவும், நிறுவனத்தின் வாழ்வில் அக்கறை கொண்ட அனைவரையும் செயலூக்கத்தோடு மக்களாட்சி முறையில் பங்களிக்கச் செய்வனவாக அமைய வேண்டும்;

ஊ. யாருக்காக செய்கிறோமோ அவர்களது வயது மனநிலை ஆகியவற்றுக்கிசைய அமைய வேண்டும். பயில்வோர் ஒவ்வொருவரின் கற்கும் சக்தியின் பரிணாம வளர்ச்சியையும் கவனத்தில் கொள்ளவேண்டும்.

எ. தொடர்ச்சி உடையனவாயும் முரணற்றவையாயும் விளங்க வேண்டும். உத்திகளின் தடைகளும் பயன்களும் மதிப்பிடப்பட வேண்டும். மாறிவரும் சூழல்களுக்கேற்ப உத்திகளைத் தொடர்ந்து பயன்டுத்த மதிப்பீட்டு முறை உதவும்.

ஏ. பொதுவாக கல்வியிலும், குறிப்பாக ஓரம்கட்டப்பட்டவர்கள், வசதியற்றோர், கல்வியிலும் மேற்கண்ட இலக்குகளை அடையத் தேவையான 'வசதிகள்' பற்றியும் சிந்திக்க வேண்டும்.

15. மாறுதல்கள் எந்த அளவு தேவை, செயல்பாடுகளுக்கிடையிலான முன்னுரிமைப்படுத்தல், எந்த வரிசையில் நடவடிக்கைகளை நடைமுறையில் மேற்கொள்ள வேண்டும் ஆகியவை பற்றிய முடிவுகளை இறுதிசெய்யும் முன்பாக

முடிவெடுக்கும் எல்லா மட்டங்களிலும் மாறுபட்ட வரலாற்றுப் பின்னணி, பண்பாட்டியல் மரபுகள், நாடுகள் வட்டாரங்களின் மேம்பாட்டு நிலைகள், நாட்டுக்குள்ளேயே கூட மேம்பாட்டு நிலையில் இருக்கக்கூடிய வித்தியாசங்கள் போன்றவை கவனத்தில் கொள்ளப்பட வேண்டும்.

**கொள்கைகளும் நடவடிக்கை வழிமுறைகளும்**

16. முறையான கல்வியிலும் சரி, முறைசாராக் கல்வியிலும் சரி, எல்லா மட்டங்களிலும் உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமைகள் ஆகியவை பற்றிய பாடங்கள் இடம் பெறுவது தீவிர முக்கியத்துவம் பெறுகிறது.

**கல்வியின் உள்ளடக்கம்**

17. ஒற்றுமை, படைப்புத்திறன், குடிமைப் பொறுப்புணர்வு, வன்முறை தவிர்த்த வழிகளில் பூசல்களுக்குத் தீர்வு காணும் வலிமை, விமர்சன சக்தி போன்ற மாண்புகளை உருவாக்கு வதை வலுப்படுத்த, எல்லா மட்டத்திலும் பாடத்திட்டத்தில் உலகளாவிய பரிமாணங்கள் கொண்ட குடிமைக்கல்வி இடம் பெற வேண்டியது அத்தியாவசியமாகும். உலக அமைதியை உருவாக்கும் கூறுகள் பற்றிய அக்கறைகள் கல்விக்கு இருக்க வேண்டும். பல்வேறு மோதல்கள், அவற்றின் காரணங்களும் விளைவுகளும், மனித உரிமைகளின் பின்னால் உள்ள தார்மிக சமய-தத்துவ அடிப்படைகள், வரலாற்று ஆதாரங்கள், அவை வளர்ந்த வகை, மனித உரிமைகள் பற்றிய சர்வதேசப்பிரகட னத்தையும், மகளிர்க்கெதிரான சகலவகைப் பாகுபாடுகளையும் ஒழிப்பதற்கான உடன்படிக்கை, குழந்தைகள் உரிமை பற்றிய உடன்படிக்கை, போன்ற தேசிய சர்வதேசிய நிர்ணயிப்புகள் ஏற்பட்ட விதம், மக்களாட்சியின் அடிப்படைகள், படிப் படியாக மலர்ந்த அதன் அமைப்புகள், இனவாதம், பெண்ணியப்போராட்ட வரலாறு, மற்ற பாகுபாடுகளையும் ஒதுக்குமுறைகளையும் எதிர்க்கும் இயக்க வரலாறுகள் ஆகியவைகளைப் பற்றிய அக்கறையும் கல்வியை திட்ட மிடுவதில் இருக்க வேண்டும். பண்பாடு, மேம்பாடு தழுவிய சிக்கல்கள், இனங்களின் வரலாறுகள், ஐ.நா முதலிய உலக அமைப்புகளின் பங்கு பணி பற்றியெல்லாமும் சிறப்பு கவனம் செலுத்தப்படவேண்டும். அமைதி, மக்களாட்சி, மனித உரிமை பற்றியெல்லாம் கல்வி அமைய வேண்டும்.

விசேஷமான பாடங்களுக்கு மட்டும் அழுத்தும் தருவதாக இருக்கக் கூடாது. கல்வி குறுக்கப் படலாகாது. இந்தச் செய்திகளைப் பரப்புவதாகவே கல்வி முழுவதும் அமைய வேண்டும். அதுபோலவே பாட நூல் சீர்திருத்தமும் உலக அளவிலும் தேசிய அளவிலும் மற்றவர் பண்பாட்டுக் கூறுகளை மதிக்கவும், புரிந்து கொள்ளவும் அறிவைத் திருப்பிவிடும் போக்கில் அமைய வேண்டும். உள்ளூர் சிக்கல்களையும் உலக நாடுகள் ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதையும் இணைப்பதாக பாடநூல்கள் இருக்க வேண்டும். நாட்டுக்கு நாடு மதமும் பண்பாடும் மாறுவதால் அவரவர் பண்பாட்டுச் சூழலுக்கு எத்தகைய அறநெறிக் கல்வி பொருந்தும் என்பதை நாடுகள் ஒவ்வொன்றும் தாமே நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். நிறுவனத்தின் சூழ்நிலையும் மக்களாட்சி மாண்புகளுக்கு இசைந்ததாக இருந்திட வேண்டும்.

### கற்பிக்கும் கருவிகளும் வசதிகளும்

18. கல்விப் பணியில் ஈடுபட்டுள்ள எல்லாரிடமும் அவர்கள் வசம் போதுமான கல்விக்கருவிகளும் வசதிகளும் இருக்க வேண்டும். எதிர்மறையான உருவகிப்பு களையும் 'மற்றவர்கள்' பற்றிய காமாலைப் பார்வையையும் தவிர்க்கும் வகையில் தேவையான மாற்றங்களைப் பாடநூல்களில் கொண்டுவருவது அவசியம். பாடநூல் தயாரிப்பில் பன்னாட்டுக் கூட்டு முயற்சிகள் ஊக்குவிக்கப்படவேண்டும் பாடநூல்களும் கல்விக் கருவிகளும் பிறவும் புதிதாகத் தயாரிக்கப்படும்போதெல்லாம் அவ்வப்போது உள்ள சூழல் கணக்கில் கொள்ளப்பட வேண்டும். குறித்த பொருள் பற்றிப் பேசும்போது பாடநூல் கள் அதன்பல பரிமாணங்களையும் பேசவேண்டும். அந்த நூல் எந்தப் பண்பாட்டின்/தேசியத்தின் பின்புலத்தில் எழுதப் பட்டது என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகப் புலப் படுத்தப்பட வேண்டும். அவற்றின் உள்ளடக்கம் அறிவியல் பூர்வமானதாக அமைய வேண்டும். யுனெஸ்கோ, ஐ.நாவின் பிற அமைப்புகள் ஆகியவற்றின் ஆவணங்கள் கல்விக்கூடங் களில் பரவலாக பரப்பப்படுவதும் பயன்படுவதும் விரும்பத் தக்கதாகும். அதிலும் குறிப்பாக பொருளாதாரக் காரணங் களினால் கல்விக்கருவி உற்பத்தி விரைவாக இல்லாத நாடு களில் இது மிகவும் விரும்பத்தக்கது. உலக அமைதி, மனித

உரிமைகள், மக்களாட்சி பற்றிய கல்விக்காக தொலைதூரக் கல்விக்கான தொழில்நுட்பங்களும், நவீன தகவல் தொடர்பு முறைகளும் ஏற்படுத்தித்தரப்படவேண்டும்.

**அந்நிய மொழிகளைப் படிக்கவும், பயன்படுத்தவும், பேணவுமான திட்டங்கள்**

19. உலக அமைதி மக்களாட்சி மனித உரிமைகள் பற்றிய கல்வியின் மேம்பாட்டுக்கு எழுத்து, படிப்பு, பேச்சு ஆகியவை தொடர்பான திட்டங்கள் சரியான அளவு வலுப்படுத்தப்பட வேண்டியது அத்தியாவசியம். தகவல் அறியவும், தாம் வாழும் நிலையைத் தெளிவாகப் புரிந்துகொள்ளவும், தேவைகளைத் தெரியப்படுத்தவும், சமூக சுற்றுச்சூழலில் நடைபெறும் நடவடிக்கைகளில் பங்கு பெறவும் எப்படி எழுதவும், படிக்கவும், பேசவும் விரிவான பயிற்சி இருப்பது மிகவாக உதவுகிறதோ அப்படி அயல்மொழி அறிவும் மற்ற பண்பாடு களைப் பற்றிய ஆழமான அறிவு பெறவும் ஒரு வழியாகிறது. சமுதாயங்களிடையிலும் நாடுகளிடையிலும் நல்லவிதமான புரிந்துகொள்ளுதலை உருவாக்க இது அடித்தளம் அமைக் கிறது. யுனெஸ்கோவின் லிங்குவா பாக்ஸ் (மொழி மூலமாக அமைதி) திட்டம் அந்த வகையில் சிறந்ததோர் எடுத்துக் காட்டு.

**கல்விக்கூடங்கள்**

20. கல்வித்துறை மாற்றங்களுக்கு இயல்பான உரிய இடம் பள்ளி களும் வகுப்பறைகளும் ஆகும். கற்பிக்கும்-கற்கும் முறைகள், நடவடிக்கை முறைகள், நிறுவனக் கொள்கைகள் ஆகியவை உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமைகள் ஆகியவற்றை அன்றாட வாழ்வின் பழக்கமாக ஆக்கவேண்டும். கற்றுக் கொள்ளக்கூடிய பாடமாகவும், காட்டவேண்டும். முறைகளைப் பொறுத்தவரை, தீவிர முறைகளைப் பயன்படுத்துதலும், குழுவாக வேலை செய்தலும், தார்மிக விஷயங்களை விவாதித்தலும் நேருக்கு நேராகப் பயிற்றுவித்தலும் ஊக்குவிக்கப்படுவதற்குரியன. அதேபோல், நிறுவனக் கொள்கைகள் தளத்தில் திறமையான மேலாண்மை முறைகளும் பங்கெடுத்தலும் மக்களாட்சி பூர்வமாக பள்ளி நிர்வகிக்கப்படுவதை உறுதிசெய்ய வேண்டும். ஆசிரியர், பெற்றோர், மாணவர்—ஏன் ஒட்டுமொத்த சமூகமும் அதில்

ஈடுபடுத்தப்படவேண்டும்.

21. வெவ்வேறு நாட்டையும், வெவ்வேறு பண்பாட்டுப் பின் புலத்தையும் சேர்ந்த மாணவர், ஆசிரியர், பிற கல்வியாளர்கள் ஆகியோரிடையே நேரடியான சந்திப்புகளும் பரிமாற்றங்களும் ஊக்குவிக்கப்படவேண்டும். பரிசோதனைகளும் புதிய முயற்சிகளும் வெற்றிகரமாக நடத்தப்பட்டுள்ள இடங்களுக்கு பிறர் சென்று பார்க்க வசதிகள் ஏற்படுத்தப்படவேண்டும். இத்தகைய ஏற்பாடுகள் குறிப்பாக பக்கத்து நாடுகளுக்குள் நடத்தப்படுவது நன்று. பொதுவான சிக்கல்களைத் தவிர்ப்பது குறித்து வெவ்வேறு நாட்டு நிறுவனங்களுக்கு இடையிலும் கல்விக்கூடங்களுக்கு இடையிலும் இணைந்து பணி செய்யும் திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டும். நோக்கத்தில் ஒன்று படும் பள்ளிச் சிறார், மாணவர்கள், ஆராய்ச்சி மாணவர் களின் இணையங்கள் சர்வதேச அளவில் உண்டாக்க வேண்டும். அத்தகைய இணையங்களில் பாதுகாப்பின் மைக்கோ, தீவிர வறுமைக்கோ ஆளான பள்ளிகள் இடம்பெற முன்னுரிமை காட்டப்படவேண்டும். இதனை நெஞ்சிலிருத்தி யுனெஸ்கோவின் இணைக்கப்பட்ட பள்ளிகள் அமைப்பினை வலுப்படுத்துவதும் மேம் படுத்துவதும் அவசியமாகும். இந்தவித நடவடிக்கைகள் யாவும் ஒருங்கிணைந்த கல்வித்திட்டங்களின் பகுதியாக இருக்கிற வசதிக்குத் தக்கவாறு துவக்கப்பட வேண்டும்.

22. தேறாதவர்களின் எண்ணிக்கையைக் குறைப்பதற்கு முன்னுரிமை தரப்படவேண்டும். எனவே தனியொரு மாணவனின் சக்திக்கேற்ப கல்வி நீக்கப்போக்குடன் கூடியிருக்க வேண்டும். தன்னம்பிக்கை வளர்ச்சியிலும் கல்வியில் வெற்றி பெற்றே தீரவேண்டும் என்ற உறுதியினை வலுப்படுத்தலும் சமூக ஒருமைப்பாட்டினை அடைவதில் கணிசமான முறையில் அடிப்படைத் தேவைகளாய் உள்ளன. பள்ளிகட்கு அதிக சுயாட்சி என்னும்போது, கல்வியின் வெற்றிக்கு சமுதாயமும் ஆசிரியர்களும் அதிகப்படி பெறுப்பேற்க வேண்டும் என்பதும் உட்பொருளாய் விளங்குகிறது. கல்வி அமைப்புகளின் மேம்பாட்டு அளவுகளுக்கிடையில் வேறுபாடு இருப்பதால் அதை வைத்தே சுயாட்சியின் அளவு நிர்ண யிக்கப்பட வேண்டும். இல்லையேல் கல்வியின் உள்ளடக்கம் பலவினமடைய நேரிடலாம்.

## ஆசிரியர் பயிற்சி

23. ஆசிரியர், நிர்வாகியர், திட்டமிடுவோர், ஆசிரியப் பயிற்சியாளர்கள் என்று கல்வியமைப்பின் எல்லாத்தளத்தில் பணிபுரிகின்றவர்களுக்கும் தரப்படும் பயிற்சிகளில் சமாதானம், மக்களாட்சி, மனித உரிமைகள் ஆகியன பற்றிய கல்வியும் இடம்பெறவேண்டும். அத்தகைய பணிக்கு முந்தைய, பணியில் பொதிந்த பயிற்சிகள், மறு பயிற்சிகள் ஆகியவை நிகழிடத்தில் உள்ள முறைகள், சோதனைகளை கவனித்தல், பயன்களை மறு மதிப்பீடு செய்தல் ஆகியவற்றை அறிமுகம் செய்து நடத்திப்பார்க்க வேண்டும். தமது பணிகளை செவ்வனே முடிக்க பள்ளிகள், ஆசிரியர் பயிற்சி நிறுவனங்கள் முறை சாராக் கல்வித்திட்டங்களின் பொறுப்பாளர்கள் ஆகியோர், சமாதானம், மக்களாட்சி, மனித உரிமைகள் ஆகியவற்றில் அனுபவம் உள்ளவர்கள் (அரசியல் வாதிகள், சட்டத்துறையினர், சமூக இயல்/மனஇயல் அறிஞர்கள் ஆகியோர்) உதவியையும் மனித உரிமைப் பணிகளில் சிறப்பாக ஈடுபட்டு வரும் அரசுசாரா அமைப்புகளின் உதவியையும் நாட வேண்டும். எல்லாவித கற்பிப்போர்களுக்கான பயிற்சிகளிலும் ஒரு பகுதியாக மனித சக்திப் பரிமாற்றங்களும் கற்பிக்கும் கலையும் இடம்பெறவேண்டும்.

24. ஆசிரியப் பணியை மேம்படுத்திக்கொள்ளும் விரிவான கொள்கையில் ஆசிரியர் பயிற்சி நடவடிக்கைகள் செவ்வனே பொருந்த வேண்டும். சர்வதேச மேதைகள், ஆசிரியர் சங்கங்கள் தொழில் அமைப்புகள் ஆகியோர் நடவடிக்கை முயற்சிகளை தயாரிப்பதிலும் செயல்படுத்துவதிலும் ஈடுபடுத்தப்பட வேண்டும். ஏனெனில் ஆசிரியர்களிடையிலேயே அமைதிக் கலாசாரத்தைப் பரப்புவதில் அவர்களுக்கெல்லாம் முக்கிய பங்கு இருக்கிறது.

## பலவீனமான பகுதியினருக்கான நடவடிக்கைகள்

25. பலவீனமான பகுதியினர், அண்மையில் பூசல்களுக்கு இடையில் வாழ நேர்ந்தோர், போர்சூழ்நிலைகளில் சிக்கிக் கொண்டோர் ஆகியோருக்கு உடனடியாக சிறப்புக் கவனம் செலுத்த வேண்டியது கட்டாயத்தேவை. விளிம்பில் வாழும் குழந்தைகளும் பால்முறை வன்முறைக்கோ பிற வன்முறைக்கோ ஆளான மகளிர்-சிறுமியர் ஆகியோருக்கும் சிறப்புக் கவனம் அத்தியாவசியம். கல்வியாளர்களுக்கும்,

போரிடும் குழுக்களைச் சேர்ந்த குடும்ப உறுப்பினர்கள், செய்தியாளர்கள் ஆகியோருக்காக பூசல்களங்களுக்கு வெளியே பயிற்சிப் பட்டறைகளும் சிறப்பு மையங்களும் அமைத்தல், போருக்குப் பிந்தைய சூழ்நிலையில் கல்வியாளருக்கு சிறப்புப் பயிற்சி தருதல் ஆகியவற்றை நடைமுறையில் இயலக்கூடிய நடவடிக்கைகளுக்கு உதாரணங்களாகக் கூறலாம். இயன்ற இடமெல்லாம் இத்தகு முயற்சிகளை அரசாங்கக் கூட்டுறவுடன் மேற்கொள்ளல் நலம்.

26. கைவிடப்பட்ட குழந்தைகள், வீதிகளில் உள்ள குழந்தைகள், புலம்பெயர்ந்த குழந்தைகள், பொருளாதார ரீதியாகவோ பால் அடிப்படையிலோ வஞ்சிக்கப்பட்ட குழந்தைகள், குழந்தை அகதிகள் முதலியவர்களுக்காக கல்வித்திட்டங்கள் ஏற்படுத்தி செயல்படுதல் அவசரத் தேவையாகும்.

27. சுற்றுச் சூழல் பாதுகாப்பிலும், ஒருங்கிணைவு நடவடிக்கை களிலும் குழந்தைகளும் இளைஞர்களும் பங்கு பெறுவதை வலியுறுத்தும் இளைஞர்களுக்கான சிறப்புத் திட்டங்களை ஏற்பாடு செய்வதும் அதே அளவுக்கு அவசரமானதாகும்.

28. மேலும், கல்வி பயில்வதில் சிரமங்கள் கொண்டோர் (இது மனவளர்ச்சி குன்றியவர்களைக் குறிக்கலாம்) களின் வித்தியாசமான தேவைகள் குறித்தும் முயற்சிகள் மேற் கொள்ள வேண்டும். அவர்களை தனிமைப் படுத்திவிடாமல், ஒருங்கிணைந்த கல்விச் சூழலிலேயே அவர்களுக்குரிய வகையான கல்வியை அளிப்பதன்மூலம் இதனைச் செய்யலாம்.

29. அத்தோடுகூட சமூகத்தின் பல்வேறு குழுவினர்க்கு இடையிலும் நல்லுணர்வை ஏற்படுத்தும் வகையில் தேசிய கலாசார இன-சமய மொழி சார்ந்த சிறுபான்மையினர், ஆதிகுடிகள், ஆகியோரின் கல்வி உரிமைகளுக்கும் மரியாதை இருக்க வேண்டும். பாடத்திட்டம், கற்பிக்கும் முறைகள், கல்வி வசதி ஏற்படுத்தப்படும் விதம் ஆகியவற்றில் இந்த அக்கறையும் எதிரொலிக்க வேண்டும்.

### ஆராய்ச்சியும் மேம்பாடும்

30. சிக்கல்கள் புதியனவாயிருக்கும்போது தீர்வுகளும் புதிதாய்க் காண வேண்டியிருக்கிறது. உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமை ஆகியவை பற்றிய கல்வியின் சிக்கலான இயல்பை

பயனுள்ள முறையிலும் அதற்கேற்ற முறையிலும் எதிர் கொள் வதற்கு ஆராய்ச்சி முடிவுகளை இன்னும் நன்றாகப் பயன்படுத் துவதற்கான உத்திகளைக் கண்டாக வேண்டும், புதிய கற்பிப்பு முறைகளையும், புது அணுகல் நெறிகளையும் வளர்த்தெடுக்க வேண்டும். சமூகப் பாடங்களில் ஆய்வு செய்யும் நிறுவனங்கள் கல்வி ஆராய்ச்சி நிறுவனங்கள் ஆகியவற்றிடையே ஆய்வுக் கான விஷயங்களைத் தெரிந்தெடுப்பதில் ஒருங்கிணைப்பை அதிகப்படுத்த வேண்டும். கல்வித்துறையில் ஈடுபட்டுள்ள அனைவரும் (அரசாங்கம், பெற்றோர், ஆசிரியர் இன்ன பிறர்) 'முடிவெடுத்தல்' குறித்த ஆய்வுகள் நிகழ்த்தி அதன்மூலம் கல்வி நிர்வாகம் பயனுள்ள முறையில் நடப்பதை மேம்படுத்த வேண்டும். மனித உரிமைகள் அதிலும் மகளிர் உரிமைகள், சுற்றுச்சூழல் பாதுகாப்பு ஆகியவை பற்றி மனிதர்களின் அணுகுமுறையை மாற்றுவதற்கான புதிய வழிகளைக் காணுவது குறித்தும் ஆய்வுகள் நடத்தப்படவேண்டும்.

தேசிய அளவிலும் சர்வதேச அளவிலும் முடிவுகளை அளந்து அறிவிக்கும் காரணிகளையும் அமைப்பையும் உருவாக்குதல்,

அ. புதுமையான பரிசோதனைகள் குறித்து விபர வங்கிகள் அமைத்தல்,

ஆ. ஆராய்ச்சி முடிவுகளையும் பிற தகவல்களையும் பரப்பவும், பகிர்ந்து கொள்ளவும் ஏற்பாடுகளை வலுப்படுத்துதல் ஆகியவை மூலம் கல்வித்திட்டங்களின் பலாபலன்களை நன்றாக அனுமானிக்கலாம்.

**உயர்கல்வி**

31. உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமைகள் ஆகியவை பற்றிய கல்வியில் உயர்கல்வி நிறுவனங்கள் பல வழிகளில் பங்களிக்கலாம். இந்தத் துறையில், உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமைகள் நியாயம், தொழில் நியாயங்கள், குடிமைக் கடப்பாடுகள், சமூகப்பொறுப்பு ஆகியவற்றுடன் தொடர்புள்ள திறமைகள், மதிப்பீடுகள், அறிவு ஆகியவற்றை பாடத்திட்டத்தில் சேர்ப்பதற்கான வழிவகைகள் செய்யப்படவேண்டும். உலகமே நெருங்கி வரும் சூழ்நிலையில் அரசுகள் ஒன்றை யொன்று மேன்மேலும் சார்ந்திருப்பதை மாணவர்கள் உணர்வதையும் உயர்கல்வி நிறுவனங்கள் உறுதிப்படுத்த வேண்டும்.

### கல்வித் துறைக்கும் பிற சமூகஇயல் ஊக்கிகளுக்கும் ஒருங்கிணைப்பு

32. குடிகளின் கல்விக்கு கல்வித்துறை மட்டுமே முழுதும் பொறுப் பல்ல. அது இப்பணியினை பயனுள்ள முறையில் செய்வதற்கு, குறிப்பாக குடும்பம், மரபுசார் தகவல் அமைப்புகள் உள்ளிட்ட தகவல் ஊடகங்கள், தொழில்துறை, அரசுசாரா அமைப்புகள் ஆகியவற்றுடன் நெருக்கமாக இணைந்து பணியாற்ற வேண்டும்.

33. பள்ளிக்கும் குடும்பத்துக்குமிடையே ஒருங்கிணைவுக்கு, பள்ளி செயல்பாடுகளில் பெற்றோர் பங்கெடுப்பதை ஊக்குவிக்கும் நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். அத்துடன், வயதுற் றோர்க்கும் பொதுவாக ஊரார் அனைவருக்கும் கல்வி வழங்கும் திட்டங்களை வரைந்து செயலாக்குவதும் பள்ளியின் பணியை வலுப்படுத்துவதற்கான அவசியத் தேவையாகும்.

34. குழந்தைகளையும் இளைஞர்களையும் சமூக அங்கமாக ஒருங்கிணைப்பதில் செய்தி ஊடகங்களின் தாக்கத்தை அனைவரும் ஒப்புக்கொள்வது வளர்ந்து வருகிறது. எனவே, விமர்சனக் கண்ணோடு ஊடகங்களின் பணியை அலசவும் அவற்றால் பயனடையவும் ஆசிரியர்களுக்கு பயிற்சி தருவதும் மாணவர்களை ஆயத்தப்படுத்துவதும் அவசியமாகிறது. இதற்கும் இவ்வூடகங்களினால் பயனடைவதில் திறமையை வளர்த்துவிடவும் சில தெரிந்தெடுத்த திட்டங்கள் தேவைப்படு கின்றன. அதேசமயம், குறிப்பாக வெறுப்பையும் வன்முறை யையும், கொடுமையையும், மனித கவுரவத்துக்கெதிரான அவமரியாதையையும் தூண்டக்கூடிய நிகழ்ச்சிகளைத் தவிர்ப்பதன்மூலம் அமைதி, மனித உரிமைக்கு மரியாதை தருதல், மக்களாட்சி, சகிப்புத்தன்மை முதலிய மாண்புகளை வளர்க்குமாறு இவ்வூடகங்களையும் வலியுறுத்தவேண்டும்.

### இளைஞர்களுக்கும் பெரியோர்களுக்கும் முறைசாராக் கல்வி

35. மனித உரிமைகள், மக்களாட்சி, உலக அமைதி ஆகிய வற்றைக் கற்பிப்பதில், பள்ளிக்கு வெளியே நீண்ட நேரம் செலவிடுவோர், முறையான கல்விக்கான வாய்ப்பற்றோர், தொழில்பயிற்சி மற்றும் வேலை வாய்ப்பற்றோர், பட்டாளத்தில் உள்ளோர், ஆகியோர் சரியான இலக்காக அமைவர். முறையான கல்விக்கும் தொழிற்பயிற்சிக்கும் வாய்ப்புகளைத் தேடிக் கொண்டிருக்கும் இவர்களுக்கு, முறைசாராக்கல்வி மூலம் பயனடைவது ஏற்புடையது.

அவர்களது தேவைகளுக்கேற்ப உருவமைக்கப்படுமானால், முறைசாராக் கல்வியே அவர்கள் பொறுப்புள்ளவர்களாக, பயனுள்ள வகையில் குடிமக்கள் என்ற தளத்தில் தம் கடமைகளை ஆற்ற ஆயத்தப்படுத்திவிடும்.

உலக அமைதி, மனித உரிமைகள், சட்டத்திற்கான மரியாதை ஆகியவற்றை சிறைகள், சீர்திருத்தப்பள்ளிகள், சிகிசைசையகங்களில் உள்ள சிறுவர் சிறுமியர்க்கும் கற்றுத்தர வேண்டும்.

36. அரசு சாரா அமைப்புகள் சிறப்பாகப் பங்களிக்கக்கூடியதான முதியோர் கல்வித் திட்டங்கள் உள்ளூர் வாழ்க்கை நிலைமைக்கும் உலகப் பிரச்சினைகளுக்கும் உள்ள சங்கிலியை அனைவரும் உணரச் செய்யவேண்டும். உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமைகள பற்றிய பாடங்களுக்கு அடிப்படைக் கல்வித் திட்டங்கள் குறிப்பான முக்கியத்துவமளிக்க வேண்டும். நாடோடிக் கதைகள், நாடகங்கள், சமூக விவாத அரங்குகள் வானொலி போன்ற பொருத்தமான கலை வடிவங்கள் யாவும் விரிவான அளவிலான 'மக்கள் கல்விக்கு பயன்படுத்தப்பட வேண்டும்.

## வட்டார அளவிலும் நாடுகளுக்கிடையிலும் ஒத்துழைப்பு

37. சமாதானத்தையும் ஜனநாயகத்தையும் வளர்த்தெடுப்பதற்கு, வட்டார ஒத்துழைப்பு, சர்வதேச ஒற்றுமை, சர்வதேச அமைப்புகள்-அரசாங்கம்-அரசுசாரா அமைப்புகள் அறிவியலார் உலகம், வணிகர் வட்டம், தொழில்துறை, தகவல் ஊடகங்கள் ஆகியவைகளுக்கிடையேயான ஒத்துழைப்பை வலுப்படுத்துதல் ஆகியன தேவைப்படுகின்றன இந்த ஒன்றுகூடலும் ஒத்துழைப்பும் வளரும் நாடுகள் உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமைகள் ஆகியவற்றைக் கற்பிப்பதை வளர்ப்பதற்கான தேவையை நிறைவு செய்து கொள்ள உதவ வேண்டும்.

38. இந்த நடவடிக்கைத் திட்ட வரையறைக்கு செயல்வடிவம் தரும் முயற்சிகளுக்கு உதவியாக யுனெஸ்கோ தனது நிறுவன ரீதியான திறமைகளைத் தந்துதவ வேண்டும். குறிப்பாக, வட்டார அளவிலும் உலகளவிலுமான தனது புதுமைகள் இணையத்தை இப்பணிக்குப் பயன்படுத்தச் செய்ய வேண்டும். 'இணைத்துக் கொள்ளப்பட்ட பள்ளிகள் திட்டம்' யுனெஸ்கோ சங்கங்கள், யுனெஸ்கோ மன்றங்கள், யுனெஸ்கோ கல்வி நிலையங்களுக்கான ஆய்வுரை, அறக்கட்டளை ஏற்பாடுகள்,

ஆப்ரிக்கா-ஆசியா பசிபிக்-லத்தீன் அமெரிக்கா-கரிபீயன்-அரபுநாடுகள்-ஐரோப்பா ஆகிய இடங்களுக்கான பெரிய கல்வித்திட்டங்கள், ஜமேதியன் உலக மாநாட்டையடுத்த தொடர்நடவடிக்கைகளுக்கான அமைப்புகள்—குறிப்பாக, கல்வி அமைச்சர்களின் வட்டார மாநாடுகள், உலகளாவிய மாநாடுகள் ஆகியவை குறிப்பான பங்களிப்பு செலுத்த வேண்டும். இம்முயற்சிகளில்—குறிப்பாக தேசிய அளவில்—அந்தந்த நாட்டிலுள்ள யுனெஸ்கோவுக்கான தேசிய ஆணையங்கள் உத்தேச நடவடிக்கைளின் பயனுறுத் தன்மையை வளர்க்க ஒரு பெரும் அருட்கொடையாக அமைய வேண்டும்.

39. வட்டார அளவிலும், உலகளவிலும் நிகழவிருக்கும் உச்சநிலைக் கூட்டங்களில் இந்த திட்டவரையறையைப் பயன்படுத்துவது தொடர்பான கேள்விகளை யுனெஸ்கோ எழுப்ப வேண்டும்; கல்வியாளர்களின் பயிற்சிக்கான திட்டங்களை வரைய வேண்டும்; நிறுவனங்களின இணையங்களை உருவாக்க வேண்டும்-வலுப்படுத்த வேண்டும்; கல்வித்திட்டங்கள், முறைகள், கருவிகள் பற்றியெல்லாம் ஒப்பீட்டுமுறை ஆராய்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். உலக அமைதி, மனித உரிமைகள், மக்களாட்சி ஆகியவை பற்றிய கல்வி மீதான பிரகடனத்தில் பேசப்பெறும் கடப்பாடுகளுக்கு ஏற்ப திட்டங்கள் முறையாக கால ஒழுங்குப்படி மதிப்பீடு செய்யப் படவும் வேண்டும்.

40. உலகளாவிய நடவடிக்கைத் திட்டமொன்றை உருவாக்க வசதியாயும் ஒருங்கிணைந்த கூட்டு நடவடிக்கைகள் எடுப்ப தற்கான முன்னுரிமை வேலைகளை முடிவு செய்ய வசதி யாகவும் இந்தத் துறையிலும் ஐ.நாவின் 'உலக அமைதிக்கான செயல்நிரல்', 'மேம்பாட்டுக்கான செயல் நிரல்', 'செயல் நிரல்-21', 'சமூக உச்ச மாநாடு', 'மகளிர் பற்றிய நான்காவது உலக மாநாடு' ஆகியவற்றின் வரிசையில் ஐ.நா. சார்ந்த மற்ற நிறுவனங்களின் உதவியுடனும் பிற வட்டார சர்வதேச நிறுவ னங்களின் உதவியுடனும் இந்த செயல்திட்டத்தை நடைமுறைப்படுத்த ஆரம்ப முயற்சிகளைத் துவக்க வேண்டும். அவற்றில் உலக அமைதி, மக்களாட்சி, மனித உரிமைகள் பற்றிய கல்விக்கான பன்னாட்டுக் கூட்டுறவுக்காக யுனெஸ்கோ மேலாண்மையின்கீழ் ஒரு நிதியம் அமைக்கலாம்.

41. இந்த செயல்திட்ட வரையறையை நடைமுறைப் படுத்து வதில் தேசிய அளவிலான அரசுசாரா அமைப்புகளும் உலகளாவிய அரசுசாரா அமைப்புகளும் தீவிரமாக பங்கெடுப்பது ஊக்குவிக்கப்படவேண்டும்.

# 4

# கல்வியும் மனித உரிமைகளும் பற்றிய தேசியக் கொள்கை

*இந்திய நாடாளுமன்றத்தால் 1986இல் ஏற்றுக்கொள்ளப்பட்ட தேசிய கல்விக் கொள்கையிலிருந்து சில பத்திகள் கீழே தரப்படுகின்றன. சில பகுதிகள் சமச்சீரின்மையை அகற்றுவதையும் சமமான கல்வி வாய்ப்புகளை அளிப்பதையும் வலியுறுத்துகின்றன. பிற பகுதிகள் மனித உரிமை பற்றிய கல்வியில் முறைமைகள், உள்ளடக்கம் ஆகியவற்றின் சில அம்சங்களை வலியுறுத்துகின்றன.*

---

### தேசியக் கல்விமுறை

3.1 எந்தக் கோட்பாடுகளின் அடிப்படையில் தேசியக் கல்விமுறை உருவாக்கப்பட்டுள்ளதோ அவைகளை அரசமைப்புச்சட்டம் தன்னுள் கொண்டுள்ளது.

3.2 குறிப்பிட்ட நிலைவரை, சாதி, மதம், இடம், பால் ஆகியவை எதுவாயிருந்தாலும் மாணவர்களனைவரும் சமமான தரமுள்ள கல்விக்கு சம வாய்ப்புகள் பெற்றிருக்கிறார்கள் என்ற அடிப்படையில் தேசியக் கல்வி முறை நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. அதனை எய்துவதற்கு உரிய வகையில் நிதி வசதி செய்யப்பட்ட திட்டங்களை அரசு துவங்கும். 1986ஆம் ஆண்டு கொள்கை பரிந்துரைத்த பொதுப்பள்ளி முறைகளின் திசையில் பயனுள்ள நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

3.3 தேசிய கல்வி முறை ஒரு பொதுவான கல்வியமைப்பை உருவகிக்கிறது. 10+2+3 அமைப்பு இப்போது நாடு முழுவதும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. முதல் பத்தாண்டுகளின் உட்பகுப்பைப் பொறுத்தவரை ஐந்தாண்டு ஆரம்பக் கல்வியைக் கொண்ட துவக்க அமைப்பு, மூன்றாண்டு உயர் துவக்கம், இரண்டாண்டு உயர் பள்ளிக் கல்வி என்பதை

நோக்கி முயற்சி மேற்கொள்ளப்படும். நாடு முழுவதும் +2 நிலையும் பள்ளிக்கல்வியிலேயே ஒரு பகுதியாக ஏற்கப்படவும் முயற்சி மேற்கொள்ளவேண்டும்.

3.4 ஒரு தேசிய பாடத்திட்ட அடிப்படையின்மீது தேசியக் கல்வி முறை நிர்மாணிக்கப்படும். அப்பாடத்திட்ட வரையறையில் ஒரு ஆதாரப் பொதுக்கூறும் நெளிவுசுழிவான பிற பாடங்களும் இருக்கும். இந்திய விடுதலைப் போராட்ட வரலாறும் தேசிய அடையாளத்தைப் பேணிக்காத்திடத் தேவைப்படுகிற அரசமைப்பு ரீதியான கடமைகள் முதலிய அம்சங்கள் பொது ஆதாரக் கூறில் அடங்கும். பாடப் பகுப்பு களைத் தாண்டிய இக்கூறுகள் இந்தியாவின் பொதுப் பண் பாட்டு மரபு, சமதர்மம் தத்துவம், ஜனநாயகம், சமயச் சார்பின்மை, பால் சமத்துவம், சுற்றுச்சூழல் பாதுகாப்பு, சமூகத் தடைகளைத் தகர்த்தல், சிறு குடும்பக் கொள்கை, அறிவியல் மனோநிலை ஆகியவற்றை வளர்ப்பவையாக வடிவமைக்கப் பெறும். எல்லா கல்வித்திட்டங்களும் முழுக்க முழுக்க மதசார்பற்ற மதிப்பீடுகளுடன் நடைமுறைப் படுத்தப்படும்.

3.5 எப்போதுமே இந்தியா உலக முற்றிலும் ஒரே குடும்பமே என்ற நம்பிக்கையுடன் நாடுகளுக்கிடையே புரிதலும் அமைதியும் நிலவ உழைத்து வந்துள்ளது. இந்த வளமான மரபுக்கேற்ப உலகளாவிய பார்வையை கல்வி வலுப்படுத்த வேண்டும். இளையத் தலைமுறையை பன்னாட்டுக் கூட்டுறவுக்கும் சமாதான சக வாழ்வுக்கும் பக்குவப்படுத்த வேண்டும். இந்த அம்சத்தைப் புறக்கணிக்க முடியாது.

3.6 சமத்துவத்தை வளர்க்க கல்வி கிடைப்பதில் மட்டுமல்ல, அதில்வெற்றி பெறுவதிலும் சம வாய்ப்புகளை உருவாக்குவது அவசியமாகும். அத்துடன் பாடத்திட்ட மூலக்கூறுகள் வழியே மாந்தர்கள் அனைவர்க்குமிடையே உள்ளார்ந்த சமத்துவம் இருப்பதைப் புரிய வைக்கவேண்டும். சமூகச் சூழல் காரண மாகவும் பிறப்பு என்ற நம்மை மீறிய காரணியினாலும் அளிக்கப்படுகிற விருப்பு வெறுப்புகளையும் மனக்கோணல் களையும் அகற்றுவதை முக்கிய நோக்கமாக ஆக்க வேண்டும்.

### சமத்துவத்துக்காகக் கல்வி

#### வேறுபாடுகள்

4.1 வேறுபாடுகளை அகற்றுவதற்கும் இதுவரை சம இடம்

மறுக்கப்பட்டு வந்தவர்களின் குறிப்பான தேவைகளை கவனிப்பதன் மூலம் கல்வி வாய்ப்புகள் சமமாக்கப் படுவதற்கும் புதிய கொள்கை சிறப்பான அழுத்தம் தரும்.

மகளிர் சமத்துவத்துக்கான கல்வி

4.2 மகளிர் நிலையில் அடிப்படை மாறுதலை ஏற்படுத்த கல்வி ஒரு சாதனமாகப் பயன்படுத்தப்படும். சேர்ந்துபோய் பெருகி விட்ட கடந்த காலத்தில் 'சமச்சீரின்மையை ஈடுகட்ட மகளிர்க்கு சாதகமாக தேர்ந்த சிந்தனையில் உருவான வசதியதி கரிப்புகள் ஏற்படுத்தப்படவேண்டும். மகளிர் கரங்களுக்கு வலுச் சேர்ப்பதில் தேசிய கல்விக்கொள்கை ஒரு நேர்மறையான குறுக்கீட்டுப்பணியை சிறப்பாகப் பங்களிக்கும். புனரமைக்கப் பட்ட பாடத்திட்டங்கள், பாடங்கள், ஆசிரியர்களையும் முடிவெடுப்பவர்களையும் நிர்வாகிகளையும் நெறிப்படுத்தலும் பயிற்றுவித்தலும், கல்வி நிறுவனங்களையும் ஈடுபாடு காட்டச் செய்தல் ஆகிய வழிகளில் புதிய மதிப்பீடுகளின் வளர்ச்சிக்கு உதவும். இது ஒரு நம்பிக்கையின் செயல் வெளிப்பாடும் சமூகப் பொறியியல் நடவடிக்கையுமாகும். பல்துறைக் கல்விகளிலும் மகளிர் பற்றிய ஆய்வுகள் வளர்த் தெடுக்கப்படும். மகளிர் மேம்பாட்டை அதிகரிக்கக்கூடிய தீவிரத்திட்டங்களை மேற்கொள்ளுமாறு கல்வி நிலையங்கள் ஊக்குவிக்கப்படும்.

4.3 மகளிர் கல்லாமையை அகற்றவும் துவக்கக் கல்வி கிடைப் பதிலும், தக்க வைத்துக் கொள்வதிலும் குறுக்கிடும் தடைகளை அகற்றவும் தனி ஆதரவு சேவைகள், காலகெடு, பயனுள்ள தொடர்கண்காணிப்பு ஆகியவற்றை ஏற்பாடு செய்வதன் மூலம் உயர்ந்த பட்ச முன்னுரிமை தரப்படும். தொழிற் கல்வி, தொழில் நுட்பக் கல்வி, வேலை வாய்ப்புக் கல்வி ஆகியவற்றில் பல மட்டங்களிலும் மகளிர் பங்கு பெறுவதற்கு முதன்மை தரப்படும். தொழில்கல்வியிலும் வேலைக் கல்வியிலும் 'இவைதான் இவர்களுக்கு' என்ற வரையறுத்தல்களைத் தீவிரமாகக் களையவும், காலம் காலமாக மகளிர் இடம் பெறாத தொழில்களிலும், இப்போதுள்ள மற்றும் புதிதாய்த் தோன்றி வருகிற ொழில்நுட்பத் துறைகளிலும் மகளிர் பங்கு பெறுவதை வளர்க்கவும் வகை செய்யும் முறையில் பாகுபாடு காட்டாமை என்ற கொள்கை தீவிரமாகப் பின்பற்றப்படும்.

ஷெட்யூல்டு பிரிவினரின்

4.4 எல்லாப் பகுதிகளிலும் சிற்றூர் ஆண், சிற்றூர் பெண், நகர ஆண், நகர மகளிர் என்று இருக்கின்ற பரிமாணங்கள் நான்கிலுமே கல்விநிலைகள், கல்வி மட்டங்கள் அனைத்திலுமே ஷெட்யூல்டு பிரிவினரை மற்ற மக்களுடன் சமச்சீர் செய்வதே அவர்களது கல்வி மேம்பாட்டுப் பணியின் மையப்புள்ளி.

4.5 இதற்காக உருவாக்கப்பட்டுள்ள நடவடிக்கைகளில்

அ. தம் குழந்தைகளை 14 வயதுவரை தொடர்ந்து பள்ளிக்கனுப்பும் வறிய குடும்பங்கட்கு ஊக்கப்பரிசுகள்.

ஆ. தோட்டித்தொழில், தோல் தொழில்கள் புரிவோரின் குழந்தைகளுக்கு மெட்ரிகுலேஷனுக்கு முந்திய நிதியுதவிகளை முதல் வகுப்பிலிருந்தே வழங்குதல், வருமானம் எதுவாயிருந்தாலும் அத்தகைய குழந்தைகள் அனைவரையும் இத்திட்டத்தில் கொண்டுவருதல், அவர்கள் நலனைக் குறிவைத்து காலகெடு உள்ளனவாக திட்டங்களை மேற்கொள்ளுதல்,

இ. ஷெட்யூல்டு பிரிவைச் சார்ந்த குழந்தைகளின் பள்ளிச் சேர்க்கை, பள்ளியில் தொடர்தல், வெற்றிகரமாகப் படிப்பை முடித்தல் ஆகியவை எந்நிலையிலும் தாழ்வுறாது இடையறாத ஆணிவேர் மட்டத்திட்டங்களாலும் கண்காணிப்பினாலும் உறுதி செய்தல்.

ஈ. ஷெட்யூல்டு பிரிவிலிருந்து ஆசிரியர்கள் நியமனம்.

உ. படிப்படியாக ஷெட்யூல்டு பிரிவு மாணவர்களுக்கு மாவட்டத் தலைநகர்களில் விடுதி வசதிகள் ஏற்படுத்திக் கொடுத்தல்.

ஊ. ஷெட்யூல்டு பிரிவு மக்களும் முழுமையாகப் பயன்பெற வசதியாக இடங்களைத் தேர்ந்தெடுத்து பள்ளிக்கட்டிடங்கள், பால்வாடிகள், முதியோர் கல்வி மையங்கள் ஆகியவற்றை அமைத்தல்.

எ. ஷெட்யூல்டு பிரிவினருக்கு வலுவான கல்வி வசதிகள் கிட்ட வழி செய்யும் வகையில் ஜவகர் வேலை வாய்ப்புத் திட்ட வளங்களைப் பயன்படுத்துதல்.

ஏ. கல்வியில் ஷெட்யூல்டு பிரிவினர் பங்கெடுப்பதை வளர்ப்பதற்காக புதுப்புது வழிகளைக் கண்டுபிடிப்பதில் இடைவிடாத புதுமை முயற்சிகள்.

**பழங்குடியினரின் கல்வி**

4.6 பழங்குடியினரை மற்றவர்களுடன் சரிநிகர் சமானமாக ஆக்கப் பின்வரும் அவசர நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

அ. பழங்குடி மக்கள் வசிக்கும் பகுதிகளில் துவக்கப்பள்ளிகள் திறக்க முன்னுரிமை அளிக்கப்படும். பொதுவாகக் கல்விக்காக ஒதுக்கப்பட்டுள்ள நிதியிலிருந்து மட்டுமின்றி, ஜவகர் வேலைவாய்ப்புத்திட்டம் பழங்குடியினர் நல்வாழ்வுத்திட்டம் போன்றவற்றின் நிதியிலிருந்தும், முன்னுரிமை தந்து, இப்பகுதிகளில் பள்ளிக் கட்டிடங்கள் கட்ட நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

ஆ. பழங்குடியினரின் சமூக பண்பாட்டியல் பின்னணிகள்: பல சமயங்களில் அவர்களின் சொந்த பேச்சுமொழிகள் உட்பட—தனித்தன்மைகள் கொண்டவை. இது பாடங் களையும், கல்விக் கருவிகளையும் ஆரம்பக் கட்டத்தில் அவர்களின் பேச்சு மொழிகளில் வடிவமைத்து, பிறகு வட்டார மொழிக்கு மாற்றிக்கொள்ள வழிவகைகள் செய்ய வேண்டியதன் அவசியத்தை அடிக்கோடிட்டுக் காட்டுகிறது.

இ. படித்த பிரகாசமான பழங்குடி இளைஞர்களுக்கு தங்கள் பகுதிகளில் ஆசிரியப் பணியில் சேர ஊக்கமும் பயிற்சியும் அளிக்கப்படும்

ஈ. ஆசிரமப் பள்ளிகள் உட்பட வசிக்க வசதிகொண்ட பள்ளிகள் அதிக அளவில் நிறுவப்படும்.

உ. அவர்களது தனித்தேவைகளையும் வாழ்க்கை முறை யையும் கவனத்தில் கொண்டு பழங்குடியினருக்கான ஊக்கப் பரிசுத்திட்டங்கள் வடிவமைக்கப்படும். உயர்க் கல்விக்கான உதவித்தொகைத் திட்டங்களில் தொழிற் கல்வி, தொழில்சார் கல்வி, தொழில் நுட்பக் கல்வி ஆகிய வற்றுக்கு அழுத்தம் தரப்படும். குறை நிவர்த்திக்கும் சிறப்பு வகுப்புகள், மற்ற திட்டங்கள்மூலம் சமூக-மனவியல் தடைகளை உடைத்துக்கொண்டு அவர்கள் பல துறைக் கல்வியிலும் தேர்ச்சி பெறுவதற்கு உதவப்படும்.

ஊ. ஆங்கண்வாடி, முறைசாராக்கல்வி மையங்கள், முதியோர் கல்வி மையங்கள் ஆகியனவற்றில் பழங்குடியினர் பிரதான மாக வசிக்கும் பகுதிகளுக்கு முன்னுரிமை தரப்படும்.

எ. பழங்குடி மக்களின் வளமான பண்பாட்டு மரபுகளையும், அவர்களது ஏராளமான படைப்புத் திறன்களையும்

பற்றிய விழிப்புணர்வு ஏற்படுத்தும் வகையில் கல்வியின் எல்லா நிலைகளிலும் பாடங்கள் வடிவமைக்கப்படும்.

**கல்வியில் பிற்பட்ட பிற பிரிவினரும், பிற இடங்களும்**

4.7 கல்வியில் பிற்பட்ட வகுப்பினர் அனைவருக்கும்—குறிப்பாக நாட்டுப்புறத்து மக்களுக்கு—உரிய வகையில் ஊக்கப்பரிசுகள் ஏற்படுத்தப்படும். மலையக-பாலைநில மாவட்டங்கள், தொலைதூரப்பகுதிகள், போக்குவரத்து வசதிக் குறைவான பகுதிகள், தீவுகள் ஆகிய பகுதிகளுக்கும் போதுமான நிறுவனக் கட்டுமானங்கள் ஏற்படுத்தப்படும்.

**சிறுபான்மையினர்**

4.8 சில சிறுபான்மை இனங்கள் கல்வியைப் பொறுத்தவரை வசதியற்றவைகளாகவோ—பிற்பட்டனவாகவோ உள்ளன. சமூக நீதியும் சமத்துவமும பேணப்பட வேண்டுமென்ற வகையிலே இவ்வினங்களின் கல்வியில் இன்னும் அதிக கவனம் செலுத்தப்படும். தமது சொந்தக் கல்வி நிறுவனங்களை நிறுவிக் கொள்ளவும் நிர்வகிக்கவும் தமது மொழியையும் பண்பாட்டையும் பாதுகாத்துக்கொள்ளவும். அரசமைப்புச்சட்டம் தந்துள்ள உறுதிகளும் இதிலடங்கும். அதேசமயம் பாடநூல் தயாரிப்பிலும் எல்லா பள்ளிச் செயல்பாடுகளிலும், பாகுபாடின்மை கடைப்பிடிக்கப்படும். அடிப்படையில் பாடக்கூறுகளுக்கிசைந்த முறையில் பொதுவான தேசிய இலக்குகளையும் இலட்சியங்களையும் போற்றும் அடிப்படை கொண்ட ஒருமைப்பாட்டை வளர்க்கவும், இயன்ற நடவடிக்கைகள் அனைத்தும் மேற்கொள்ளப்படும்.

**குறைபாடுடையோர்**

மனக்குறைபாடுடையோர், உடற்குறைபாடுள்ளோர் எல்லாரையும் சமூகத்தின்பிற உறுப்பினர்களுடன் சம பங்காளிகளாக இணைப்பதும், அவர்களையும் இயல்பான வளர்ச்சிக்கு தயார் செய்வதும், வாழ்க்கையைத் துணிவோடும் தன்னம்பிக்கையோடும் எதிர்கொள்ளுமாறு செய்வதும் நோக்கமாக இருக்கவேண்டும். அதற்காக, பின்வரும் செயல்பாடுகள் மேற்கொள்ளப்படும்:

அ. இயன்ற இடத்தில் எல்லாம் நடக்கும் குறைபாடோ பிற எளிய குறைபாடோ கொண்ட குழந்தைகளுக்கு மற்றவர்களுடன் சேர்த்தே கல்வியளிக்கப்படும்;

ஆ. தீவிரக் குறைபாடுகள் உள்ள குழந்தைகளுக்கு, முடிந்தவரை எல்லா மாவட்டத் தலைநகர்களிலும் விடுதியுடன்கூடிய தனிப் பள்ளிகள் ஏற்படுத்தப்படும்;

இ. குறைபாடுடைய குழந்தைகளுக்கு தொழிற்பயிற்சி தர போதுமான ஏற்பாடுகள் செய்யப்படும்.

ஈ. ஆசிரியர் பயிற்சித்திட்டங்கள், குறிப்பாக ஆரம்பப்பள்ளி ஆசிரியருக்கானவை, குறைபாடுள்ள குழந்தைகளின் சிரமங் களை எதிர்கொள்ளப் பயிற்றுவிப்பனவாக சீரமைக்கப்படும்.

உ. குறைபாடுள்ள குழந்தைகளின் கல்விக்கான தற்சார்பு நிறுவனங்களின் முயற்சிகள் இயன்ற வகையெல்லாம் ஊக்குவிக்கப்படும்.

......

வாழ்க்கை மதிப்பீட்டுக் கல்வி

8.4 அடிப்படை மதிப்பீடுகள் சீர்கேடுற்று வருதல் குறித்து வளர்ந்து வரும் கவலையும் சமூகத்தில் எதையெடுத்தாலும் குறை சொல்லும் தன்மை பெருகி வருவதும், சமூக தார்மிக மதிப்புகளை விதைப்பதில் கல்வியை ஒரு வலுவான கருவி யாக்கும் வகையில் பாடங்களில் மறுமாற்றங்கள் செய்ய வேண்டிய தேவையை கவனத்தின் மையத்துக்கு கொண்டு வந்திருக்கின்றன.

8.5 பண்பாட்டு அடிப்படையில் பன்முகங்கொண்ட நமது சமுதாயத்தில் கல்வியானது காலமும் இடமும் கடந்த பொது அறங்களை வளர்க்க வேண்டும். நமது மக்களின் ஒற்றுமை யையும் ஒருமைப்பாட்டையும் மையமாகக் கொள்ளவேண்டும். மதவெறி, மூடநம்பிக்கை, வன்முறை, விதியை நோதல், கண் மூடிப்பழக்கங்கள் ஆகியவற்றை ஒழித்துக் கட்டுவதில் அத்தகைய மதிப்பீட்டுக் கல்வி பேருதவியாயிருக்கும்.

8.6 இந்த எதிர்மறைப் பணி தவிர, மதிப்பீட்டுக்கல்வி ஆழ்ந்ததோர் நேர்மறை உள்ளடக்கம் கொண்டதுமாகும். அந்த உள்ளடக்கம் நமது மரபுகளையும் தேசிய இலக்குகளையும் உலகளாவிய இலக்குகளையும், உலகு தழுவிய பார்வையையும் அடித்தளமாகக் கொண்டது. கல்வி இந்த அம்சத்துக்கு முதல் மரியாதை தர வேண்டும்.

Lasertypeset at Capital Creations, New Delhi and printed at Beauty Prints, Delhi